KALKI 19.1.2003
ரூ. 6.00

# கல்கி

## கனிமொழி இலக்கிய வாரிசா...?

- கலைஞர் நேர்முகம்



**தேவி பாலா** A/C dts
4 காட்சிகள்

**சக்தி அபிராமி** A/C dts
3 காட்சிகள்

**சந்திரன்** A/C dts
4 காட்சிகள்

**அகஸ்தியா** dts
3 காட்சிகள்

**பிரார்த்தனா**
7&10 pm

**ரோகினி** A/C dts
4 காட்சிகள்

**ஆராதனா**
12 & 3 pm

Aparajeeth Films







அபராஜீத் பிலிம்ஸ் வழங்கும்

# மௌனம் பேசியதே dts

அமீர் யுவன்ஷங்கர்ராஜா ராம்ஜி சுரேஷ்அர்ஸ்

ராஜீவன் கேசவன்குட்டி

கணேஷ்ரகு கார்த்திக்ராதாகிருஷ்ணன் வெங்கிநாராயணன் ராஜன்ராதாகிருஷ்ணன்

Designed by Graphic Efx

www.mounampesiyadhe.com

# உள்ளே...

பக். 8


பக். 72


பக். 56


பக். 36


பக். 24


பக். 64


பக். 96

“பாட்டி, ''என்னை அழைத்துப் போக சோழன் வரும்'' என்று சொல்லி, 'சோழன் என்பது உயர்திணையா அல்லது அஃறிணையா? என்று கேட்கிறாள். உடனே சிறுவன் ''சோழன் உன் மகனாகவோ, பேரனாகவோ இருந்தால் உயர்திணை; அல்லது 'சோழன் பேருந்தாக' இருந்தால் அஃறிணை'' என்கிறான்.”

- கலைஞர் நேர்முகம்


பக். 4

# “ஊழல் செய்யாதே; உழவன் வயிற்றில் அடிக்காதே!”

-எழுச்சிகரமான இந்தக் கோஷம் சிதம்பரம் வீதிகளில் உணர்ச்சிப் பெருக்கோடு எதிரொலித்தது. விவசாயிகள் மட்டுமின்றி, நகர மக்களும் ஆதரவு தெரிவித்து ஊர்வலத்தில் சேர்ந்து கொண்டார்கள்.

“புதிய வீராணம் திட்டத்தில், டெண்டர் கொடுப்பதில் முறைகேடுகள் நடந்திருப்பதாக ‘கல்கி’யில் படித்ததும் எங்கள் ரத்தம் கொதித்தது. எப்பாடுபட்டாவது இந்த ஊழல் திட்டத்தை நிறுத்தியே ஆக வேண்டும் என்று போராட்டத்தில் இறங்கியுள்ளோம்”– புவனகிரியைச் சேர்ந்த ஜகதீசன் ஆவேசமாகப் பேசினார்.

தேசிய விவசாய சங்கம் ஏற்பாடு செய்திருந்த இப்பேரணி, 10.01.03 அன்று சிதம்பரம் வட்டாரத்தை ஒரு கலக்குக் கலக்கியது.

“காட்டுமன்னார்குடி பகுதி விவசாயிகள் ஆயிரம் ஆண்டுகளாக வீராணம் பாசனம் மூலம் விவசாயம் செய்து வருகிறார்கள். அந்தப் பாரம்பரிய உரிமையை நாங்கள் விட்டுக் கொடுக்க முடியாது. கோடைக் காலத்தில் ஒரு சொட்டுத் தண்ணீர் கூட வீராணம் ஏரியில் இருக்காது. சென்னைக்கு எப்படித் தண்ணீர் கொடுப்பதாம்!” கூலப்பாடி பகுதியைச் சேர்ந்த விவசாயி கோபால கிருஷ்ணன் கேள்வி எழுப்பினார்!



"இந்தத் திட்டத்துக்கு எண்ணூறு கோடி ரூபாய் செல வழிப்பது, அந்தத் தொகையைக் கடலில் கொட்டுவதற்குச் சமம்! இதன் காரணமாகவே இத்திட்டத்தில் ஆட்சியாளர் களுக்கு உள்நோக்கம் இருப்பதாகச் சந்தேகிக்க வேண்டி யிருக்கிறது!" என்றார்.

"மதிய உணவு போடறேன்றாங்க எங்களுக்கு... நாங்க கூலித் தொழிலாளிகளா இருக்கலாம். ஆனா எங்களுக்கும் மானம் மரியாதை உண்டு. உழைச்சு சாப்பிடறதைத் தான் கௌரவமா நினைக்கிறோம். சோத்துக்குப் பதில் அரிசி தரட்டும். நிவாரணப் பணிகள் ஆரம்பிச்சா கூலி வேலை செய்வோம்" என்று பொறிந்தார் பள்ளியிறுதி வரை படித்துள்ள மலர்க்கொடி.



• அழகிரி

'ஒரு டன் கரும்புக்கு ஆயிரம் ரூபாய் விலை தர வேண்டும், சம்பாப் பயிர் வாடி விட்டதால் நிதி நிவார ணம் தர வேண்டும்; பட்டினிச் சாவிலிருந்து விவசாயத் தொழிலாளர்களைக் காக்க முப்பது கிலோ அரிசி வழங்க வேண்டும்' போன்ற கோரிக்கைளும் பேரணியில் எழுப் பப்பட்டன. கோட்டாட்சியரிடம் மனு கொடுத் தார்கள்.

தேசிய விவசாயிகள் சங்கத்தின் பொதுச் செயலாளரும், தமிழ்நாடு காங்கிரஸ் பொதுச் செயலாள ருமான கே.எஸ். அழகிரி, (சிதம்பரம் தொகுதி முன்னாள் எம்.எல்.ஏ.) "விவசாயிகளின் குரல் கோட்டையை எட்ட வேண்டும். ஆட்சிப் பொறுப்பில் இருப்பவர்கள் வறட்டு கௌரவம் பாராமல் விவசாயிகள் நலனில் அக்கறை காட்ட வேண்டும். இல்லாவிட்டால் இவர்களுடைய வயிற்றெரிச்சல் ஆட்சியாளர்களைச் சும்மா விடாது!" என்று படு எமோஷனலாகிச் சூளுரைத்தார்!

— கௌசி

படங்கள்: ராஜன்




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 97

ஆசிரியர் : சீதா ரவி

ஆசிரியர் குழு : செ. ஏக்நாத் ராஜ், அனுராதா சேகர், ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு : எஸ். ஸ்டீஃபன், பி.ஆர். ராஜன்

தொலைபேசி : 2 234 5622 / 23 / 24
தொலைநகல் : 044 - 2 234 5621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு : kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு : subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு : info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

Bharathan Publications Private Limited, Kalki Buildings, 47-NP, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

> **முஸ்லிம்கள் ஒட்டு மொத்தமாக, தீவிரவாதத்திற்கு எதிராக ஒன்று திரள வேண்டும். குறிப்பாக, மதத்தின் பெயரைச் சொல்லி பெண்களின் உரிமைகளைப் பறிக்கும் காஷ்மீர் தீவிரவாதிகளை எதிர்த்துக் குரல் கொடுக்க வேண்டும்.**

காவி உடை; தலையில் விவேகானந்தர் கட்டு; நெற்றியில் சமயச் சின்னங்களுக்கு இடமில்லை; இவர்தான் சுவாமி அக்னிவேஷ். 'பந்துவா முக்தி மோர்ச்சா' என்ற சமூக தன்னார்வ தொண்டு நிறுவனத்தை நடத்தி வருகிறார். ஆர்ய சமாஜ் கொள்கைகளால் கவரப்பட்டு அதில் இணைந்தார். வேதங்கள், உபநிஷத்துக்கள் ஆகியவற்றில் கூறப் படும் உயர்ந்த தத்துவங்கள், நம்பிக்கைகள், கருத் துக்கள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு இயங்கும் ஆர்ய சமாஜ், விக்கிரக வழிபாட்டைக் கடுமையாக எதிர்க்கிறது. மனிதனால் உருவாக்கப் பட்ட ஜாதி பேதங்களை ஒழிக்கப் பாடுபடுகிறது. சென்னைக்கு விரிவுரை ஆற்ற வந்திருந்த சுவாமிஜியைச் சந்தித்தோம்.

*"ஹிந்துத்வா" என்ற வார்த்தைதான் இப்போது நமது நாட்டில் அதிகம் அடிபடும் வார்த்தை. அந்த வார்த்தைக்கு விதவிதமாக அர்த்தம் சொல்கிறார்கள். உங்கள் பார்வையில்...?*

**சுவாமி அக்னிவேஷ்:** "ஹிந்துத்வா" என்ற வார்த் தையை உருவாக்கியவர் ஆர்.எஸ்.எஸ். தலைவர் வீர் சாவர்க்கர்தான். ஹிந்துக்களின் அரசியல் அடை யாளத்தைக் குறிக்கத்தான் அந்தச் சொல்லை அவர் பயன்படுத்தினார். நம்மைப் பிரித்தாளும் தந்திரத்தின் ஒரு பகுதியாக, ஆர்.எஸ்.எஸ் மற்றும் முஸ்லீம் லீக் ஆகிய இயக்கங்கள் தோன்றி வளர்வதை மறைமுகமாக ஆங்கிலேயர்கள் ஊக்குவித்தார்



கள். அந்த அடிப்படையில்தான் முஸ்லிம் லீக் முஸ் லிம்களுக்கு என்ற தனி நாட்டையும், ஆர்.எஸ்.எஸ். ஹிந்துக்களுக்கு என்று ஹிந்து ராஷ்ட்ராவையும் கேட்டன. ஆர்.எஸ்.எஸ். பிரமுகர்கள் சர்வாதி காரி முஸோலினி ஆண்ட இத்தாலிக்குச் சென்று, அங்குள்ள ஆட்சி முறையை இந்தியாவுக் குப் பொருத்திப் பார்க்க முடியுமா, என்று ஆராய்ந்து வந்தார்கள். ஹிட்லரின் காட்டாட்சி ஆர்.எஸ்.எஸ் பிரமுகர்களை மிகவும் கவர்ந்தது-

*வாசகர்களே! ஹிந்துத்வா என்பது என்ன...? உங்கள் கருத்தை தபால் கார்டில் எழுதிப் போடுங்கள். பிர சுரம் செய்து பரிசு தரு கிறோம்.*

குறிப்பாக ஜெர்மானிய மக்களை யூதர்கள் என்ற சிறுபான்மையோருக்கு எதிராகத் திருப்பி, வன்மத்தை விதைத்து வெற்றி கண்டவர் ஹிட்லர். ஆர்.எஸ்.எஸ். தலைவர் எம்.எஸ். கோல்வாக்கர் எழுதியுள்ள ஒரு புத்தகத்தில், 'ஹிந்துராஷ்ட்ரா வருவதற்கு நாம் ரோல் மாடலாக எடுத்துக் கொள்ள வேண்டியது ஹிட்லரைத்தான்' என்று தெளிவாகவே சொல்லியிருக்கிறார். ஹிந்துக்கள் அல்லாதவர்கள் மீது துவேஷத்தை ஏவி விட்டு, பெரும்பான்மை சமூகத்தை அவர்களுக்கு எதிராகத் திருப்பி, நாட்டை, விட்டு விரட்டுவதுதான் அவர்களது வேலைத்திட்டம். இது ஹிட்லரின் தத்துவமே!

**சுவாமி அக்னிவேஷ்:** ஹிந்துத்வா சக்திகள் அரசு அதிகாரத்தில் இருந்தால்தான் அவர்கள் கோஷம் எடுபடும். பெரும்பான்மை மக்களின் மனத்தை மாசுபடுத்தி, சிறுபான்மை மக்களின் மீது வன்முறையை ஏவி, அதிகாரக் கட்டில் துணை போகிறது. நினைத்துப் பாருங்கள். குஜராத்தில் நடந்த வன்முறையின் போது, மத்தியில் வேறு ஒரு கட்சி ஆட்சியில் இருந்திருந்தால் மோடி அரசு நீக்கப்பட்டிருக்குமே! எனவே, பிரதமர் ஹிந்துக்கள் குறித்துப் பேசுவதெல்லாம் ஒரு முகமூடிதான்.

# ஹிட்லரின் தத்துவமே ஹிந்துத்வா!

*"குஜராத்தில் தேர்தல் முடிவுகளைப் பார்க்கும்போது ஹிந்துக்கள் கோஷத்துக்கு மக்கள் உடன்பட்டுப் போனது போல தெரிகிறதே!"*



*"சரி; அப்படியென்றால் ஹிந்துத்வா சக்திகளின் இந்த வேலைத் திட்டத்திலிருந்து தப்பிக்க முஸ்லிம்கள் என்ன செய்ய வேண்டும்?"*

"பெரும்பாலான முஸ்லிம்கள் வறுமைக் கோட்டுக்குக் கீழே இருப்பவர்கள். அந்த மதத்தில் உள்ள சில மதவாதிகளும், செல்வந்தர்களும், சுயநலத்திற்காக அவர்களைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். பெரும்பாலும் படிப்பறிவு இல்லாத அவர்கள், தவறான வழிகாட்டுதலுக்குப் பலியாகிறார்கள். முஸ்லிம்கள் ஒட்டு மொத்தமாக, தீவிர வாதத்திற்கு எதிராக ஒன்று திரள வேண்டும். குறிப்பாக, மதத்தின் பெயரைச் சொல்லி பெண்களின் உரிமைகளைப் பறிக்கும் காஷ்மீர் தீவிரவாதிகளை எதிர்த்துக் குரல் கொடுக்க வேண்டும்.

*"தமிழக அரசு கொண்டு வந்துள்ள மத மாற்றத் தடைச் சட்டத்தைப் பற்றி என்ன சொல்லுகிறீர்கள்?*

**சுவாமி அக்னிவேஷ்:** தேவையில்லாதது. கொடுங்கோன்மையானது. பா.ஜ.கவின் தயவைப் பெற ஜெயலலிதா கொண்டு வந்துள்ள சட்டம். மதம் மாறுவதைத் தடை செய்யும் அரசு, இந்த நாட்டில் படித்து விட்டு வெளிநாட்டுக்கு வேலைக்குப் போய், தனது குடியுரிமையை அந்த நாட்டுக்கே மாற்றிக் கொள்ளும் போக்கைத் தடுக்க முன் வருமா? மதம் மாறுவதை விட இது இன்னமும் மோசமான செயல்தானே!

**- ஸ்ரீநிவாசன்**

படங்கள்: மீடியா ராமு

# ஒரு ரூபாய் சிகிச்சை!

சுமார் பன்னிரண்டு வருடங்களுக்கு மேலாக ஆரவாரம் ஏதுமின்றி அமைதியாக நடந்து வருகிறது ஒரு சமூகப் பணி.

சென்னை தியாகராய நகரில் துரைசாமி பாலத்தருகே உள்ள டிஸ்பென்சரியில் தான் இந்தச் சமூகப் பணி.

"ஏழை - எளிய மக்கள், குறிப்பாகக் குடிசை வாழ் மக்களுக்கு இலவச மருத்துவ வசதி அளிக்கவே, இந்த டிஸ்பென்சரியை கோட்டா சீனிவாசய்யா அறக்கட்டளை நடத்துகிறது" என்கிறார் டாக்டர் குமார்.

சீனிவாசய்யா, பிள்ளைகளுக்குக் கொடுத்தது போக, மீதிச் சொத்தை தர்ம காரியங்களுக்கு என்று எழுதி வைத்ததால் கிடைத்த நன்மைகளில் இந்த இலவச மருத்துவப் பணியும் ஒன்று. நூற்றியெட்டு திவ்ய ஸ்தலங்களில் இருக்கும் கோயில்களுக்கு வரும் பக்தர்களுக்கு, அன்னதானம் இன்று வரை தொடர்கிறது.

"வருடத்திற்கு சுமார் மூன்று லட்சம் ரூபாய்க்கு மேல் மருந்துகள் வாங்க மட்டுமே செலவாகிறது" என்கிறார் குமார்.

பெரும்பாலும் ஆயுர்வேத மருந்துகளே. தேவை ஏற்பட்டால் அலோபதி மருந்துகளும், சிகிச்சையும் கூட அளிக்கப்படுகின்றன. கைவசம் மருந்து இல்லை என்றால், அதற்கான பணத்தை நோயாளியின் கையிலேயே கொடுத்து, மருந்தை வாங்கிக் கொள்ளச் செய்வதும் உண்டாம்!

இந்த டிஸ்பென்சரியில் ஒரு ரூபாய் மட்டுமே கட்டணமாக வசூலிக்கப்படுகிறது. மருந்து மாத்திரைகளுக்காக அல்ல. மருத்துவருக்கான சம்பளத்துக்குத்தான்!

சரும நோய்கள் தொண்ணூறு சதவிகிதம் குணமாகக் கூடியவை. அதனால் தானோ என்னவோ, நிறைய சரும நோயாளிகள் நம்பிக்கையுடன் இங்கே வருகிறார்கள். லூகோடர்மா எனப்படும் சரும நோய்க்கு, உப்பில்லாத கடும் பத்தியம் இருந்து, குணமான நபர்களைக் குறிப்பிட்டார் குமார்.

ஆர்த்ரைட்டிஸ், காஸ்ட்ரிக் பிரச்னைகள், நீரிழிவு ஆகிய நோய்களுக்குச் சிகிச்சை பெற வரும் நோயாளிகள் அதிகமாக இருக்கிறார்கள். பக்க விளைவுகள் ஏதும் இல்லாத, அலர்ஜியை உண்டாக்காத மருத்துவம் என்பதால், இந்தச் சிகிச்சைக்கு வருகிறார்கள் எனலாம்.

"ஏழை மக்களுக்கு உதவி செய்வது எனக்கு ஒரு வகையில் மன நிறைவு அளிக்கிறது" என்கிறார் நர்ஸ் விஜயலட்சுமி.

பெரியவர் சீனிவாசய்யாவின் விருப்பத்தை நிறைவேற்றுவதில், அறங்காவலர் மணவாளய்யா கண்ணும் கருத்துமாக இருக்கிறார்.

- சாருகேசி

படம் : யோகா



## 26-வது சென்னை புத்தகக் கண்காட்சியில்

# வர்த்தமானன் பதிப்பக நூல்கள்

9.1.2003 - 19.1.2003 - இடம் : காயிதே மில்லத் அரசினர் பெண்கள் கல்லூரி.

| | விலை* ரூபாய் |
|---|---|
| சிலப்பதிகாரம் (மூலமும் தெளிவுரையும்) - கையடக்கப்பதிப்பு | 40 |
| மணிமேகலை (மூலமும் தெளிவுரையும்) - கையடக்கப்பதிப்பு | 40 |
| வில்லிபாரதம் (மூலமும் தெளிவுரையும்) 4 தொகுதிகள் (இலவசம் : வில்லிபாரதத்தில் கண்ணன்) | 400 |
| பெரியபுராணம் (மூலமும் தெளிவுரையும்) - 6 தொகுதிகள் (இலவசம் : நாயன்மார் அவதாரத்தலங்கள்) | 400 |
| திருமந்திரம் (மூலமும் தெளிவுரையும்) - 3 தொகுதிகள் | 225 |
| திருவிளையாடற்புராணம் (மூலமும் தெளிவுரையும்) - 5 தொகுதிகள் | 300 |
| கந்தபுராணம் (மூலமும் தெளிவுரையும்) - 10 தொகுதிகள் | 600 |
| நாலாயிர திவ்வியப்பிரபந்தம் (மூலமும் தெளிவுரையும்) - 9 தொகுதிகள் | 600 |
| அரிச்சந்திர புராணம் (மூலமும் தெளிவுரையும்) | 90 |
| திருக்குறள் உரை விளக்கம் | 80 |
| சிவபுராணம் (மூலமும் விளக்கவுரையும்) | 70 |
| ஜெயகாந்தன் நாவல்கள் 5 தொகுதிகள் | 1080 |
| சீவகசிந்தாமணி ஓர் ஒப்பற்ற காப்பியம் | 90 |
| சிகரத்தைத் தொடுவோம் | 50 |
| திருமுறைத் தலங்கள் | 337 |
| ENG - ENG-TAMIL DICTIONARY (FREE : LETTER WRITING) | 200 |
| TIRUKKURAL WITH ENGLISH EXPLANATION | 270 |
| நாயன்மார் வரலாறு- கையடக்கப்பதிப்பு | 36 |
| கீதைப்பேருரை- கையடக்கப்பதிப்பு | 54 |
| பொன்னியின் செல்வன் 6 தொகுதிகள் - கையடக்கப்பதிப்பு | 150 |
| சிவகாமியின் சபதம் 4 தொகுதிகள்- கையடக்கப்பதிப்பு | 100 |
| பார்த்திபன் கனவு - கையடக்கப்பதிப்பு | 35 |
| வாழ்விக்க வந்த காந்தி - கையடக்கப்பதிப்பு | 36 |
| நாலடியார்(மூலமும் தெளிவுரையும்) - கையடக்கப்பதிப்பு | 14 |
| திருக்குறள் நாமக்கல் கவிஞர் உரையுடன்- கையடக்கப்பதிப்பு | 20 |
| இவ்வளவு தான் ஆங்கிலம் (FREE : SPEAKING COURSE) | 150 |

*10% புத்தகக் கண்காட்சி சிறப்புக் கழிவு போக

ஏவி.எம். நிறுவனத்துக்காக விக்ரமன் இயக்கி வரும் 'ப்ரியமான தோழி' படப் பிடிப்பில் மாதவனை மடக்கி, கேள்விகளை அடுக்கியது, சங்கரா கலை அறிவியல் கல்லூரியில் கம்ப்யூட்டர் சயின்ஸ் பயிலும், காயத்ரி சாரி, நித்யா, சாருவாசினி, செந்தில், ஏழுமலை, விஜய் உள்ளிட்ட ஆறுபேர் கூட்டணி! கூட்டணி பயம் கொஞ்சமும் இல்லாமல், மாதவன் தந்த சின்னச் சின்ன பதில்களில் சிரிப்பும், சிலாகிப்புமாய் களைகட்டியது நட்சத்திர சந்திப்பு.

**விஜய்:** 'அலைபாயுதே' மாதவனுக்கு, அதிரடி 'ரன்'பட மாதவனைப் பிடிச்சிருக்கா?

**மாதவன்:** 'அலை பாயுதே' மாதவன்தான் உண்மையான மாதவன். 'ரன்' மாதவன் வெறி பிடிச்சவன். பிடிச்சிருக்குன்னு சொல்ல முடியாது. அந்த மாதிரிக் காட்டினா கொஞ்சம் ஜாலியா இருக்கும்ன்னு டைரக்டர் நினைச்சார். சரி, சின்ன மாறுதலா இருக்கட்டுமேன்னு நானும் ஓகே. சொன்னேன்.

**சாருவாசினி:** மாதவன் வெஜிட்டேரியன்னு தெரியும், அப்படிப்பட்டவர் இப்படி, கத்தி, ரத்தம்னு இறங்கலாமா?

**மாதவன்:** ஐயோ! ரன் படத்துல எங்கேயுமே நான் கத்தி தூக்கலையே. பத்துப்பேரை தனி ஆளா அடிக்கிற மாதிரி பண்ணினேன். அது கொஞ்சம் டூ மச்சுன்னு சொன்னாங்க... ரத்தம் ஆறா ஓடினதை பீகார்ல கண் முன்னாடி பார்த்திருக்கேன். அது என்னை ரொம்ப பாதிச்ச விஷயம். அது

# 'அன்பே சிவம்' கமல் இரண்டாவது ஹீரோதானே...?

மாதிரி வயலன்ஸ் சினிமாவில் காட்டக் கூடாதுங்கிறது என்னோட எண்ணம். நிச்சயமா என் படங்களில் இரத்தம் இருக்காதுன்னு உறுதி தர்றேன்.

**நித்யா:** நிஜ வாழ்க்கையில் 'ரன்' மாதவன் மாதிரி முரட்டுக் காதலர்கள் இருக்காங்கன்னு நினைக்கிறீங்களா?

**மாதவன்:** எனக்குத் தெரிஞ்சவரைக்கும், ரியல் லைஃபில் சாப்டாக, க்யூட்டாக இருக்கிற ஆண்களைத்தான் பெண்களுக்குப் பிடிக்கும். கொஞ்சம் ரௌடி மாதிரி பிகேவ் பண்ணினா 'குட்பைடா மச்சான் போயிட்டுவா'ன்னு அனுப்பிடுவாங்க. இப்போ இருக்கிற பெண்களுக்கு ரொம்ப ஸ்டைலிஷ், பணம் சம்பாதிக்கிற பொறுப்பான ஆணைத்தான் பிடிக்கும்.

**ஏழுமலை:** மாதவனைப் பத்தி கிசுகிசுவே வர்றதில்லையே?

**மாதவன்:** அதான் இப்போ நீங்களே கிளப்பி விட்டுடுவீங்க போல இருக்கே... (எல்லோரும் கொல்லென்று சிரிக்கிறார்கள்.)

**காயத்ரி:** நம்மப் பத்தி கிசுகிசுவே வர்றதில்லைன்னு உங்


• சாரு, காயத்ரி, ஏழுமலை, விஜய், செந்தில், நித்யா



களுக்கு போரடிக்கலையா?

**மாதவன்:** கடவுளே! இப்படியெல்லாம் கேக்குறீங்க?! என் தொழில் மேலே நான் ரொம்ப வெறி பிடிச்சவன். படப்பிடிப்புத் தளத்துலே இருக்கும்போது என்னோட சீன், அதை எப்படி நல்லா பண்ணலாம், இதுல தான் கவனமெல்லாம் இருக்கும்.

**சாரு:** உங்களுக்கு வரும் ரசிகைகளின் கடிதங்களை உங்க மனைவி ரகசியமா படிக்கிறதுண்டா?

**மாதவன்:** எல்லாக் கடிதங்களையுமே அவங்கதான் படிச்சு எனக்குச் சொல்றாங்க. ஏன்னா, எனக்குத் தமிழ் எழுதப் படிக்கத் தெரியாது. ஐ லவ் யூ மாதவன், நான் உங்களைக் கல்யாணம் செய்துக்க ஆசைப்படுறேன், மாதிரியான ஜொள் கடிதங்களைப் படிச்சு, ஆரம்பத்தில் கொஞ்சம் பொறாமைப் பட்டாள். அப்புறம் போகப் போகப் பழகிப் போச்சு.

**நித்யா:** 'அன்பே சிவம்' படத்தில் ஏதோ வித்தியாசமாகப் பண்றீங்கன்னு தோணுது?

**மாதவன்:** நான் பண்ற ஒவ்வொரு படமும் இன்னொரு படம் மாதிரி இருக்கக் கூடாதுங்கிறதுல தெளிவா இருக்கேன். அதே மாதிரி, நம்ம தமிழ் ஆடியன்ஸ் ரசனையை குறைச்சு மதிப்பிடுற மாதிரி நாலு ஃபைட், நாலு பாட்டுன்னு தொடங்குகிற புராஜெக்ட்லே நான் கமிட்டாக விரும்பறதில்லே... முக்கியமா, நாப்பது ஐம்பது டான்ஸர்களோடு சேர்ந்து ஹீரோ ஹீரோயின் ஆடுற மாதிரியான ஸாங் கான்செப்ட்லே, எனக்குத் துளிகூட நம்பிக்கை கிடையாது. பாட்டுன்னா, பச்சை நிறமே மாதிரி இருக்கணும். இப்போ அன்பே சிவத்தில் நான் இதுவரைக்கும் பண்ணாத ஒரு கேரக்டர். சுத்தமா எனக்கு ரொமான்ஸ் கிடையாது. கொஞ்சம் ஆன்ட்டி ஹீரோன்னு கூடச் சொல்லலாம்.

**செந்தில்:** அன்பே சிவம் படத்தில் கமல் இரண்டாவது ஹீரோவாக நடிக்கிறதா கேள்விப்பட்டோம்?

**மாதவன்:** ரொம்பப் பொல்லாத கேள்வி இது. (சிரித்துக் கொண்டே) நோ கமெண்ட்ஸ்.

**விஜய்:** கமலோடு நடிக்கும் அனுபவம்?

**மாதவன்:** ரொம்ப த்ரில்... அவரை மாதிரி நடிகர் நம்ம நாட்டில் இல்லை. எக்ஸ்ட்ராடினரி, எக்ஸ்சம்பிளரி, டெடிக்கேட்டட் ஆர்ட்டிஸ்ட்.

**சாரு:** உங்களோட முதல் காதல், லேட்டஸ்ட் காதல் பத்திச் சொல்லுங்களேன்?

**மாதவன்:** ஸ்கூல் லைஃப்லே என்னோட மேத்ஸ் டீச்சரை லவ் பண்ணினேன். இயல்பாகவே எனக்கு மேத்ஸ் வராது. ஆனா மேத்ஸ்லே பாஸாகிட்டேன். போனாப் போகுதுன்னு அவங்கதான் சலுகை காட்டினாங்க. லேட்டஸ்ட் லவ் என்னோட குட்டி நாய் 'சிம்பா' மேலே.

**நித்யா:** கார்டூனிஸ்ட் மதன் உங்க பற்களை Bunny teethன்னு சொல்லி, அதுதான் உங்களோட ப்ளஸ்ன்னு சொன்னார் இல்லியா? அதனாலே அதை



இன்ஷூர் பண்ணற ஐடியா ஏதாவது இருக்கா?

**மாதவன்:** ஆமா! ஆமா! அதை இன்ஷூர் பண்ணினாத்தான் உண்டு! ஏன்னா என்னோடப் பல்லை வெச்சுத்தான் படமே கொடுக்குறாங்க...

**செந்தில்:** மாதவனுக்கு அரசியல் பிடிக்குமா?

**மாதவன்:** சுத்தமா பிடிக்காது.

**ஏழுமலை:** சமூக சேவை?

**மாதவன்:** அதுக்குன்னு ஒரு வயசு வரணும். அப்போதான் நிறைவான சமூக சேவை செய்ய, ஒரு மெண்டல் செட் அப் கிடைக்கும். நான் பண்ற சமூக சேவை எல்லாருக்கும் தெரியக் கூடாது.

**விஜய்:** படப்பிடிப்பு இல்லாத நேரத்தில் கால்ஃப் விளையாடப் போயிடுவீங்கன்னு படிச்சிருக்கோம்.... கால்ஃப் மைதானம் என்ற பெயரில், சென்னை மாதிரி ஒரு நெருக்கடியான நகரத்தில், நூற்றுக்கணக்கான ஏக்கர் நிலத்தை வீணடிக்கிற ஒரு விளையாட்டுன்னு உங்களுக்குத் தோணலியா?

**மாதவன்:** நல்ல கேள்விதான். ஆனால் எனக்கு அந்த விளையாட்டு ரொம்பப் பிடிச்சிருக்கு. பரந்த புல்வெளி. ரொம்ப அமைதி. அதிகபட்சம் நாலு பேர் மட்டும் சேர்ந்து விளையாடினால் போதும்... நிறைய நிம்மதி கிடைக்குது. அதுக்காக நிறைய இடம் வீணாகிறதை நான் நியாயப்படுத்த விரும்பலே.

**காயத்ரி:** உங்க மனைவி நடிக்கணும்னு ஆசைப்பட்டா ஓகே சொல்லுவீங்களா?

**மாதவன்:** நான் நிறைய முறை கேட்டுவிட்டேன். தயவு செய்து வந்துவிடு. எனக்கு ஹீரோயின் பிரச்னையே இருக்காதுன்னு சொல்லிப் பார்த்தேன். ம்ஹூம்... பிடி கொடுக்கலே.

**நித்யா:** ஆண்மைக்கு எது அழகுன்னு நினைக்கிறீங்க?

**மாதவன்:** ஒரே ஒரு மனைவிக்கு உண்மையா வாழறது. உலகத்துலே பெரிய மஸ்குலின் ஆட்கள்ன்னு வர்ணிக்கப்படுற பல கிரேட் ஆம்பிளைகள் எல்லாம் இப்படி நேர்மையா வாழ்ந்தவங்க, வாழ்ந்துகிட்டு இருக்கறவங்க. ஹாலிவுட்டில் மெல்கிப்சன் மாதிரி ஒரு அழகு, கம்பீரம், யாருக்கும் இல்லை. அவர் ஒரு நல்ல உதாரணம்.

**ஏழுமலை:** நீங்க நடிச்ச ஹிட்டான எல்லாப் படத்துலேயேயும் ஒரு பீச் சாங் இருக்கே... என்ன செண்டிமெண்ட்டா?

**மாதவன்:** நீங்க சொன்ன பிறகுதான் எனக்கே தெரியுது. தப்பித் தவறி இதை சினிமா டிஸ்ட்ரிபியூட்டர்ஸ் காதுல போட்டுடாதீங்க... அப்புறம் நான் தொலைந்தேன்.

**காயத்ரி:** உங்களுக்குப் போட்டி ஹீரோ யாருன்னு நினைக்கிறீங்க?

**மாதவன்:** நான்தான்.

**எல்லோரும்:** கலக்கிட்டீங்க... (கை குலுக்கி, ஆட்டோகிராப் வாங்கி, விடை பெறுகிறார்கள்.)

தொகுப்பு: **ஜெய்**

படங்கள்: **டிஜிட்டல் சண்முகம்**

# ஹிந்துத்வா வெறியாட்டம், பாகிஸ்தானுக்குக் கொண்டாட்டம்!

ஹிந்துஸ்தானி – கர்நாடக இசைகளின் சங்கம நிகழ்ச்சி ஒன்றைக் கேட்ட தமிழக ஆளுனர் ராமமோகன்ராவ் வெளியிட்டிருக்கும் சிந்தனை இந்த நாட்டின் கவனத்துக்கு உரியது: "இதுவல்லவா மெய்யான ஹிந்துத்வா; பார்க்கப் போனால், இது ஹிந்துத்வாவைக் காட்டிலும் உயர்ந்ததான பாரதத்துவம்" என்று பேசினார் ராமமோகன்ராவ்.

கலைஞர்கள் தனித்தன்மை வாய்ந்தவர்கள். அந்தத் தனித்தன்மையை விட்டுக் கொடுக்காமல் இருவேறு துருவக் கலைஞர்கள் ஒரு நிகழ்ச்சியை இணைந்தும் இழைந்தும் வழங்குவது எப்படிச் சாத்தியமாகிறது?.... தங்கள் கலைகளிடையே அமைந்துள்ள ஒற்றுமை – வேற்றுமைகளை உணர்வதாலும், அழகுபட நிகழ்ச்சியை வழங்கும் இலக்கில் இருவரும் ஒன்றியிருப்பதாலும் வெற்றி கிடைக்கிறது.

ஆனால், இன்று 'ஹிந்துத்வா' என்று வி.எச்.பி – ஆர்.எஸ்.எஸ்காரர்கள் முழங்க, பி.ஜே.பிக்காரர்கள் ஒத்து ஊதுகிற விஷயம், இந்திய மக்களை இணைப்பதற்குப் பதிலாகப் பிரித்தும் பிளவுபடுத்தியும் வருகிறது.

ஹிந்துத்வாவின் செயல் திட்டத்தில் இஸ்லாமியர்களுக்கு இடமில்லை என்பதையும், இந்த ஹிந்துத்வ மார்க்கத்தை எதிர்ப்போர் தாட்சண்யமின்றி 'அப்புறப்படுத்தப்படுவர்' என்பதையும், ஆணித்தரமாகச் சொல்லி வரு



**கல்கி**




2003 ஜனவரி 19
சித்ரபானு தை 5
மலர் : 61
இதழ் : 25




கிறார்கள், இந்தப் பிரித்தாளும் சூழ்ச்சிக்காரர்கள். இதைத் தட்டிக் கேட்கவோ, எதிர்க்கவோ திராணியின்றி, பிரதமரும் துணைப் பிரதமரும் பெரும்பாலும் பேசாமல் இருக்கிறார்கள்.

அயோத்தியில் ராமர் கோயில் கட்டும் பிடிவாதம் இந்த ஹிந்துத்வா செயல் திட்டத்தின் முக்கிய அம்சம். இதற்காக அரசாங்கத்தை பிளாக்மெயில் செய்யவும் இந்த ஹிந்துத்வா 'சாதுக்கள்' தயங்குவதில்லை. வோட்டுக்கள் பெறுவதற்கு இந்த ஹிந்துத்வ ஆதரவு அமைப்புகளைப் பயன் படுத்திக் கொள்ளும் பி.ஜே.பி, வேறு வழியின்றி அவர்கள் இழுத்த இழுப்புக்கு வளைந்து கொடுத்து வந்திருக்கிறது.

அப்படியும் ராமர் கோயில் பணியை நினைத்தபடி நிறைவேற்ற இயலவில்லை என்பதால், இப்போது எதிர்க்கட்சிகளையும் இந்த 'ஹிந்துத்வா' வலைக்குள் இழுத்துப் போடும் முயற்சியில் இறங்கியிருக்கிறார் விச்வ ஹிந்து பரிஷத் தலைவர் தொகாடியா.

"காங்கிரஸ் கட்சி, அயோத்தியில் ராமர் கோயில் கட்டும் திட்டத்துக்கு ஆதரவு தர வேண்டும். அவ்வாறு ஆதரவு அளித்தால், தேர்தல் களத்தில் பி.ஜே.பியை ஆதரிக்காமல் இருக்கவும் தயார்" என்கிறார் தொகாடியா.

இந்த அபாயகரமான பேரத்தைக் கண்டு மயங்கிவிடாமல் எச்சரிக்கையாக பதில் சொல்லி யிருக்கிறார் காங்கிரஸ் தலைவர் திக்விஜய் சிங்:

"அயோத்தியில் ராமர் கோயில் கட்டுவதற்கு ஆட்சேபணையே இல்லை... ஆனால், அங்கே ஏற்கெனவே எழுப்பப்பட்ட இஸ்லாமிய நினைவுச் சின்னத்துக்குப் பாதிப்பு இல்லாமலும், பிற மத சகோதரர்களின் உணர்வுகளைப் புண்படுத்தாமலும் திட்டம் நிறைவேற்றப்பட வேண்டும்."

– கொம்பு சீவும் தொகாடியாவையே கொந்தி எறியும் தொனியில் திக்விஜய்சிங் பேசியிருப்பது பாராட்டுக்குரியதே. எனினும் காங்கிரஸ் இது விஷயத்தில் எவ்வளவு எச்சரிக்கையாக இருந்தாலும் போதாது.

வோட்டுகள் வாங்க வேண்டுமென்பதற்காக ஹிந்துத்வாவின் ஒரு மிதமான வடிவத்தை




காங்கிரஸ் ஆதரிக்க ஆரம்பித்திருப்பது நல்லதற்கல்ல. குஜராத் தேர்தலின் போது காங்கிரஸ் மேற்கொண்ட நிலை, இந்த மித ஹிந்துத்வா நிலைதான்! அதை இதர மாநிலத் தேர்தல்களுக்கும் விரிவுபடுத்த காங்கிரஸ் முற்படுவது அதைவிடப் பரிதாபம்.

வி.எச்.பி. அன்ட் கோவுடைய தீவிர ஹிந்துத்வா எத்தனைக்கெத்தனை ஆபத்தானதோ, அத்தனைக்கத்தனை காங்கிரஸின் நீர்த்துப்போன ஹிந்துத்வாவும் ஆபத்தானதே.

ஏற்கெனவே புண்பட்டுப்போய் அச்சத்தினாலும் அவநம்பிக்கையினாலும் எதிர்ப்புணர்வு நிரம்பிக் காணப்படும் இஸ்லாமிய மதத்தினர், பி.ஜே.பி, காங்கிரஸ் – இரண்டிடமும் நம்பிக்கை இழந்து, இந்தியாவில் தங்கள் குரல் இனி எடுபடாது என்ற முடிவுக்கு வந்துவிடுவார்கள். சிறுபான்மையினரான தங்கள் உரிமைகளையும் உணர்வுகளையும் எந்தக் கட்சியும் மதியாது என்ற நினைப்புடன், அண்டை நாட்டிலிருந்து ஊடுருவி வரும் அபாயகரமான பயங்கரவாத, தீவிரவாத சக்திகளுடன் தங்களை இணைத்துக் கொண்டு இயங்க ஆரம்பிப்பார்கள். இப்போது சிறிய அளவில் ஆங்காங்கே நடந்துவரும் நிகழ்வுகள், பெரிய அளவில் காட்டுத் தீ போல் பரவிவிடும். அரசிடமும் அரசியல் அமைப்பிடமும் நம்பிக்கை இழந்த மக்களை, மதத்தின் பெயரால் வளைத்துப் போட்டுக் கொண்டு பாகிஸ்தான் தனது அராஜகப்போக்கைப் பெருக்கிக் கொள்ளும். 'ஊர் இரண்டுபட்டால் கூத்தாடிக்குக் கொண்டாட்டம்' என்ற பழமொழிக்கு வாழும் சாட்சியாகிவிடும் பாகிஸ்தானின் நிலையும் போக்கும்!

வருகின்ற மாநிலத் தேர்தல்களிலும் சரி, நாடாளுமன்றத் தேர்தலிலும் சரி, காங்கிரஸின் நிலைப்பாடு, ஹிந்துத்வா எதிர்ப்பு நிலைப்பாடாக இருந்தால் போதாது. தமிழக ஆளுனர் குறிப்பிட்ட ஆக்கபூர்வமான பாரதத்வா நிலைப்பாட்டை காங்கிரஸ் மேற்கொள்ள வேண்டும். தேசத்தை ஒருங்கிணைத்து, அதன் மக்களை உணர்வுபூர்வமாக ஒன்றுபடுத்தி, ஒளிமயமான இந்தியாவை நோக்கி உழைப்பதற்கான இலக்கையும் உற்சாகத்தையும் இந்த நிலைப்பாடு அளிக்கும்.

கட்சியை மட்டுமின்றி நாட்டையும் முன்னேற்றிய நற்பெயரையும் திருப்தியையும் அடைவதற்கு காங்கிரஸ் கட்சி மனத்தில் உறுதி கொள்ளட்டும். ○



டாடா ஓபன் டென்னிஸ் போட்டி நடந்த நுங்கம்பாக்கம் டென்னிஸ் ஸ்டேடியமே திமிலோகப்பட்டதற்கு அந்த ஈரெட்டு யுவதிகளும் காரணம்! விளையாட்டு வீரர்களையும், பார்வையாளர்களையும் உற்சாகப்படுத்த, இந்த இளம் பெண்கள் தினமும் ஸ்டேடியத்துக்கு வந்தனர்.

நீலமும், வெண்மையும் கலந்த உடை (ஜெய்ப்பூரிலிருந்து பிரத்யேகமாக வரவழைக்கப்பட்ட துணியில் தைக்கப்பட்டதாம்) காலில் விலையுயர்ந்த ஷூ, கைகளில் ஜிகினா பறக்கும் செண்டுகள், முகத்தில் வண்ணத் தூரிகைக் கோலங்கள், என்று போட்டி நடந்த அத்தனை நாட்களும் இளமையில் கலக்கிய இவர்கள் அனைவரும் மாணவிகள்!

# சியர் லீடர்ஸ்!

"மேற்கத்திய நடனம் தெரிந்த ஜாலியான மாணவிகளைத் தேர்ந்தெடுத்து, ஸ்டெப்ஸ் சொல்லிக்கொடுத்து களத்தில் இறக்கினோம். ஆடும் வீரர்களை உற்சாகப்படுத்துவதே இதன் நோக்கம். இவர்களை 'சியர் லீடார்ஸ்' என்று மேலை நாடுகளில் சொல்வார்கள்" என்கிறார் இந்த ஏற்பாட்டினைச் செய்த 'விங்ஸ்' ஈவன்ட் மேனேஜ்மென்ட் நிறுவனத்தின் வின்செண்ட்.

"ப்ரண்ட்ஸ்களோட ஜாலியாக 'சியர் அப்' பண்றதுல ஒரு திரில்லே இருக்கு தெரியுமா? வந்த கூட்டத்தை உற்சாகப்படுத்தவும், ப்ளேயர்ஸை குஷிப்படுத்தவும் நாங்க ஆடற டான்ஸ் எங்களுக்கு நல்ல எக்ஸர்சைஸ்" என்கிறார்கள் ப்ரீதியும், ஐஸ்வர்யாவும்.

வந்த ப்ளேயர்ஸ் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு 'நிக் நேம்' வைத்தார்களாம். தைவான் வீரர் ஸ்ரீசாப்பானுக்கு இவர்கள் வைத்த பெயர் "தைகர்"

என்ன மொழி யோடா!

- மௌலி

படங்கள் : கிளிக் ரவி



கடந்த வாரம் நடந்த நாய் கண்காட்சியில் பங்கேற்ற சில சென்னை நகர அழகர்கள், அழகிகள்!

படங்கள் : கிளிக் ரவி

# நாய்களில் இத்தனை வகைகளா?




பிரம்மாண்டமான




26-வது சென்னை

# புத்தகக் கண்காட்சி

## ஜனவரி – 9 – ஆம் தேதி முதல் 19 வரை

இடம் : காயிதே மில்லத் அரசினர் பெண்கள் கல்லூரி, சென்னை-2

நேரம் :
வேலை நாட்களில் – மாலை 2.30 முதல் இரவு 9.00 வரை
10-1-2003, 13-1-2003 தேதிகளில்
விடுமுறை நாட்களில் – காலை 11.00 மணி முதல் இரவு 9.00 வரை
11,12,14,15,16,17,18,19 தேதிகளில்

## நுழைவுக் கட்டணம் ரூ.2.00 மட்டும்

தினமும் மாலை 6.30 முதல் 8.00 வரை – சிறப்புப் பேச்சாளர்கள்

| தேதி | தலைப்பு | பேச்சாளர் |
|---|---|---|
| 10.1.2003 | தமிழ்க்காவல் | A.I. இரவி ஆறுமுகம் IPS |
| 11.1.2003 | 'நிதி' மிகுந்தவர் தமிழைத் தாரீர் | ப. சிதம்பரம் (முன்னாள் மத்திய அமைச்சர்) |
| 12.1.2003 | மெல்லத் தமிழ் இனி! | சாலமன் பாப்பையா |
| 13.1.2003 | உளி பெற்ற வலியில் சிற்பங்கள் | கணபதி ஸ்தபதி |
| 14.1.2003 | தூரிகையும் தமிழ்க் காரிகையும் | மதன் |
| 15.1.2003 | அன்னைத் தமிழின் ஆயுள் பாவம் | Dr. K.N. சரஸ்வதி |
| 16.1.2003 | தமிழ் எனும் தளராத நம்பிக்கை | Dr. M.S. உதயமூர்த்தி |
| 17.1.2003 | சிரிக்காமலும் சிந்திக்கலாம் | S.Ve. சேகர் |
| 18.1.2003 | கலைத் தமிழ் – கலையாத தமிழ் | நடிகர் கமல்ஹாசன் |
| 19.1.2003 | புதிதாய்ப் பூக்கும் தமிழ்ப் பூக்கள் | மு. மேத்தா |

Programmes Sponsored by - Oxford University Press

அறுசுவை அரசின் சிற்றுண்டி உண்டு

**THE BOOK SELLERS' AND PUBLISHERS' ASSOCIATION OF SOUTH INDIA,**

உதடுகளால்
நீ பேசியதை விடவும்
உன் உதடுகள்
என்னிடம் நிறைய
பேசியிருக்கின்றன
நீ வார்த்தை
நான் மவுனம்
தழுவும் போது
நழுவி விடுகிறது
காதல் மொழி

இரவு ஒரு வீடு. இருளால் பூட்டப்பட்ட இந்த வீட்டைப் பகல் வந்து திறக்கிறது. எனினும், வைகறை ஏற்றும் இந்தச் சூரிய விளக்கை, சில நிமிடங்களுக்கு மேல் நம்மால் உற்றுப் பார்க்க இயலாது.

இரவு ஒரு விசிறி. கறுப்பு வேர்வைகளால் மூடப்பட்ட நமது இதயத்தை அது விசிறி விடுகிறது. எனினும், உள்ளெழும் புழுக்கத்தை இரட்டிப்பாக்குகிறது.

இரவு ஓர் அடகுக்கடை. நம்மை நாமே மீட்க முடியாமல் மூழ்கி விடுகிற துயரத்தை அது கொண்டு தருகிறது.

காதல்; இரவைத் திறக்கும் பகல். காதல்; இதய வேர்வையைத் துடைக்கும் விசிறி. காதல்; கண்ணீர் வட்டிகளைச் சேகரிக்கும்

# காதல் பிசாசே! -12

அடகுக் கடை.

எனக்கென்றொரு
இதயம்
எங்கிருந்தது?
நம் இருவருக்கிடையில்

ஓர் இதயம் நழுவி மறு இதயம் நுழைகிற மேடைப்பாடல் ஒருவிதமென்றால், இதயமே அற்றுப் போனதாய் அறிவிக்கும் இக்கவிதை இன்னொருவிதம். போல்வெர்லேன் எழுதியது. பிரஞ்சு இலக்கியத்தின் மிக முக்கிய மானவராகக் கருதப்படுகிறவர். ராம்போவும் போல்வெர்லேனும் இரண்டு கரங்களால் ஒரு கவிதையை பிரசவிக்கும் ஆண் தாய்கள். இதய உணர்வுகளின் மிக நெருங்கிய மொழி வடிவம் என இவர்களது கவிதைகள் சிலாகிக்கப்படுகின்றன. இதயம் கனமாகும் போது, கவிதை மெலிதான அழகை இறக்கி வைக்கிறது. இறக்கி வைக்கப்படும் கவிதையின் கனமோ இதயத்தைவிட பாரமாகிறது. ரோஜா மலர்களை அனுப்பிய காதலியைப் பற்றி பக்கம் பக்கமாய் கவிதை மடல் தீட்டும்

போல்வெர்லேன் ஒரு காதல் உபாசகன்.

ரோஜா இதழ்களைப் போல் மென்மையும் வசீகரமும் கொண்டன காதலியின் நினைவுகள். மூன்றாண்டு கழித்த பிறகு அவரிடம் நினைவுகளிருந்தன. எனினும், அவள் தந்து விட்டுப் போன மலருமில்லை. அவள் தங்கியிருந்த இதயமுமில்லை.

நினைவுகள் புகழ் தருவதாகவும் நீடித்த பெருமை கொண்டதாகவும் எழுதியவர், இறுதியில் நினைவுகளைச் சேகரிக்க 'எனக்கென்றொரு இதயம் எங்கிருக்கிறது?' என முடிக்கிறார். இரவைத் திறக்கிற பகல் போல, பகலின் கதவும் இரவால் மூடப்படுகிறது. உறக்கம் வராத பின்னிரவுப் பொழுதுகளோடு இறங்கி விழுகிறது போல்வெர்லேன் எழுதுகோல்.

பத்தொன்பதாம் நூற்றாண்டு, வசன கவிதைகளின் வசந்த காலம். பிரதேசமெங்கும் ஒரு மகாகவி முகிழ்த்த காலம். அவரைப் (அவர்களைப்) போலவே இன்னொரு பிரஞ்சுக் கவி. தமிழில் பாரதி போல் பிரஞ்சில் இவர் வசன கவிதைகளை பிரபலமாக்கினார். ஷார்ல் போதலேர், நீலம் பாரித்த மேகத்தை மயிலிறகால் கோதி விடும் அற்புதமான கவிஞர். 'எப்போதும் கவிஞனாயிரு; உரைநடை எழுதும் போதும்' என்கிறார். கவிதையையே உரைநடையாக எழுதுகிறவர்களை இவருக்குத் தெரிந்திருக்காது.

இயற்கை, மனிதனுக்கு என்னென்ன தருகிறது. காற்று, உணவு, உடை, கூடு, என நிறைய அடுக்கலாம். ஆனாலும் அவை அனைத்தையும் தாண்டி, காதலென்கிற ஓர் அற்புதத்தை வழங்குகிறது. காதல் இயற்கை தருகிற தாய்ப்பால். அண்டமெங்கும் அதன் வீச்சம் பரவியிருக்கிறது. உணவில் கலந்திருக்கிறது. உடையில் நூலோடு நூலாக இணைந்திருக்கிறது. கூட்டில் வசிக்கிறது. மூச்சில் திரிகிறது. எல்லாமுமாய் வாழ்கிற காதல், எங்கிருந்து வந்தது என்பது யாருக்கும் தெரியாது. மூலத்தைத் தேடும் முயற்சியில் ஹார்ல் போதலேர் எழுதுகிறார்.

## யுகபாரதி

*நீ*
*எங்கிருந்து வருகிறாய்*
*ஆகாயத்திலிருந்தா?*
*ஆழத்திலிருந்தா?*

*தெய்வீகமும்*
*கொடூரமும் நிரம்பியது*
*உன் பார்வை*
*தீதும் நன்றும்*
*ததும்பும் உன் பார்வை*
*மதுவுக்கு நிகரானது*
*...............................*
*அமிழ்தைப் போன்றது*
*உனது முத்தம்*
*முத்தத்தைப் பிரசவிக்கும்*
*உனது இதழ்கள்*
*அமுது வழியும் கலயத்தின்*
*கைப்பிடிகள்*

அமுதக் கலயத்தின் கைப்பிடியாம் இதழ்கள். அமுதம் முத்தங்களாம். கலயத்தை மிக மிக எச்சரிக்

கையோடுதான் கையாள வேண்டும். பொங்கிப் பிரவகிக்கும் உணர்வுகள் மேலிட, பொசுக்கென்று தூக்கி இருத்தினால் கவிழ்ந்துவிடும். அல்லது உடைந்து விடும்.

இந்த இதழ்கள் பேசுதற்கு மட்டுமே அல்ல. முத்தமிடவும் முத்தத்தைப் பெறவும் தான். முத்தம், வார்த்தை போல ஒரு போதும் உதிராது. உள்ளத்தில் போய் தங்கிக் கொள்ளும். முத்தத்தில் பலவகை. உச்சியிலிடும் முத்தம் உன்னதமானது; நெற்றியில் தரும் முத்தம் நெகிழ்வானது. உதட்டில் அரங்கேறும் முத்தமோ உண்மையானது. இந்த உண்மையைப் பிரஞ்சுக்காரர்களே உலகிற்கு உணர்த்தினர் என்பார்கள். முத்தக் கலயங்கள் உடைந்தாலும், இதயப் பசைகொண்டு ஒட்டி விடலாம். கையளவு இதயத்தை கைப்பிடிகளால் கௌரவிக்கும் ஷார்ல் போதலேர், எந்த இதழ்களால் உதிர்ந்தாரோ தெரியவில்லை.

இதுயென்ன பிரமாதம்? இதுபோல் ஆயிரம் இருக்கிறது தமிழில், என்போர் இதழ்களை மௌனத்தால் ஆசிர்வதிப்போம். அந்தக் கேள்வியின் சூடும் ஆசைகளின் கதகதப்பும் தமிழின் ஆணிவேரை அசைக்க வல்லது. கலயம் நிறைய பருக்கையிருந்தாலும் பதத்திற்கு ஒன்று போதும். அந்தப் பருக்கை நீலமணியின் கவிதை கருப்பை. மரபு, புதிது எதிலும் தன் அடையாளத்தைத் தொலைக்காத கவிதைகள் இவருடையவை.



''வீட்டை விட்டே வெளியே வராத அந்தப் பெண்ணை எப்படி காதலித்தாய்?''
''எல்லாம் அந்த ஒற்றைச் சாளர முறையில்தான்.''
— எஸ். மோகன்

கண்ணோடு கண்சேர்ந்து
        நெய்யும் போது
கருத்தோசை வாய்ப்பேச்சேன்?
        தேவை இல்லை
பெண் ஐந்து சுகவஸ்து,
        கண்டு கேட்டு
பிணைந்துற்று உண்டுயிர்த்து
        மகிழும் பிராணி...
.......................................
.......................................
அண்மையிலே குளிர்ச்சிதரும்
        இவளை விட்டு
அகன்றாலோ சுடும் இவள் ஓர்
        தலைகீழ் தீதான்.

பெண்ணைத் தலைகீழ் தீ என்பது மரபுக் கலயத்தைக் கவிழ்க்கும் புதுமைக்கரம். வார்த்தைகளை அடுக்கி அடுக்கி, கவிதை செய்யாமல் கருத்தை நெருக்கிச் செய்கிறார் கவிதை. தொடுத்துக் கொண்டே வருகிற உவமை மலர்கள், இறுதியில் முடிச்சுப்போல வந்து நிற்கிறது. நிற்குமிடத்தில் தலைகீழ் தீ. வெற்று உவமைகள் வலுவற்றன. நீலமணியின் உவமைகளோ அற்புதத்தை நிகழ்த்தும் பதிவுகள். இன்னொரு கவிதையில் இப்படி எழுதுகிறார். இதுவும் அமுதக் கலயத்தை நினைவூட்டும் நிகழ்வு

அமுதகடம் சுமப்பவளே
        நாளும் என்றன்
அகலத்தில் துயில்கின்ற
        நெடில்நீ அன்றோ
சமயவனச் சடங்கிற்குப்
        பிறந்தோம். அவை
சந்தித்து விட்டால் ஏழ்
        நிறங்கள் உண்டா?
இமைக்கதவை இறுதிமுறை
        சாத்தி விட்டால்
எட்டுச்சாண் சதை நடன
        அழகோ யாதா?

இதழ்களை அமுதக் கலயத்தின் கைப்பிடி என்றார் போதலேர். நீலமணியோ அமுதக் கடம் சுமப்பவள் என்கிறார். இமைக் கதவை இறுதிமுறை சாத்திவிட்டால், சதை நடனத்தின் அழகு ஓய்ந்து விடாதா என வினவுகிறார். ஓயாத அழகு நடனத்தின் உச்சம். வைகறை ஏற்றும் இச் சூரிய விளக்கை சில நிமிடங்களுக்கு மேல் நம்மால் உற்றுப் பார்க்க இயலாது.

(தொடரும்)




# OM

## THE ULTIMATE MEDIUM TO REACH GOD

**GOD**- the word derived from the universal law of Generation, Operation and Destruction. And this constitution of eternity has been considered as **"The Trinity"** in all major world religions.

According to Indian Wisdom, the creator Lord Brahma resides in the mantra of **"A"**, the operator Lord Vishnu resides in **"U"**, the destructor of all evils Lord Siva resides in **"M"** and **"AUM"** is the trinity.

**AUM** is defined as **"Kanpati"** in Sanskrit. Pati means head of the family and Kana is the sound. So **"AUM"** is the head of all sounds in the Universe.

The modern science depicts the whole macrocosm originated from a big bang joining electrons, neutrons and protons to form the matter. In Indian tradition **"Beeja Aksharas"** of **'Aa'**, **'Uu"**, **'Mm"** joined together to begin the creation. So activating **"AUM"** on human body-the microcosm is invoking the macrocosm, the universe itself.

Courtesy :Vedic-India Society

'சின்னத் தாயி' படம் மூலம் பட்டி தொட்டியெல்லாம் பரபரப்பை ஏற்படுத்திய இயக்குனர் கணேசராஜ், இப்போது 'பரணி' படத்தை இயக்கித் தயாரித்திருக்கிறார்.

ஏன் இவ்வளவு இடைவெளி?



❝தமிழ் சினிமாவில் இப்ப எழுத்தாளர்களே இல்லை. அந்த இடத்துல நடிகன் உட்கார்ந்துட்டிருக்கான். இதை மாற்றினாதான் தமிழ் சினிமாவை முன்னெடுத்துச் செல்ல முடியும்.❞



"நானேதான் காரணம். ஒரு படைப்பாளனுக்குப் படைப்பு சுதந்திரம் வேணும். தமிழ் சினிமாவில் அதைத் தேட வேண்டியிருக்கு. ஓர் இயக்குனர் நடிகர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டிய நிலைமை போய், நடிகர்கள் இயக்குனர்களைத் தீர்மானிக்கிற மோசமான நிலைக்குத் தமிழ் சினிமாக் களம் தள்ளப்பட்டிருக்கு. இந்தச் சூழல்ல படைப்பாளனுக்கு அங்கீகாரம் இல்லை. இங்க சினிமா பண்றதுக்கு ஒரு மேஸ்திரி போதுமானதாக இருக்கு. இயக்குனர் தேவையில்லை.

அடூர் கோபாலகிருஷ்ணனுக்கோ, அரவிந்தனுக்கோ, ஜான் ஆபிரஹாமுக்கோ இருக்கிற, இருந்த மாதிரியான நல்ல சினிமாவை முன்னெடுத்துச் செல்கிற டீம் இங்க இல்லை. இதுக்குப் பார்வையாளர்களைக் குற்றம் சொல்ல முடியாது. அவங்க தங்கள் நிலையில சரியாத்தான் இருக்காங்க. நல்ல கதையம்சம் உள்ள சினிமாவையும், மோசமான சினிமாவையும் பிரித்துப் பார்க்கிறவங்களா இருக்காங்க.

ஒரு சப்ஜெக்ட் படம் வெற்றி பெற்றதுன்னா, அதே மாதிரி பத்துப் படங்கள் தொடர்ந்து வந்து தோல்வியைத் தழுவுது. ஒரு படத்தைப் பார்த்து இன்னொண்ணுன்னு

சொன்னா சினிமாவில் சினிமா பண்ணுற தைத்தான் இது காட்டுது. இதை உதார ணமா எடுத்தா பல டைரக்டர்களுக்குப் படைப்பாளிங்கற பொய்முகம்தான் இருக்கு. இந்த முகங்களை அடையாளம் காணணும்.

இன்னைக்கு இருக்கிற நடிகர்களைச் சொல் லணும்னா, ஒரு படம் இயக் குனரால் வெற்றி பெற்ற உடனேயே, அந்த ஹீரோ மனசள வுல ஒரு எம்.ஜி.ஆராகவோ, சிவாஜி யாகவோ கற்பனை பண்ண ஆரம்பிச்சிட றான். இந்தக் கற்பனை இயற்கைதான்னு சொன்னாலும், அவன் மனசுல நாற்காலி ஆசையிலிருந்து எல்லா ஆசையும் சேர்ந்து உட்கார்ந்திடுது. அவனோட இரண்டா வது படத்துல, டைரக்டர் கதை சொல் றதுக்குப் பதிலா, ஹீரோ கதை சொல்ல ஆரம்பிச்சிடறான். 'சார், வயசான அம் மாவுக்கு ஹெல்ப் பண்ற மாதிரி சீன் வையுங்க. மக்களுக்காகப் போராடற மாதிரி சீன் வையுங்கங்கறான். இதுதான் நிலை. அரிதாரம் பூசற அத்தனை நடி கனுக்குள்ளும் இந்த ஆசை இருக்கு. இதை வச்சுக்கிட்டு நல்ல சினிமா எப்படியெடுக்க முடியும்?' இயக்குனர் பீம்சிங் காலத்துல, முதல்ல கதையை வாங்குவாங்க. படிச் சுட்டு இந்தக் கதையை யாரு சிறப்பா டைரக்ட் பண்ணுவாங்கன்னு பார்ப் பாங்க. டைரக்டர் திறமையைப் பார்த்

# "சினிமா பண்ண மேஸ்திரி போதும்!"


• 'பரணி' படத்தில்...

துட்டுப் படம் பண்ணச் சொல்வாங்க. ஆனா தமிழ் சினிமாவில் இப்ப எழுத் தாளர்களே இல்லை. அந்த இடத் துல நடிகன் உட்கார்ந்துட்டிருக் கான். இதை மாற்றினாதான் தமிழ் சினிமாவை முன்னெடுத்துச் செல்ல முடியும்.

'சின்னத் தாயி' படத்தை வெறும் முப்பத்தி நான்கு லட் சத்துல எடுத்தேன். அது நல்ல லாபத்தைக் கொடுத்தது. 'பரணி' படத்தை வெறும் அறுபது லட்சத்துல எடுத் திருக்கேன். பெரிய நடிகர் கள் இப்ப வாங்குகிற சம்பளத்துல கால்பங்குதான் என் படத்தோட செலவு. கோடி கோடியா பணத்தைக் கொட்டி, கதையில கோட்டை விடறதாலதான் பாதித் தமிழ்ப் படங்கள் படுத்துக்குது'' என்று கொதித்தவரிடம் ''சரி, 'பரணி' என்ன கதை?'' என்றோம்.

''இது ஒரு மண்வாசனைக் கதை. 'சின் னத்தாயில' ஒரு புது விஷயத்தை எப்படி சொல்லியிருந்தேனோ, அதை விட அழகா, ஆழமா இதுல ஒரு கதை சொல்லியிருக் கேன். மிகுந்த போராட்டத்துக்குப் பிறகு பிப்ரவரியில் ரிலீஸ் பண்றேன். மக்களை நேசிக்கற, அவங்க மனத்தைத் தொடுகிற உணர்வுபூர்வமான கதைதான் பரணி'' என்கிற கணேசராஜ், தமது 'பொட்டல்' நாவலுக்காக, திருப்பூர் தமிழ்ச் சங்கப் பரிசை சமீபத்தில் பெற்றிருக்கிறார்.

- ஏக்ஜி

# தேவ மருந்து – 25

## இதயமே... இதயமே...

**கை**யளவு இருக்கும் இதயத்துக்குத்தான் எத்தனை சொகுசு! 'லப் டப்' என்ற சப்தத்துக்குத்தான் எத்தனை மவுசு!

இருதயம் என்றால் 'ஹரதி, ததாதி, யாதி இதி ஹ்ருதயம்" என்று அர்த்தம். ஹரதி என்றால் இரத்தத்தை வாங்குதல், ததாதி என்றால் இரத்தத்தைக் கொடுப்பது, யாதி என்றால் இரத்தம் உடல் முழுவதும் பரவுவது என்று அர்த்தம்.

இருதயம் என்கிற வார்த்தையிலேயே இருதயத்தின் செயல்பாடுகள் அனைத்தும் அடங்கி விடுகிறது. வேதம் இருதயத்தை 'புண்டரீகேன சதுர்ஷம் ஹ்ருதயம்' என்று சொல்கிறது. அதாவது ஒரு கவிழ்ந்த தாமரை மொட்டுப் போல இந்த இருதயம் இருக்கிறது என்று பொருள். வேறு எந்த உறுப்பு இல்லையென்றாலும் உயிர் வாழலாம், இருதயம் இல்லாமல் உயிர்வாழ முடியாது. அதனால்தான் இருதயம் மிக முக்கியமானது. இருதயத்தில்தான் பிராணன், ஓஜஸ், அக்னி போன்றவை உள்ளன. இப்படி எல்லா உறுப்புகளுமே இருதயத்தை ஆபரணமாக அடையப் பெற்றுள்ளது. இருதயத்திலிருந்து இரத்தக் குழாய்கள் செல்கின்றன அதற்கு மகா மூலங்கள் என்று பெயர். கை, கால், நடுப்பகுதி, பஞ்ச இந்திரியங்கள், கர்ம இந்திரியங்கள் போன்ற எல்லாமே இருயத்தைத்தான் நாடி உள்ளன.

**இ**ருதயத்தைப் பற்றிய சில மருத்துவ உண்மைகள் :

• இருதய இரத்த அழுத்த நோய்கள் உலகில் சமீபகாலத்தில் அதிகரித்துள்ளன. (10 - 15%)

• குறிப்பாக, வளர்ந்து வரும் நாடுகளில் ஒன்றான இந்தியாவில், மிக அதிக அளவில் காணப்படுகின்றன.

• இந்தியாவில் நகரங்களில் மட்டுமல்லாமல், கிராமப் புறங்களில் வசிப்பவர்கள் மத்தியிலும், இருதய இரத்த அழுத்த நோய், அதிக அளவில் காணப்படுகின்றன.

• இதற்கு முக்கியக் காரணம் நம் பழக்கவழக்கங்களில் மாறுதல், சரியான தேகப் பயிற்சி இல்லாமை.

• சமீப காலத்தில் உலக அளவிலும், நம் நாட்டிலும், குறைந்த வயதிலேயே 30 முதல் 40 வயது உள்ளவர்களை, இந்த நோய் அதிகமாக, பாதிக்கிறது.

• எல்லாவற்றிற்கும் மேலாக, இதய நோய் தாக்குதலுக்கு முக்கியக் காரணம் - சிகரெட் பிடிப்பது, உடம்பில் கொலஸ்ட்ரால், கொழுப்பு விகிதம் அதிகமாக இருப்பது.

• மதுபானங்களை அதிக அளவில் உபயோகிப்பது இன்னொரு காரணமாக அமைகிறது.

• அளவுக்கு மீறிய எடை, அளவுக்கு மீறிய உழைப்பு, மன உளைச்சல் - இவையும் காரணம்.

• டைப் ஏ பர்சனாலிடி, வாத பித்த ப்ரக்ருதி - அதி சீக்கிரம் வாழ்க்கையில் முன்னேறி, முதலிடத்திற்கு வந்துவிட வேண்டும் என ஆர்வம் உள்ளவர்களுக்கு, மாரடைப்பு நோய் சீக்கிரம் வர வாய்ப்புண்டு.

• பெண்களைவிட ஆண்களுக்கு அதிக அளவில் இருதய நோய் வருகிறது. ஆனால் பெண்களுக்கு மாத விலக்கு நின்றபிறகு, அல்லது சர்க்கரை வியாதி உள்ள பெண்களுக்கு இந்தப் பாதுகாப்பு இல்லை.

• குடும்ப ரீதியாக, பாரம்பரியத்தின் அடிப்படையில் இதய பாதிப்பும், இரத்த அழுத்த நோயும் எளிதில் வர வாய்ப்புண்டு.

வீட்டைத் தாங்கி நிறுத்தும் தூண்போல, இந்த அங்கங்களை எல்லாம் தாங்கி நிற்கும் தூணாக இந்த இருதயம் அமைந்துள்ளது. இருதயத்துக்குச் சிறிதளவு சிதைவு கூட ஏற்படாமல் காத்துக் கொள்ள வேண்டும், என்று சரகர் என்கிற ரிஷி கூறியுள்ளார். இருதயத்தின் சிதைவினால் மரணம் ஏற்படும் என்பதை அவர் கூறியுள்ளார் என்றாலும், பழைய காலத்தில் அதிகமான மாரடைப்பு, இதய இரத்த அழுத்த நோய் போன்றவை இருந்ததாகத் தெரியவில்லை. இதற்கு அவர்களுடைய வாழ்க்கை முறையும் ஒரு காரணம். ஆனால், பழைய கிரந்தங்களில் இந்த இருதய நோய்களைப் பற்றிய விளக்கங்கள்

காணப்படுவது உண்மை. வியான வாயு இருதயத்தில் அதிகமாகச் செயல்படும்போது, இரத்த அழுத்தம் போன்றவை வரலாம் என்று சொல்லப்பட்டுள்ளது. இன்றைக்கும் பழைய மூலிகையாகிய சர்பஹந்தா (Rauwolfia Serpentina) இரத்த அழுத்தத்தைக் குறைக்கும் தன்மையுடையதாகக் கருதப்படுகிறது. இந்திய மருத்துவர்கள் அதைச் சாறு எடுக்காமல், மூலிகையாகவே இன்றைக்கும் பயன்படுத்துகிறார்கள்.

ஆயுர்வேதத்தில் இருதயம் என்ற உறுப்பானது ஒரு பம்பிங் உறுப்பு மட்டுமல்ல, உணர்வுகளைப் பிரதிபலிக்கின்ற உறுப்பு என்று வேதம் கூறுகிறது. உணவு வகைகளால் இருதயம் பாதிக்கப்படுகிறது. பழக்க வழக்கங்களினால் இருதயம் பாதிக்கப்படுகிறது. இதில் உணவு என்று எடுத்துக் கொண்டால், அது வாதத்தைக் கூட்டும் உணவாகவோ, பித்தத்தைக் கூட்டும் உணவாகவோ, கபத்தைக் கூட்டும் உணவாகவோ இருக்கலாம். வாதஜமான இருதய நோய்கள் (Arrhythmias) வரலாம். முதலிலேயே கூறப்பட்டுள்ளது போல், தாளம் என்றால் வாயு என்று சொல்லப்பட்டுள்ளது. இதெல்லாம் வாதம் இருதயத்தில் அதிகரிப்பதனால் வரக்கூடியது. இன்பெக்ஷன் போன்றவை பித்தத்தினால் வரக் கூடியது. இருதயத்தில் கபம் அதிகமானால் Coronary Artery Disease வருகிறது. கபம் எண்ணெய்ப் பசை உடையது. கபத்திற்கும் கொழுப்பிற்கும், நெருங்கிய பிரிக்க முடியாத தொடர்பு உண்டு. அரிசி கலந்த உணவுகளை அதிகமாகச் சாப்பிடுவது, பால் மற்றும் பால் கலந்த பொருட்களை அதிகமாகச் சாப்பிடுவது, நெய், எண்ணெய் பலகாரங்களைச் சாப்பிடுவது போன்றவை கபத்தை அதிகரிக்கும். செயல்பாடு என்று எடுத்துக் கொண்டால், அதிகமாகத் தூங்குவது, உட்கார்ந்தே இருப்பது, வேலை செய்யாமல் இருப்பது போன்ற சோம்பேறித்தனமான செயல்கள் எல்லாம் கபத்தை அதிகரிக்கும். சிந்தை, கவலை, தூக்கம் அதிகமாக இருந்தால் ரசதாது உடம்பில் கெட்டு, ரசதாது உற்பத்தி



இடமாகிய இருதயம் கெடுபடும். அதனால் இருதயத்தைப் பாதிக்கும். கபம் விருத்தியாகி, துஷ்ட கபமாக மாறி, இரத்த நாளங்களில் Cholesterol படியும்போது, அதனால் பிராண சக்தியானது இருதயத்திற்குப் போவது தடைப்பட்டு, இருதய நோய்கள் வருகின்றன. அதற்கு முதல்படியாக இரத்த ஓட்டம் குறைவதனால் வலி ஏற்படுகிறது இதற்கு அஞ்சைனா (Angina) என்று பெயர்.

இதைப் பற்றி அடுத்த வாரம் விரிவாகப் பார்க்கலாம்.

**டாக்டர் எல். மகாதேவன்**

# செய்யாறு வி.பாலு

### காட்சி – 1

கல்லூரி விடுமுறையைக் கழிப்பதற்காக பாட்டி வீட்டிற்கு வந்திருந்த பரசுராம், சும்மா இருக்கக் கூடாதா! பெரிசுகள் எவ்வளவு சொல்லியும் கேட்காமல், அடுத்தவன் காதுலையே நான் 'கனகாம்பரம் பூ' சுத்தறவன். என் காதுல நீங்க 'வாழைப் பூவை'யா வைக்கப் பாக்கறீங்க' என்று வீராப்பாகப் பேசி, இந்தப் பாழடைந்த மண்டபத்துக்குள் மாட்டிக் கொண்டான்.

வந்த வழியும் தெரியலை, போகும் வழியும் புரியலை. 'டிஸ்கவரி சேனலில் காட்டிய எகிப்து பிரமிடுக்குள் இருப்பது போல் இருந்தது.

"ஹெல்ப் மீ!" மூன்று முறை கத்தியவன், தலையில் ஒரு முறை குட்டிக் கொண்டு.... "சே! இந்த குக்கிராமத்துல எவனுக்கு இங்க்லீஷ் தெரியும்" என்றவன்,

"என்னைக் காப்பாத்துங்க"... மீண்டும் மூன்று முறை கத்திப் பார்த்தான்.

காது கேட்காத பாட்டியையும், கண் தெரியாத தாத்தாவையும் நினைத்து கண் கலங்கிப் போனான் பரசுராம். கண்களை மூடிக் கொண்டவன், "நம்பிக்கையை இழக்க மாட்டேன்... நான் நம்பிக்கையை இழக்க மாட்டேன்"– திரும்ப திரும்பச் சொல்லிக் கொண்டான். உடலில் ஒரு உத்வேகம். கண்களைத் திறந்து மண்டபத்தின் நாலா பக்கமும் சுற்றிச் சுற்றி வந்து, திடீரென்று மேலே நிமிர்ந்து பார்த்தவனுக்கு ஆச்சரியம். 'லாரி ஸ்டேரிங்'கை யார் இங்கு மாட்டி வைத்திருப்பது, என்று அதனருகில் ஆவலாகச் சென்று பார்த்தான். அதற்குக் கீழே ஏதோ வாசகம் எழுதப்பட்டிருந்தது. கையால் அதை அழுத்தித் துடைத்தான். 'காலச்சக்கரம்' என்று பெரிய எழுத்தில் இருந்தது. அதற்குக் கீழே 'இதை எப்படிச் சுற்றுகிறாயோ அதைப் பொறுத்து உன் தலைவிதி நிர்ணயம் செய்யப்பட்டுள்ளது' என்றிருந்தது.

இதைப் படித்தவுடன் பரசுராமனுக்கு 'மூணுசீட்டு' ஞாபகம் வந்தது. "வை ராஜா வை"... எதுல வைக்கறீயோ, அதுதான் உன் தலை எழுத்து. போனா வராது. வந்தா விடாது" மூணு சீட்டிலே தைரியமா 500 ரூபாய் வைத்தவன், இதைத் திருப்ப என்ன தயக்கம்?

காலச்சக்கரத்தைக் கையில் பிடித்தவுடன் இராம. நாராயணன் படத்தில் வருவது போல மண்டபம் ஒரு குலுங்கு குலுங்கியது. கண்களை மூடிக் கொண்டு கடிகாரச் சுற்றில் சக்கரத்தைச் சுற்றினான். தடதடவென்று ஒரு பெரிய கதவு திறந்தது. 'ஆ! நான் வெளியே வர வழி கெடச்சாச்சு' குதூகலத்தில் துள்ளிக் குதித்துக் கொண்டே வெளியே ஓடி வந்துவிட்டான். அடுத்த விநாடியே அந்த கதவு 'படீர்' என்று மூடிக் கொண்டது.

### காட்சி – 2

'இது பாட்டி ஊரும் கிடையாது. நம்ம ஊரும் இல்லை. இது எந்த ஊரு?' குழப்பத்தோடு, சந்து பொந்துகளில் புகுந்து வெளியே வந்து பார்த்தபோது, ஒரு பெரிய சிமெண்ட் ரோடு, ராத்திரி வேளையில் நிசப்தமாக இருந்தது. நிமிர்ந்து எதிரே உள்ள கட்டடத்தைப் பார்த்த பரசு





ராமனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அது பதினாலு அடுக்கு எல்.ஐ.சி. பில்டிங்.

"ஆ....ஆ... நாம சென்னைக்கு வந்துட்டோம். கோடம்பாக்கத்துல இருக்கிற நம்ம ப்ரெண்ட் கோவிந்தனைப் பார்த்துட வேண்டியதுதான். அங்கேயிருந்த எல்.ஐ.சி. அருகில் பஸ் ஸ்டாப்பிங்கே இல்லாமல் இருந்தது.

'சோனப்பூர்' டவரில் எலக்ட்ரானிக்ஸ் கடிகாரம் மணி, தேதி, வருஷம் மூன்றையும் மாறி, மாறிக் காட்டிக் கொண்டிருந்தது. நடுராத்திரி ஒரு மணி. அடுத்து, தேதி வருஷத்தைப் பார்த்த பரசுராம் வெலவெலத்துப் போனான். நாலாம் தேதி, மார்ச் மாதம், 3002 என்று காட்டுகிறது.

"அட! இது 2003 ஆச்சே, எலக்ட்ரானிக்ஸ் மிஸ்டேக்கா? அப்படிப் பார்த்தாக் கூட இன்னைக்கு அக்டோபர் மாசம் பத்தாம் தேதியாச்சே." அவசரமாகத் தன் கைக் கடிகாரத்தை அழுத்திப் பார்த்தான். அதுவும் 4.3.3002 என்று காட்டியது! ஒருமுறை கிள்ளிப் பார்த்துக் கொண்டவன், நம்பாமல் கையையே கடித்துப் பார்த்தான். 'ஆ'! வலி. உணர்வு இருக்கிறது. கனவு இல்லை.

மவுண்ட்ரோடு முழுக்க ஒரே குதிரைச் சாணியாக இருந்தது. நாற்றம் குடலைப் புரட்டியது. அதை ஆட்கள் அள்ளிக் கொண்டும், கழுவிவிட்டுக் கொண்டும் இருந்தார்கள். 'ஆட்டோ', 'வேன்', 'கார்', 'பஸ்' ஒரு வாகனம் கூட கண்ணுக்குத் தெரியவில்லை. ஏதாவது கலவரமோ? மீண்டும் 'சோனப்பூர் டவர்' கடிகாரத்தையும், தன்னுடைய வாட்ச்சையும் மாறி மாறிப் பார்த்தான். எப்படி 3002 காட்டுது? வியப்பாக இருந்தது.

தூரத்தில் இரண்டு பேர் வித்தியாசமான உடையில், தனித்தனி குதிரைகள் மேல் வந்து கொண்டிருந்தார்கள். நேராக இவனிடம் வந்தவர்கள்,

"யார் நீ? நடு ராத்திரில இங்கே என்ன செய்துகிட்டு இருக்கே?" கொஞ்சம் அதட்டலான குரலில் கேட்டார்கள். 'அதைக் கேட்க நீங்க யார்' என்று கேட்க நினைத்த பரசுராம், குதிரையின் வயிற்றுப் பகுதிக்கு நேராக 'போலீஸ்' என்ற எழுத்து தொங்குவதைப் பார்த்து வாயை மூடிக் கொண்டான்.

"நான் கோடம்பாக்கம் போகணும், ஏதாவது, பஸ், ஆட்டோ வருமான்னு வெயிட் பண்றேன் சார்" என்றான் பவ்யமாக.

# 'குதிரை வண்டியும் கொள்ளு பங்க்கும்!'



''என்ன நக்கலா?'' என்று ஒரு போலீஸ்காரர் கேட்க, பயத்தில் பரசுராமனுக்கு ஒன்றுமே புரியவில்லை.

"ஆட்டோவுக்கு வெயிட் பண்றேன்னு சொன்னா, உங்க ஊர்ல நக்கலா சார்?" என்றான் மெதுவான குரலில். இரண்டு போலீஸ்காரர்களும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

"உன்னைப் பார்த்தா சந்தேகமா இருக்கு. வா, ஸ்டேஷனுக்குப் போகலாம். ஏறி உட்கார்ந்து இந்தக் குதிரையை ஓட்டு. நான் உன் பின்னாடி உட்கார்ந்து வரேன்" ஒரு போலீஸ்காரர் சொல்ல,

"எனக்குக் குதிரை ஓட்டத் தெரியாது சார். பழக்கம் இல்லை" என்றான்.

ஆச்சரியமாக அவனையே பார்த்த போலீஸ்காரர்கள்,

"இவ்வளவு பெரியவனா இருக்கே, குதிரை ஓட்டத் தெரியாம எப்படி சென்னையிலே இருக்கே. சரி பின்னாடி ஏறி உட்காரு" என்றார்.

"எனக்கு ஏறி உட்காரவும் தெரியாதுங்க." மீண்டும் பரிதாபமான குரலில் சொன்னான் பரசுராம்.

கடுப்பான ஒரு போலீஸ்காரர், அவனது கையைப் பிடித்து அலேக்காகத் தூக்கி உட்கார வைத்தார்.

''யார்கிட்டே நடிக்கிறே, வாடா ஸ்டேஷனுக்கு.''

பரசுராமனுக்கு ஒன்றுமே புரியவில்லை.

## காட்சி — 3

*போலீஸ் ஸ்டேஷனில் பரசுராமனை இன்ஸ்பெக்டர் ஏதேதோ விசாரித்துவிட்டு, வெள்ளைப் பேப்பரில் கைரேகை மட்டும் வாங்கிக் கொண்டு வெளியே அனுப்பிவிடுகிறார். நன்றாகப் பொழுது விடிந்திருந்தது. மக்கள் குதிரையிலும், மாட்டு வண்டியிலும் செல்வதை ஆச்சரியமாகப் பார்க்கிறான் பரசு.*

பக்கத்தில் நின்றிருக்கும் ஒரு முதியவரைச் சீண்டி, ''சார் நான் கோடம்பாக்கம் போகணும். எந்த ஸ்டாப்பிங்ல நின்னா பஸ் வரும்?'' என்று கேட்க,

அவனை மேலும் கீழுமாகப் பார்த்த அந்த முதியவர், பல்லை நறநறவென்று கடித்துக் கொண்டே....

"ஆள் பார்க்க நல்லாத்தானே இருக்கே. ஆனா என்னையே நீ கிண்டல் பண்றியே நியாயமா?'' என்றார்.

பரசுராம் பதற்றத்துடன் "அய்யய்யோ! அதெல்லாம் கிடையாது. நான் ரொம்ப சீரியஸா கேக்குறேனுங்க."

"என்ன தம்பி சீரியஸ் வேண்டிக்கெடக்கு. நீ இந்த உலகத்துலதானே இருக்கே. உலகம் முழுக்கப் பெட்ரோல் கிடைக்காமப் போய் நூறு வருஷமாகுதே. உனக்குத் தெரியாதா? அரேபியா நாட்டுல இருந்த பெட்ரோல் கிணறு அத்தனையும் 'தூர்' எடுத்தும் பிரயோஜனம் இல்லை. சுத்தமா வத்திப் போச்சு தம்பி" என்றார்.

இதை கேட்டதும் பரசுராமனுக்கு நிஜமாகவே தூக்கிவாரிப் போட்டது. "அடப்பாவிகளா, இது உண்மையிலேயே 3002வது வருஷம்தானா?'' என்று மனசுக்குள்ளே கேட்டுக் கொண்டே நடந்தான்.

நடக்க முடியவில்லை. கால்கள் இரண்டும் பின்னின. மூன்று குதிரைக்காரன், ஒரு மாட்டு வண்டிக்காரனிடம் 'லிப்ட்' கேட்டு எவனும் தரவில்லை. எல்லோரும் கேலியாகப் பார்த்துக் கொண்டே சென்றார்கள். அதற்குள் எங்கிருந்தோ ஓடிவந்த இரண்டு பேர், "சார், கொஞ்சம் இங்கே வாங்க'' என்று பரசுராமைத் தனியாக அழைத்துச் சென்றார்கள்.

*''என் வாயை யாரோ இறுக்கமா தைக்கிற மாதிரி அடிக்கடி கனவு வருதுடா...!''*

*''கங்ராஜுலேஷன்ஸ்...! உனக்கு சீக்கிரமே கல்யாணம் ஆகப் போகுது!''*

*— தஞ்சை தாமு*

"நீங்க குதிரையில போறவங்ககிட்ட 'லிப்ட்' கேட்டதைப் பார்த்து எங்களுக்கே பரிதாபமாப் போச்சு'' என்றார்கள்.

"ஆமா, எம்மேலே பரிதாபப்பட நீங்க யாரு?" என்றான் கொஞ்சம் டென்ஷனாக பரசுராம்.

"ப்ளீஸ், கோபப்படாதீங்க, நாங்க 'ACBC' பேங்க்ல வேலை செய்றோம். 'ஈ.ஸி இன்ஸ்டால்மெண்ட்ல' குதிரை வாங்குறதுக்கு லோன் தரோம். ஸீரோ பர்சன்ட் வட்டி, தவணைய மட்டும் மாசா மாசம் கட்டினா போதும். உங்க வசதிக்கு ஏத்தா மாதிரி பல வெரைட்டியில் குதிரைங்க இருக்கு. எப்படி வசதி?"

பரசுராமனுக்குக் கிறுகிறு என்று வருவது போல் இருந்தது.

"என்ன சார், 'குதிரை லோன்' வேணுமா

சொல்லுங்க. நீங்க இப்பவே ஒத்துக்கிட்டா RTO ஆபிசுக்குக் கூட்டிக்கிட்டுப் போய் இமிடியட்டா 'டிரைவிங் லைசன்ஸ்' வாங்கித் தரோம். அங்கே நீங்க சும்மா குதிரை மேலே உட்கார்ந்து, ஒண்ணு போட்டா போதும். அதுகூடப் பெரிய ஒண்ணு வேணாம், சின்ன ஒண்ணே போதும். என்ன சார் சொல்றீங்க?" நச்சரித்தார்கள்.

"எனக்குக் குதிரை ஓட்டத் தெரியாதே" பரிதாபமான குரலில் பரசுராம் சொன்னான்.

இதைக் கேட்டு அந்த இரண்டு பேரும் சிரித்தார்கள்.

"இதுக்குப் போய் ஏன் சார் வருத்தப் படுறீங்க. நம்ம 'அஞ்சப்பன் ஹார்ஸ்'



டிரைவிங் ஸ்கூல் இருக்கும்போது என்ன கவலை? ரெண்டே நாள்லே குதிரை ஓட்ட கத்துக் கொடுத்துருவாங்க. சிட்டியிலேயே நெம்பர் ஒன் டிரைவிங் ஸ்கூல் அதுதான். இந்தாங்க அட்ரஸ். அப்போ லோன் வாங் குறீங்களா? யோசிக்காதீங்க, இந்த உலகத்துல குதிரை இல்லாம இருக்கிறது ரொம்ப கஷ் டம்."

"சரி" என்று தலையாட்டினான் பரசு.

"நீங்க வேலை செய்யற கம்பெனியோட ஐடென்டிடி கார்டை காண்பிச்சா போதும்" என்றார்கள் சிரித்துக் கொண்டே.

"அய்யோ! நான் எந்த வேலையும் செய் யலியே. எனக்கு ஏதாவது வேலை கிடைக் குமா?" என்று சத்தமாகக் கத்தினான் பரசு.

"ஏதாவது வேலை கிடைக்குமா" என்ற குரல் கேட்டதுதான் தாமதம்.

டிப் டாப்பாக 'டை'கட்டிக் கொண்டி ருந்த நான்கு பேர் பரசுராமனைச் சூழ்ந்து கொண்டார்கள். ஒருவன் கையைப் பலமா கப் பிடித்துக் கொண்டு...

"ப்ளீஸ் சார், எங்க பாக்ட்ரில நல்ல வேலை ஒண்ணு இருக்கு. ஜஸ்ட், ரெண்டு மணி நேரம் வேலை செய்துட்டு, பத்து மணி நேரத்துக்கான சம்பளம் வாங்கிக்கங்க" என் றான்.

அடுத்தவன் பரசுவையே 'அலேக்'காகத் தூக்க முற்பட்டபோது, ஏதோ ஆள் கடத்தல் கும்பல் நம்மைக் கடத்தப் பார்க்கிறார்கள் என்று நினைத்துப் பெருங்குரலில்... "காப் பாத்துங்க... காப்பாத்துங்க" என்று கத்தினான் பரசுராம். டிப் டாப் ஆசாமிகளில் மூன்று பேர் இவனை 'மென்டல்' என்று நினைத்து, பயத்தில் விலகிப் போய்விட்டார்கள்.

ஒருவன் மட்டும் விடுவதாக இல்லை.

"சார், உங்களுக்குத் தங்கறதுக்கு வீடு தர்றோம், குதிரை தர்றோம். பி.எஃப், ஈ.எஸ்.ஐ.வசதி உண்டு. இன்னும் நீங்க கேக் கறது அத்தனையும் செய்து தரோம்."

கெஞ்சலாகக் கேட்டான்.

"ஆமா, அந்த பாக்டரில உங்களுக்கு என்ன வேலை?" – பரசுராம் திருப்பிக் கேட் டான்.

"வேலை இல்லாம இருக்கிறவங்களை எப்படியாவது தேடிப் பிடித்துக் கொண்டு வருவதுதான் எங்க வேலை. சமயத்துல யாருமே கெடைக்கலைன்னா, வேறே பாக்ட்ரில வேலை செய்துகிட்டு இருக்கிற வனைக் கழட்டிக்கிட்டு வந்துடுவோம். என்ன பண்றது சார், என்னைக்கு பெட் ரோல் ஸ்டாப் ஆச்சோ, அன்னைக்கே மிஷின்களுக்கு வேலை போய், மனுஷன் களுக்கு டிமாண்டாகிவிட்டது" என்றான் விரக்தியாக.

இதைக் கேட்டதும் உற்சாகமாக வேலை யில் சேர சம்மதித்தான் பரசுராம்.

### காட்சி – 4

இருவரும் குதிரை மேல் ஏறிச் சென்று கொண்டிருந்தார்கள். குதிரையின் முதுகில் ஒரு தட்டுத் தட்டினான். குதிரை கனைத்துக் கொண்டே வேகமாக ஓடியது. கொஞ்ச தூரம் சென்றதும், அதன் வயிற்றில் ஒரு தட்டுத் தட்டினான். இன்னும் வேகமாக ஓடியது. இதுபோல் மாறி மாறிச் செய்து கொண்டே வந்தான்.

பரசுராமனுக்குப் பொறுக்க முடிய வில்லை.

"எதுக்குங்க குதிரையை மாத்தி மாத்தி

# கவலை வேண்டாம்!

ஈராக்கைத் தாக்க அமெரிக்கா துடித்துக் கொண்டிருக்க, 'ஈராக் மக்கள் எதற்கும் கவலைப்பட வேண்டாம்' என நகரின் எல்லா இடங்களிலும் ஆள் உயரப் படங்களில் உற்சாகப்படுத்துகிறார் சதாம் ஹுசேன்! கண்டிப்பாக, வரும் ஜனவரியில் அதிரடிப் போர் உண்டு. அதில் ஈராக்கிற்கு எதிராக – நாங்களும் கலந்து கொள்வோம் என அறிவித்துள்ளது இஸ்ரேல்! மீண்டும் ஒரு வளைகுடாப் போரா?

– பாரீஸ் பார்த்தசாரதி



தட்றீங்க" என்றான். "இதுக்குப் பேரு தட்றது இல்லை. 'பர்ஸ்ட் கியர்', 'செகண்ட்கியர்' சிஸ்டம்" என்றான் அவன்.

வழி எங்கும் 'பெட்ரோல் பங்க்' மாடலில் ஏதேதோ விற்பனை செய்து கொண்டிருந்தார்கள்.

"என்னங்க அது, ஏதோ வித்தியாசமா விக்கறாங்க?" என்றான். குதிரை ஓட்டிச் சென்றவனுக்கு இப்போதுதான் ஒரு சின்னச் சந்தேகம் வந்தது. உண்மையிலேயே இவன் கேனையா? இல்லை நடிக்கிறானா?

"நான் கேட்டதுக்கு பதிலே சொல்ல வில்லையே?" என்று பரசு சிணுங்கினான்.

"அது 'கொள்ளு பங்க்'ன்னு உங்களுக்குத் தெரியாதா? குதிரைக்கு நாலு கிலோ 'கொள்ளு' வாங்கினா, ஒரு புல்லுக் கட்டு ப்ரீ" என்றான் சலிப்பாக.

"ஓ... ஓஹோ, பெட்ரோல் பங்க்ல, பெட்ரோல் போட்டா, 'காத்து ப்ரீ'யா அடிக்கிறாங்களே அது மாதிரியா?" என்றான் ஆவலாக.

"யோவ்! பெட்ரோலைப் பார்த்தே நூறு வருஷமாகுதாம். எங்கிருந்து 'பெட்ரோல் பங்க்' இருக்கும்.

"எங்க ஊர்ல இருக்குங்க" துள்ளலாகச் சொன்னான் பரசுராம். குதிரை ஓட்டி வந்தவன் ஓரமாக நிறுத்தினான்.

"மரியாதையா கீழே இறங்குங்க" என்றான்.

"நீங்கதானே வேலை வாங்கித் தரதா சொன்னீங்க"– பரசு கேட்டான்.

"நாங்க யாரும் 'லூசு'களுக்கு வேலை தரதில்லை" என்றான் அவன்.

"யாரைப் பார்த்துடா லூசுன்றே..."

இருவரும் கட்டிப் புரண்டார்கள்.

### காட்சி – 5

வள்ளுவர் கோட்டம் வாசலில் உட்கார்ந்திருந்த பரசுவுக்கு, இந்த உலகம் பிடித்துப் போயிருந்தது. அம்மா, அப்பா, தம்பி, தங்கைகளை நினைத்து அழுகை வந்தாலும், இங்கேயே வாழ்ந்துவிட முடிவு செய்துவிட்டான். ஒரு புத்தகக் கடையில் சென்று 'தினசரி' செய்தித் தாளை வாங்கிப் படித்தான்.

'விரைவில் பெட்ரோல் கிடைக்க ஏற்பாடு செய்கிறேன்' – என்று மந்திரி ஒருவர் பொதுக்கூட்டத்தில் பேசியது –

"குதிரை வண்டியும், மாட்டு வண்டியும் மோதி பயங்கர விபத்து" என்றிருந்தது.

அடுத்த பக்கம் திருப்பி அந்தச் செய்தியை படித்த பரசுவின் நெஞ்சு பதறியது.

'அடப்பாவிகளா' என்றான் அடித் தொண்டையிலிருந்து.

அரசு குதிரை வண்டிகளைத் தனியாருக்கு விட முடிவு! – குதிரை ஓட்டுனர்கள் ஸ்டிரைக்!

என்ன கொடுமையான உலகம் இது என்று பரசுராமனுக்குத் தோன்றியது. 'இனி இங்கு வாழ இஷ்டமில்லை' என்று காலச் சக்கரத்தைத் தேடி ஓட ஆரம்பித்தான். ○




# அல்லயன்ஸ்



நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்

## 10-நாட்களுக்கு — 10% கழிவு

### 9.1.2003 முதல் 19.1.2003 வரை நடைபெறும் சென்னை புத்தகக் கண்காட்சியில் மட்டும்

## பூஜ்ய ஸ்ரீ மஹா ஸ்வாமிகள் வரலாறு - ரூ.500/-

காஞ்சீ காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சந்த்ர சேகரேந்திர ஸரஸ்வதீ ஸ்வாமிகளின் திரு அவதாரம், சன்யாஸ வாழ்க்கை, விஜயம் செய்த திருக்கோயில்கள், செய்தி திருப்பணிகள், நூற்றாண்டு வைபவம், திரு அவதார நிறைவு வரை - நூற்றுக்கும் மேற்பட்ட சில்பியின் ஓவியங்கள், புகைப்படங்களுடன் - இரண்டு பாகங்களாக - ஒரு அட்டைப் பெட்டியில்

## கு.ப. ரா.எழுத்துக்கள் - 8 தொகுதிகள் - ரூ.700/-

பிரபல எழுத்தாளர் கு.ப. ராஜகோபாலன் எழுதிய சிறுகதைகள், நாடகங்கள், கட்டுரைகள், கவிதைகள், மொழி பெயர்ப்பு நாவல்கள் என - பெரும்பாலான அவரது எழுத்துக்கள் அடங்கியது. (8 தொகுதிகளாக - ஒரு அட்டைப் பெட்டியில்)

## 100 தலைப்புகளில் புத்தகங்கள்! 100

ஒவ்வொன்றும் நூறு தகவல்களைக் கொண்டவை மொத்தம் பத்தாயிரம் தகவல்கள்!

### முதன் முறையாகத் தமிழில் வெளி வரும் என்சைக்ளோபீடியா

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | நம்மவர் செய்த விந்தைகள் | - | 100 | என். ஸ்ரீநிவாஸன் | ரூ. 100 /- |
| 2. | அவர்கள் செய்த விந்தைகள் | - | 100 | ,, | ரூ. 100 /- |
| 3. | உலக மகா கொடுங்கோலர்கள் | - | 100 | ,, | ரூ. 100 /- |
| 4. | உலகப் புகழ் பெற்ற சொற்பொழிவுகள் | - | 100 | ,, | ரூ. 100 /- |
| 5. | விந்தை உயிரினங்கள் | - | 100 | ,, | ரூ. 100 /- |
| 6. | அரண்மனை ரகசியங்கள் | - | 100 | ,, | ரூ. 100 /- |
| 7. | உலகப் புகழ் பெற்ற கட்டடங்கள் | - | 100 | ,, | ரூ. 100 /- |
| 8. | நம்ப முடியாத உண்மைகள் | - | 100 | ,, | ரூ. 100 /- |
| 9. | வியப்பூட்டும் உண்மைகள் | - | 100 | ,, | ரூ. 100 /- |
| 10. | தாவர உலகிலே ! | - | 100 | ,, | ரூ. 100 /- |
| 11. | விந்தைத் தாவரங்களும் மூலிகைத் தாவரங்களும் | - | 100 | ,, | ரூ. 100 /- |
| 12. | யார் என்ன சொன்னார்கள் ? | - | 100 | ,, | ரூ. 100 /- |
| 13. | நீருலகிலே ! | - | 100 | ,, | ரூ. 100 /- |
| 14. | பாலூட்டிகள் வரிசையிலே ! | - | 100 | ,, | ரூ. 100 /- |
| 15. | தமிழ் வளர்த்த பெருமக்கள் | - | 100 | ,, | ரூ. 100 /- |

(இவை 100 தலைப்புகள் வரை வெளிவர உள்ளது.)

**சோ** எழுதிய

**மஹாபாரதம்**
**பேசுகிறது**

**வால்மீகி ராமாயணம்**
மற்றும் பிற நூல்களும்

**மெரீனா** எழுதிய சிரிப்பு நாடகங்கள்

**தேவன்** எழுதிய துப்பறியும் சாம்பு பிற நூல்கள்

**கி.வா.ஜ.**வின் தமிழ்ப் பழமொழிகள்

**சிவன்** எழுதிய உலக இலக்கிய வரிசை

எஸ்.வி.வி., அநுத்தம்மா, எண்டமூரி வீரேந்திரநாத், யத்தன்னபூடி சுலோசனாராணி, கோட்டயம் புஷ்பநாத், பி.எஸ். ராமையா, பி.ஸ்ரீ., வி.ஸ. காண்டேகர், சுதாங்கன் நூல்களும்

**பி.என். பரசுராமன்** எழுதிய

(1) வாரியார் சொற்பொழிவில் கேட்டவை I & II, (2) விதுர நீதி, (3) நீதி சதகம், (4) சனத்குமாரரின் உபதேசங்கள் (5) பீஷ்மர் சொன்ன தத்துவக் கதைகள் (6) விபூதி ருத்ராட்சம் மகிமை, (7) வைராக்கிய சதகம், (8) சித்தர்கள் சரித்திரம், (9) யட்சப் பிரச்னம், பிரச்னோத்ர ரத்னமாலிகா, (10) சித்ரகுப்தன் கதைகள், (11) துணுக்துணுக்குகள்

**இந்துமத உபாக்கியானம்**

தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம் போன்ற ஒவ்வொரு மொழியிலும் 5,00,000 பிரதிகளுக்கும் மேல் விற்பனையாகிய நூல். இது – மகன், தந்தை, தாய், சகோதரர், சகோதரி, மனைவி, குரு - போன்ற பலருக்கும் செய்ய வேண்டிய கடமைகளை விளக்கும் நூல்

அனைத்து அல்லயன்ஸ் நூல்களுக்கும்
**சிறப்பு சலுகை**

**STALL NO-F-4**

9.1.2003 முதல் – 19.1.2003 வரை – சென்னை புத்தகக் கண்காட்சியில் மட்டும்தான்

# "கனிமொழி உங்கள்

முகம் சுளிக்க வைக்கும் புகழ்ச்சியுரைகள், முதுகில் குத்தும் அரசியல், அன்றாட அறிக்கைப் போர்கள் ஆகியவற்றிலிருந்து விடுபட்டு, கலைஞர் ஓய்வெடுப்பது இலக்கியச் சோலையில்தான். அவர் அப்படி ஓய்வெடுத்ததால்தான் குறளோவியமும், சங்கத்தமிழும் நமக்குக் கிடைத்தன. அந்த வரிசையில் தொல்காப்பியத்தைக் கொடுத்திருக்கும் கலைஞருடன் ஒரு சந்திப்பு.




**கல்கி:** உங்களுடைய மகுடத்தில் மற்றொரு சிறகாக இந்த தொல்காப்பிய உரையை... (குறுக்கிடுகிறார் கலைஞர்)

**கலைஞர்:** ஒரு திருத்தம். உரை எழுதவில்லை. சொல்லோவியம் தீட்டியிருக்கிறேன். திருக்குறளில் ஒவ்வொரு அத்தியாயத்திலிருந்தும் அதாவது உட்பொதிந்துள்ள கருத்தைப் படம் பிடித்து காட்டியிருந்தாலும், தனியாக உரையும் எழுதியிருக்கிறேன். ஓவியம் என்றால் ஒரு கதை மூலமாகவோ, வர்ணனை மூலமாகவோ,



சம்பவம், உரையாடல் மூலமாகவோ எளிமையாகவும், கவரத்தக்க வகையிலும் சொற்களை அமைத்துச் சொல்லும் பாணி. எனவே, அதைப் படிப்பதற்கான விருப்பமும், படிக்கிற நேரத்திலே அது எளிமையாக இருக்கிறது என்ற நிலையும், வாசகர்களுக்கு ஏற்படக் கூடும். குறளோவியத்தைத் தொடர்ந்து நான் தீட்டிய ஓவியம் எழிலார்ந்த கவவும், எளிய நடையும் கொண்ட சங்கத் தமிழ். அதிலும் புறநானூறு, அகநானூறு போன்ற கடின நடையுள்ள பாக்களை எளிமைப்படுத்திச் சொல்வது, ஒரு சவாலான காரியம்தான். அதைத் தொடர்ந்து, இப்போது தொல்காப்பியத்துக்கு உரை மட்டும் எழுதவில்லை. அதில் உள்ள பல

# இலக்கிய வாரிசா...?"

## - கலைஞர் நேர்முகம்

சூத்திரங்களை, நூற்பாக்களைத் தேர்ந்தெடுத்து, அவற்றிற்கு உரை எழுதுகிற அதே சமயத்தில், அதை அழகுபடுத்துவது போல, பின்னணிக் கதைகளுடன் மேற்சொன்னபடி ஒரு சொல்லோவியத்தைத்தான் தீட்டியிருக்கிறேன்.

**கல்கி:** எளிமைப்படுத்தும்போது மூலத்தின் வேர்கள் சிதையாவண்ணம் பார்த்துக்







• கனிமொழி

கொள்ள முடிந்ததா?

**கலைஞர்:** மூலத்தின் அடிப்படை, கடந்த காலத்தில் சிதைக்கப் பட்டிருப்பினும், சீர்தூக்கிச் சொல்லியிருக்கிறேன். தொல்காப்பியம் என்பது ஓர் இலக்கணம். அது தவிர ஒரு வாழ்க்கை இலக்கியம். நான் இலக்கணத்தை இலக்கியமாக்கியிருப்பதாக, படித்துப் பார்த்த மணவை முஸ்தபா, வைரமுத்து ஆகியோர் சொன்னார்கள்.

**கல்கி:** எழுத்து, சொல், பொருள் என்று மூன்று அதிகாரங்களையும் முழுமையாகக் கையாண்டிருக்கிறீர்களா?

**கலைஞர்:** எல்லாவற்றையும் தொடுவதென்பது மிகப் பெரிய காரியம். ஏற்கெனவே பலர் உரை எழுதியிருக்கிறார்கள். குறிப்பாக, இளம்பூரணர் முழுமையாக எழுதியுள்ளார். பேராசிரியர் என்ற மற்றொரு உரையாசிரியர் மெய்ப்பாட்டியல், உவம இயல், செய்யுளியல், மரபியல் என்று பொருளதிகாரத்தில் ஒரு பகுதிக்கு உரை எழுதியுள்ளார். நச்சினார்க்கினியர், எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், அகத்திணை, புறத்திணை, களவியல், கற்பியல், பொருளியல், செய்யுளியல் ஆகியவற்றுக்கு உரை கண்டிருக்கிறார். சேனாவரையர், தெய்வச்சிலையார், கல்லாடனார் ஆகியோர், சொல்லதிகாரத்துக்கு மட்டும் உரை வழங்கியுள்ளனர். பிற்காலத்தில் வெள்ளை வாரணார், பொருளதிகாரத்திற்கு முழுமையான உரையும், செய்யுளியல் மற்றும் மரபியலுக்குத் தொகுப்புரையும், ஆய்வுரையும் தீட்டியுள்ளார். தொல்காப்பியத்தில் சிலவற்றுக்கு மாத்திரம் உரை எழுதலாம், என்ற முன் மாதிரியை உருவாக்கியிருக்கிறார்கள், நான் சொன்ன புலவர்கள். அவர்கள் வழிநின்று, அதே சமயத்தில் ஒரு புதிய பாட்டையில், பொலிவான, தெளிவு

மிக்க வழி கண்டு தொல்காப்பியப் பூங்காவை அமைத்திருக்கிறேன்.

**கல்கி:** தொல்காப்பியத்துக்குச் சொல்லோவியம் தீட்ட முனைந்ததற்கு வேறு ஏதாவது சிறப்பான காரணங்கள் இருக்கிறதா?

**கலைஞர்:** இன்று முகிழ்ந்துள்ள சமுதாய முற்போக்குப் பேரொளியில், சங்க காலத்துக்கு முன்பு தமிழ் மக்கள் கடைபிடித்த வாழ்க்கை முறையில், பிற்போக்கு நிழல் படிந்திருப்பது போன்ற தோற்றம் காணப்படும். அவற்றை ஏற்க இயலுமா, என்ற கேள்வியும் எழக்கூடும். இன்றைக்குத் திருத்தம் செய்து கொள்ளக்கூடிய வகையில் சில பழைய பண்பாடுகள், வாழ்க்கை முறைகள், ஆடவர், பெண்டிர் உரிமைகள் ஆகியவை இருப்பினும், பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்த நமது சமூக அமைப்பின் பண்பாட்டு அடிப்படையைத் தெரிந்து கொள்ளத் துடிப்பது என்பது, தொல்பொருள் ஆய்வில் காட்டும் ஆர்வம் போன்றது, என்று சொல்வதில் தவறு கிடையாது. தொல்பொருள் ஆராய்ச்சி முடிவுகளை எப்படி ஆச்சர்யத்தோடு பார்க்கிறோமோ, அந்த வகையிலும் என் தொல்காப்பியப் பார்வை அமைந்திருந்தது. இன்றைக்கு அணைகளும், ஆலயங்களும் நவீன மிடுக்கோடு காட்சியளித்தாலும், ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் கரிகாலன் கட்டிய கல்லணையும், ராஜ ராஜன் எழுப்பிய தஞ்சைக் கோவிலும் புறந்தள்ளக் கூடியவை அல்லவே! இந்த எண்ண ஓட்டத்திலேயே தொல்காப்பியப் பூங்காவுக்குள் நுழைய வேண்டுமென அழைக்கிறேன்.

**கல்கி:** தொல்காப்பியத்தைத் 'தொட' உங்களைத் தூண்டியது யார்?

**கலைஞர்:** "குறளோவியம், சங்கத்தமிழ் முடித்து விட்டீர்கள். தொல்காப்பியத்தை முயற்சி செய்து பாருங்களேன்" என்று மாறன் தான் துவக்கி வைத்தார். நான்கைந்து ஆண்டுகளாகவே அந்த முயற்சியில் ஈடுபட்டிருந்தேன். ஏற்கெனவே வெளிவந்துள்ள உரைகள், அது தொடர்பாக நூற்றுக்கு மேற்பட்ட புத்தகங்கள், என்று படித்து, என்னைத் தயார்ப் படுத்திக் கொண்டு வந்தேன்.

**கல்கி:** எழுத்து, சொல், அதிகாரங்களை கலைஞர் தொட்டிருக்க மாட்டார் என்று தமிழறிஞர்களின் மத்தியில் ஒரு பேச்சு இருந்ததே...!

**கலைஞர்:** எதைச் சொன்னாலும் மனத்தில் நிற்பது போலச் சொல்ல வேண்டுமென்பது என் நோக்கம். நல்ல தமிழில், பின்னிப் பின்னி வார்த்தைகள் அமைத்துச் சொன்னால், படிப்பதற்கும், மனப்பாடம் செய்வதற்கும் எளிமையாக இருக்கும். இந்த அடிப்படையில் சங்கத் தமிழில் நான் எழுதிய கவிதையை, மேடைகளில் சிவாஜி, சிவகுமார், மனோரமா ஆகியோர் உணர்ச்சிக் குவியலுடன் சொல்லிக் காட்டியிருக்கிறார்கள். (கலைஞரும் ஒரே மூச்சாக அதைச் சொல்கிறார்) தொல்காப்பியத்தில் நான் ஆழ்ந்திருக்கும்போது, பலர் 'காதலைப் பற்றித்தான் எழுதுவார்' என்றுகூடச் சொல்லியிருக்கிறார்கள். மூன்று அதிகாரங்களில் உள்ள நூற்பாக்களையும் நான் எடுத்துக் கையாண்டிருக்கிறேன். உதாரணமாக, தமிழ் எழுத்துக்களில் உள்ள ஆய்த எழுத்து பற்றி நான் எழுதியுள்ளதைச் சொல்ல விரும்புகிறேன். கையில் கம்புடன் புதுமையான ஒரு எழுத்துருவம், தொல்காப்பியர் முன்னால் தோன்றி உரையாடுவதைப் போல வர்ணனை அமைந்திருக்கிறேன்.



*நீ ஆயுதமேந்திஆய்த எழுத்தாக வந்தால்*
*நான் அஞ்சி நடுங்கி உன்னை முதல்*
*முப்பது எழுத்துக்களின் வரிசையில்*
*நிற்க வைத்து விடுவேன் என்று*
*நினைப்பா?"*

இது தொல்காப்பியர்.

*"அய்யனே! என்னைத் தங்கள் விருப்பம் போல அமர வைக்கலாம். முதல் எழுத்து வரிசையில் இடமளிக்காவிடினும், தேவைப்படும் முக்கியமான சமயங்களில் நான் உதவிக்கு வருவேன்" - இப்படிச் சொன்னது ஆய்த எழுத்து.*

உடனே தொல்காப்பியர் *'நீ எனக்கு உதவிட வருகிறேன்' என்கிறாய், நல்ல வேடிக்கை"*

என்று புன்னகை புரிந்தவாறு கூறுகிறார்.

உடனே ஆய்த எழுத்து

*"தாங்கள் எழுதிய முதல் நூற்பாவிலேயே எனக்கு இடம் கொடுத்து விட்டீர்களே; என் திறமையைப் பார்த்தீர்களா?" என்றது துள்ளிக் குதித்தவாறு.*

தொல்காப்பியர் அவர் எழுதியதை எடுத்து, மீண்டும் படித்துப் பார்க்கிறார்.

*"எழுத்தெனப் படுப*
*அகர முதல் னகர இறுவாய்*
*முப்பஃதென்ப*
*சார்ந்துவரல் மரபின் மூன்றலங்*
*கடையே*

"முப்பஃதென்ப" என்பதில் ஆய்த எழுத்து வந்து அமர்ந்துகொண்டதை தொல்காப்பியரும் வியப்புடன் நோக்கி, நிறைவான மகிழ்ச்சி கொள்கிறார். தமிழ் எழுத்துக்கள் 'அ' முதல் 'ன'வரை முப்பது எழுத்துக்கள். சார்பு எழுத்துக்களான குறுகிய ஒலியுடைய 'இ'கரம், குறுகிய ஒலியுடைய 'உ'கரம், ஆய்த எழுத்து ஆகிய மூன்றும் இல்லாமல் முப்பது எழுத்துக்கள்.

● ● ●

**'தலித்' என்பதைத் தனித்துக் காட்டிப் பார்க்க நான் விரும்பவில்லை. அவர்களது உரிமைகள், நலன்கள், தனித்து கவனிக்கப்பட்டுப் பொதுவில் வைக்கப்படவேண்டும்.**

● ● ●

அதே எழுத்ததிகாரத்தில்;

'அஃறிணை விரவும் பெயர்

இயல்பு மாருளவே' என்ற இலக்கண சூத்திரம் இருக்கிறது. உயர்திணை, அஃறிணை மாறுபாட்டை விளக்கும். இதை ஒரு பாட்டியும் சிறுவனும் பேசுவது போல் அமைத்திருக்கிறேன்.

பாட்டி "என்னை அழைத்துப் போக சோழன் வரும்" என்று சொல்லி, 'சோழன் என்பது உயர்திணையா அல்லது அஃறிணையா? என்று கேட்கிறாள்.

உடனே சிறுவன் "சோழன் உன் மகனாகவோ, பேரனாகவோ இருந்தால் உயர்திணை; அல்லது 'சோழன் பேருந்தாக' இருந்தால் அஃறிணை" என்கிறான். "அதாவது இரு திணைக்கும் உரிய பெயரை பொதுப் பெயர் என்பார். அதனால் நான் சொல்வது பொருந்துகிறது. ஆண் பால் உயர்திணையான சோழன், அஃறிணையாவது இப்போது இயல்பு" என்று சூத்திரத்திற்கு விளக்கமும் அளிக்கிறான் சிறுவன்.

சொல்லதிகாரத்தில் வேற்றுமை மயங்கியல், நூற்பா பதினொன்றை விளக்கும் போது 'எனது, எனக்கு' ஆகிய சொற்களை உபயோகப்படுத்துவதைப் பற்றி அச்சக முதலாளிக்கும் அவரது வாடிக்கையாளருக்கும் நடக்கும் உரையாடலைப் போல அமைத்திருக்கிறேன். 'எனது' மகன் என்று எழுதக்கூடாது. 'எனக்கு' மகன் என்றுதான் எழுத வேண்டும். ஏனென்றால், எனது மகன் என்று எழுதும்போது, உயர்திணையுடன் "அது" என்ற ஆறாம் வேற்றுமை உருபுக்குப் பதிலாக, நான்காம் வேற்றுமையாகிய 'கு' உருபு வருதல் வேண்டும். இல்லையேல், 'எனது' என்று குறித்திடும்போது, திணை தவறாகி விடும். எனவே "கு" உருபை இணைத்து "எனக்கு" மகன் என்பதே சரியாகும்.

பொருளாதிகாரத்தைப் பார்க்கலாமா? தம்பதிகளுக்கு நீண்ட காலம் குழந்தை பாக்கியம் இல்லை.

*"இல்லை குறையேதுமென இனிய*
*வாழ்க்கை இருந்தாலும்*
*பிள்ளை ஒன்றில்லை எனக் குறை*
*உனக்குண்டேயென்று*
*கிள்ளை மொழிப் பாவையிடம் கேட்டு*
*வைத்தான் அவன்*
*கேள்விக்கு பதில் சொன்னாள் அவள் ஒரு*
*விரலைக் காட்டி*
*"நில் அங்கே'! எனை மிரட்டுகிறாயா?*
*என்றான்; கேலியாக.*
*நின்று ஒரு மாதம் ஆகின்றதென்றாள்*

**கல்கி:** மெய்ப்பாட்டியியலில் சொல்லியுள்ளவை தற்காலத்திற்குப் பொருந்துகிறதா? உணர்வுகளைப் பிரதிபலிக்கிறது உடல் என்று சொல்கிறது அது. இப்போது உள்ள வஞ்சகமான உலகத்தில், உணர்வுக்கும், முகப் பிரதிபலிப்புக்கும் தொடர்பு இருக்கிறதா என்ன? மனம் ஒன்று சொல்கிறது, முகம் ஒன்று காட்டுகிறதே?

**கலைஞர்:** அது இப்போது உணர்ந்து கொள்ள வேண்டிய மெய்ப்பாட்டியியல் (சிரிப்பு)

**கல்கி:** சொல்லோவியம் எழுத எடுத்துக் கொண்ட கால அவகாசம்?

**கலைஞர்:** பத்து நாட்கள் கோவா வாசம். தனிமைச் சிறைபோல அடைபட்டு எழுதினேன். அதன்பிறகு சென்னையில் பதினைந்து நாட்கள். இடையில் பங்களூரில் அது சம்பந்தமான புத்தகங்களை மீண்டும் ஒருமுறை படித்து, நினைவுகளைப் புதுப்பித்துக் கொண்டேன்.

**கல்கி:** தொல்காப்பியக் காலம் எது? சங்க இலக்கியங்களுக்கு முன்னதா? சந்தேகங்கள் இருக்கின்றனவே!

**கலைஞர்:** தமிழர்களின் வரலாறே சந்தேகத்துக்குரியதாக மாற்றப்பட்டு வருகிறதே! தொல்காப்பியம் இலக்கணம். எனவே அது சங்க இலக்கியத்திற்கு முற்பட்ட காலம் தான். தொல்காப்பியம்தான் முதல் நூல்

என்றும் சொல்ல முடியாது. அந்தக் கட்டத்தில் பல நூல்கள் வந்திருக்கலாம்.

**கல்கி:** தொல்காப்பியத்திற்கு முன்பு 'அகத்தியம்....!''

**கலைஞர்:** அதெல்லாம் பொய்க்கூற்று என்பது என் கருத்து. நிறைய கால வித்தியாசம், மற்றும் முரண்பாடுகள் உள்ளன. தொல்காப்பியத்தில் நான் பார்த்த மற்



றொரு அம்சம், அதில் கடவுள் வாழ்த்து கிடையாது. திருக்குறளில் கூட கடவுள் வாழ்த்து உண்டு. ஆனால் தொல்காப்பியம், தொல்காப்பியரின் வகுப்புத் தோழரான பழம்பாடனார் என்பவரின் பாயிரத்தோடு தான் துவங்குகிறது.

**கல்கி:** பின் நவீனத்துவம், மேஜிகல் ரியலிசம் போன்ற புதிய 'இஸ'ங்கள் தமிழில் முளைத்திருக்கின்றன. இது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

**கலைஞர்:** பார்வைக்கு வரும் எல்லாவற்றையும் படித்துக் கொண்டுதானிருக்கிறேன். சிறந்த நவீனங்கள் பல வருகின்றன. ஆனால் சிலவற்றை அகம் வாட, முகம் சுளித்துக் கொண்டு படிக்க வேண்டியிருக்கிறது.

**கல்கி:** நவீன எழுத்தாளர்களின் எழுத்துக்களைப் படித்திருக்கிறீர்களா?

**கலைஞர்:** படிக்கிறேன். எதையும் ஒதுக்குவதில்லை. கருத்து மாறுபாடு உடைய எழுத்துக்கள் வந்தாலும், நாம் ஒதுக்கக் கூடாது; சீர் தூக்கிப் பார்க்க வேண்டும்.

**கல்கி:** தலித் இலக்கியம்' என்று தனியாக சிலாகித்துப் பேசப்படுகிறது. இது பற்றி உங்கள் கருத்து?

**கலைஞர்:** 'தலித்' என்பதைத் தனித்துக் காட்டிப் பார்க்க நான் விரும்பவில்லை. அவர்களது உரிமைகள், நலன்கள், தனித்து கவனிக்கப்பட்டுப் பொதுவில் வைக்கப்பட வேண்டும்.

**கல்கி:** தி.மு.க.வில் இப்போது படைப்பாளிகளும் குறைந்து விட்டார்கள்; படிப்பாளிகளும் குறைந்து விட்டார்களே!

**கலைஞர்:** இளைய தலைமுறை என்று அல்ல! ஏற்கெனவே ஆர்வம் காட்டியவர்களுக்கும் அந்த ஆர்வம் குறைந்துவிட்டது. சமீபத்தில் எனது கடிதத்தில்கூட இது பற்றிச் சொல்லியிருந்தேன். இந்த வகையில் உற்சாகம் ஏற்படத்தான், இலக்கிய அணி போன்ற அமைப்பை வைத்திருக்கிறோம். அடிக்கடி ஆய்வுக் கூட்டங்கள், சிறப்புக் கூட்டங்கள் நடத்தப்பட வேண்டும்.

**கல்கி:** உங்கள் இலக்கிய வாரிசாக மகள் கனிமொழியைச் சொல்லலாமா?

**கலைஞர்:** இலக்கிய வாரிசு என்று சொல்ல வேண்டாம். அவுங்க நல்லா கவிதை எழுதுவாங்க.

**கல்கி:** உங்களிடம் ஆலோசனை கேட்பதுண்டா?

**கலைஞர்:** நான் எழுதற கவிதைகளைப் படிச்சாலே போதும் (சிரிக்கிறார்) விவாதம் செய்வது கிடையாது. கருத்துகளுக்கிடையில் விவாதம் வரும்; எழுத்துக்களைப் பற்றிய விவாதம் வராது.

**கல்கி:** இப்போது வாழக்கைப் பிரச்னையே பெரிய விவகாரம் ஆகிய நிலையில், இலக்கியங்கள் எந்த அளவுக்கு, ஒரு தமிழனைத் தொடும்?

**கலைஞர்:** பொருள் தேடி அலையும் தமிழர்கள், அப்படியே பொருளதிகாரத்தையும் தேடி அலைய வேண்டுமென்பதற்காகத்தான் இலக்கியங்களை எளிதாக்கிக் காட்டுகிறேன்.

**கல்கி:** உங்களுடைய எழுத்துக்களில், நையாண்டி, நகைச்சுவை இருக்கும். ஆனால் இப்போது நகைச்சுவை எழுத்துக்கள் அரிதாகி வருகிறதே!

**கலைஞர்:** அன்றாட வாழ்க்கையில் நகைச்சுவை குறைந்து போனதன் எதிரொலிதான் அது.

**கல்கி:** இனி தொல்காப்பியத்திற்கு அடுத்து...

**கலைஞர்:** அதிலேயே இன்னமும் எழுத வேண்டியது நிறைய இருக்கிறதே! இளம்பூரணர் தவிர மற்றவர்கள் பகுதி, பகுதியாகத்தானே எழுதியிருக்கிறார்கள்.

**கல்கி:** அப்போ தொல்காப்பியப் பூங்கா பாகம் இரண்டு படிக்க எங்களுக்கு வாய்ப்பு இருக்கு!

**கலைஞர்:** (எனக்கு) வயது இருக்கணுமே! (சிரிப்பு)

**ப்ரியன், ஏக்நாத்**

அட்டை, படங்கள்: யோகா

# ஈடு செய்ய முடியுமா?

☒ பல போராட்டங்களுக்குப் பிறகு இழந்த பதக்கத்தை சுனிதா ராணி திரும்பப் பெற்றது திருப்திதான். அதனால் அவர் அடைந்த மன வேதனையை எதனால் ஈடு செய்ய முடியும்?

திருவாரூர், எஸ்.பாலசந்தர்




ரூ.100 பரிசுக் கடிதம்

☒ 'விதையொன்று போட்டால் இனி சுரையொன்று முளைக்கும்' பழமொழிகள் யாவும் மாற்றப்படும். கடவுளை ஏமாற்றி குளோனிங் முறையில் மனித உயிர்களை இன்றைய விஞ்ஞானி உற்பத்தி செய்து விட்டதால்! பஸ்மாசூரன் கதை என்னவென்று தெரியுமோ அன்று அழிந்த பஸ்மாசூரன் இன்று மறுபிறவி எடுத்து உள்ளான். குரங்கிலிருந்து மனிதன் பிறந்ததாக டார்வின் சொன்னதை மாற்றி மனிதனிலிருந்து குரங்கு உண்டாக்க அறிவு இன்று வளர்கிறது.

மதுரை, கோவை அம்பி

☒ முயற்சி திருவினையாக்கும் என்கிற பழமொழிக்கு உதாரணமாக - பிளாட்பாரத்தில் இட்லிக் கடை வைத்து, தன் வாரிசுகளை நல்ல வேலையில் அமர்த்திய சரஸ்வதி அம்மாளைக் கூறலாம்.

பன்னியானையம், ரஞ்சனிப்ரியன்

☒ கங்குலியும் சச்சின் வழியில் கரண்டியை பிடிக்க கிளம்பி விட்டாரா? கிரிக்கெட்டில் சாதித்தது போதும் என்ற முடிவுக்கு இவர்கள் வந்து விட்டார்களோ? அதுவும் சரிதான்!

திருச்சி, இ. முகம்மது ஹஸன்

☒ தலையங்கம் தமிழகத்தின் எதிர்கால நலன் கருதி மிக அழுத்தமாகப் பல்வேறு விஷயங்களை உணர்த்தி எழுதப்பட்டிருந்தது. தென் மாவட்டங்கள் தீவிரவாதிகளின் புகலிடமாக மாறிவரும் இவ்வேளையில் தமிழக அரசுக்கு அடித்திருக்கும் 'எச்சரிக்கை மணி'தான் இது. வன்முறையும், தீவிரவாதமும் எந்த வகையிலும் மக்களை துன்புறுத்தி விடக் கூடாதபடி பாதுகாக்கப்பட வேண்டியது அரசின் கடமை என்பதை 'பளிச்'சென்று புரிய வைத்த விதம் அருமை.

திருவாரூர், ஆர். ராமசுப்ரமணி

## வட்டமேஜை

☒ புன்னகை பூமி என்கிற 'ஜன்னல்' வழியாகப் தாய்லாந்து வாழ்க்கை முறை மற்றும் கலாசாரம் எல்லாம் தெளிவாகத் தெரிய வந்தது.

பெங்களூர், என்.ராஜா

☒ பத்து வாரங்களாக பழைமையான ஒரு நாட்டைப் படம் பிடித்துக் காட்டிய 'புன்னகை பூமி' தொடர் பாதுகாக்கப்பட வேண்டிய படைப்பு. ஆதியில் உலகெங்கும் பாரத கலாசாரம் இருந்தது என்பதற்கான ஓர் ஆதாரமாகக் கொள்ளலாம். இந்து மதக் கோட்பாடுகளை இழித்துக் கூறும் இங்குள்ளோர்களைப் பழித்துக் கூறுவது போல் அமைந்து விட்டது இத்தொடர்.

தஞ்சாவூர், ஜி. ராமதாஸ்



கடன் தொல்லை, தரித்திரம் நீங்கி லக்ஷ்மி கடாக்ஷம் பெருக, ஆயுள் விருத்தியாக



# புண்ணியக்ஷேத்ரம் இராமேஸ்வரத்தில் தை அமாவாஸை திதியில்

## வேஷ்டி, புடவை தானமளித்து அன்னதானம் செய்வோம் வாருங்கள்!

அன்புடையீர், அனேக நமஸ்காரம். தலம், தீர்த்தம், மூர்த்தி இவற்றால் சிறப்புக்குரிய பல க்ஷேத்ரங்களில் இராமேஸ்வரம் பெருமைமிக்க புண்ணிய ஸ்தலமாகும். ராமஸேது என்றும், ஸேது ஸ்தலம் என்றும் போற்றப்படும் இராமேஸ்வரம் புகழ்மிக்க புண்ணிய க்ஷேத்ரமாகும். இராமேஸ்வரத்தில் அன்னதானம் செய்வதும் ஜபம், ஹோமம், தானம் செய்வதும் அழியாத புண்ணியப் பலன் கிடைக்கும்.

இராமேஸ்வரத்தில் அமாவாஸை தினத்தில் அன்னதானம் செய்தால் மனித குலம் மாபெரும் புண்ணியத்தை பெறும். புத்திரப்பேறு உண்டாகும். நாகதோஷம் முதலியன நீங்கும். அனைவரும் நலம் பெறுவர். இராமேஸ்வரத் தில் அமாவாஸை அன்று அன்னமளிப்பவன் ப்ராணனளிப்பவன் ஆகிறான். அன்னமளிப்பது அமிர்தமளிப்பதற்கு சமம். இந்த புண்ணிய பூமியில் அன்ன மளிப்பவன் மிக்க செல்வந்தராய் பிறப்பான். வறுமை நீங்கி, பெரும் பணக்காரனாவான். அன்னதானம் செய்பவனுக்கு போகமும், ஆயுளும், அழகும் பெருகும். பலம், புகழ், கீர்த்தி இவை உண்டாகும்.

★ தடைபட்ட திருமணம், புத்திர பாக்யம் இவை உண்டாகும் ★ வறுமை அகல ★ கொடிய நோய்கள் நீங்க ★ தொழில் மந்தம் நீங்கி முன்னேற்றம் காண ★ பிரிந்தவர்கள் ஒன்றுசேர ★ நீண்ட ஆயுள், கடன் தொல்லையிலிருந்து விடுதலை ★ மனநிம்மதி பெற ★ பெற்றோர், மூதாதையர் நினைவு நாளில் ★ ஆக நீங்கள் நினைத்த காரியம் நிறைவேற நாங்கள் உங்கள் சார்பாக அன்னதானமளித்து, பிரஸாதம் அனுப்பி வைக்கிறோம்.

★ வஸ்த்ர தானம் செய்திட வேஷ்டி புடவைகளை வாங்கி அன்பர்கள் கூரியர் மூலம் அனுப்பி வைக்கலாம்.
★ ரூ.500 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் ஒரு ஆண்டுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.1000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
★ ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு கோபுர தரிசனம் மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

ரூ.1000, ரூ. 5000 அனுப்பும் அன்பர்களுக்கு கந்தபுராணம் அல்லது பகவத்கீதை புத்தகம் அனுப்பி வைக்கப்படும். விசேஷமான தை அமாவாஸையில் ஏழை எளியோர்களுக்கும், சாதுக்களுக்கும், அந்தணர்களுக்கும் அன்பர்கள் சார்பாக வேஷ்டி, புடவைகளை வாங்கி எமது அறக்கட்டளை வஸ்த்ர தானம் செய்யவிருக்கிறது என்பதைத் தெரிவித்துக் கொள்கிறோம். புதிய வஸ்த்ரங்களை வாங்கி அனுப்பி அன்பர்களும் பங்கு கொள்ளலாம். ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்திக்கு அணில் செய்த ஸேவை போல் இந்த லோக க்ஷேமத்திற்கு நம்மால் இயன்றளவில் உபகாரம் செய்திடுவோம்.

நன்கொடை அனுப்பும் அன்பர்கள் GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST, CHENNAI-41 என்ற பெயரில் CHEQUE/D.D./M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். புனித ஸேவையில் மனப்பூர்வமாக செயலாற்றும் எமது பணிக்கு உங்களது மேலான ஒத்துழைப்பை என்றென்றும் நாடுகிறோம்.

*CHEQUE/D.D./M.O. அனுப்ப வேண்டிய முகவரி :*

**கோபுர தரிசனம் அன்னதான அறக்கட்டளை**

**GOPURA DHARISANAM ANNADHANA CHARITABLE TRUST**

M-11/F-4, TNHB FLATS, I MAIN ROAD, THIRUVALLUVAR NAGAR,
THIRUVANMIYUR, CHENNAI - 600 041. SOUTH INDIA
☎: 24900303, 24900603 Fax: (044) 24916316

★ நீங்கள் தேடும் மனநிம்மதி அன்னதானத்தில் கிடைக்கிறது ★ ஸர்வேஜனா: - ஸுகினோபவந்து

# சிவகாமியின் சபதம்

## முப்பத்தேழாம் அத்தியாயம்

## புலிகேசியும் சிவகாமியும்

சத்ருக்னன் கூறி வந்த வரலாற்றில் மேற்கண்ட இடத்துக்கு வந்ததும் மாமல்லருக்கு மூச்சு நின்றுவிடும் போல் இருந்தது. மேலே நடந்ததைத் தெரிந்து கொள்ள அவர் அவ்வளவு ஆவலாயிருந்தார். ஒரு கண நேரத்திற்குள் அவருடைய மனம் என்னவெல்லாமோ கற்பனை செய்தது. சத்ருக்னனும் சிவகாமியும் புறப்பட்டு ஓடி வந்திருக்க வேண்டும் என்றும், மறுபடியும் வழியில் அவளுக்கு ஏதாவது ஆபத்து ஏற்பட்டிருக்க வேண்டும் என்றும் நினைத்தார். அவளை அந்த ஆபத்திலிருந்து மீட்டுக் கொண்டு வருவதற்கு அவருடைய உள்ளம் துடித்தது.

"சத்ருக்னா! ஏன் இப்படிக் கதையை வளர்த்திக் கொண்டிருக்கிறாய்? சிவகாமியை எங்கே விட்டுவிட்டு வந்தாய்? சீக்கிரம் சொல்லு" என்று ஆத்திரத்துடன் கேட்டார்.

"பிரபு, சிவகாமி அம்மை இப்போது வடபெண்ணை நதிக்கு அப்பால் போய்க் கொண்டிருப்பார்! பொன்முகலி ஆற்றுக்கும் வட பெண்ணைக்கும் மத்தியில் அவரை நான் விட்டுவிட்டு வந்தேன். பாவி!'' என்று சத்ருக்னன் துயரக் குரலில் கூறினான்.

மாமல்லரின் கண்களில் தழற்பொறி பறந்தது. புலிகேசியிடம் வந்த கோபத்தைக் காட்டிலும் சத்ருக்னனிடம் அதிகக் கோபம் அவருக்கு வந்ததாகத் தோன்றியது.

"இதென்ன? சிவகாமியைப் புலிகேசியிடம் விட்டுவிட்டு நீ மட்டும் தப்பி வந்தாயா? சத்ருக்னா! என்னிடம் விளையாட வேண்டாம். சீக்கிரம் விஷயத்தைச் சொல்!" என்று கர்ஜனை புரிந்தார்.

அப்போது ஆயனர், மாமல்லருக்குக் காரணம் விளங்காத உற்சாகம் நிறைந்த குரலில், "பிரபு! சத்ருக்னன் சொல்கிறபடி

அமரர் கல்கி

சொல்லி வரட்டும். தயவு செய்து சற்றுப் பொறுமையாகக் கேளுங்கள்!" என்றார். சத்ருக்னன் மறுபடியும் சொல்லத் தொடங்கினான்.

"சிவகாமி அம்மை உடனே என்னுடைய யோசனையைச் சந்தோஷமாய் ஒப்புக் கொண்டு தப்பிச் செல்ல இணங்குவார் என்று எதிர்பார்த்தேன். இதில் பெரும் ஏமாற்றம் அடைந்தேன். அதுவரையில் தைரியமாயிருந்த சிவகாமி அம்மை என்னுடைய யோசனையைக் கேட்டதும் திடீரென்று விம்மி அழத் தொடங்கினார். முகத்தைக் கைகளால் மூடிக் கொண்டு தேம்பினார். எனக்கு ஒன்றும் புரியவில்லை. அவரைச் சமாதானப் படுத்த முயன்றேன். அப்போது சிவகாமி அம்மை என்னை வெறித்துப் பார்த்து, 'அவருடைய வாக்குறுதியை நம்பி இந்தக் கதி அடைந்தேன்' என்றார். உடனே, 'இல்லை, இல்லை. அவர் பேச்சைக் கேளாததால் இந்த விபரீதம் வந்தது. இனி அவருடைய முகத்தில் எப்படி விழிப்பேன்?' என்றார். இன்னும் என்னவெல்லாமோ சம்பந்தமற்ற வார்த்தைகளைச் சொன்னார். இதனாலெல்லாம் என் திகைப்பு அதிகமாயிற்று. ஒருவேளை அவருக்குச் சித்தப்பிரமை ஏற்பட்டு விட்டதோ என்று மிகவும் பயந்து போனேன். பிறகு, சளுக்கர் படைகள் நம் கிராமங்களில் செய்த அட்டூழியங்களைத் தம் கண்களால் பார்த்தது பற்றிச் சிவகாமி அம்மை சொல்ல ஆரம்பித்தார். அப்புறந்தான் அவருடைய அறிவுத் தெளிவைப் பற்றி எனக்கு ஏற்பட்ட சந்தேகம் நீங்கிற்று. அவர் சொன்னவற்றையெல்லாம் சிறிது நேரம் நான் பொறுமையாகக் கேட்டேன். பிறகு, 'அம்மா! மகேந்திர பல்லவரும் மாமல்லரும் இதற்கெல்லாம் பழிக்கு பழி வாங்குவார்கள்!' என்றேன். அப்போது சிவகாமி அம்மைக்கு ஏற்பட்ட ஆத்திரத்தையும் ஆவேசத்தையும் பார்க்க வேண்டுமே? 'ஆம், சத்ருக்னா! ஆம்! பழிக்குப் பழி வாங்கியே தீர வேண்டும்' என்று அவர் அப்போது போட்ட கூச்சலினால் காவலர்கள் சந்தேகங் கொள்ளாமல் இருக்க வேண்டுமே என்று எனக்குப் பயமாய்ப் போய்விட்டது. நல்லவேளையாக அங்கே ஸ்திரீகள் பலர் தூக்கத்திலே புலம்புவதும் பிதற்றுவதும் சகஜமாயிருந்தபடியால், சிவகாமி அம்மையின் கூச்சல் காவலர்களின் கவனத்தைக் கவரவில்லை.

"பிறகு நான் அவரை மெள்ள மெள்ளச் சாந்தப்படுத்தினேன். மறுபடியும் தப்பிச் செல்லும் யோசனையைக் கூறினேன். அப்போது அவர் என்னை வெறித்துப் பார்த்து, "ஐயா, உண்மையாகவே என்னைத் தப்பி வரச் சொல்கிறீரா? இங்கே என்னைப் போல் ஆயிரம் பெண்கள் இருக்கிறார்கள். இவர்களில் சிலர் கட்டிய புருஷனை விட்டு விட்டு வந்திருக்கிறார்கள். சிலர் கைக் குழந்தைகளைக் கதற விட்டு வந்திருக்கிறார்கள். இவர்களை எல்லாம் அந்தச் சளுக்க ராட்சதர்கள் கொண்டு போகும்படி விட்டுவிட்டு நான் மட்டும் தப்பிச் செல்ல வேண்டுமா? எனக்குத் தாலி கட்டிய கணவன் இல்லை; வயிற்றில் பிறந்த குழந்தையும் இல்லை. நான் எக்கேடு கெட்டுப் போனால் என்ன? என்னை விட்டு விடுங்கள்; இங்குள்ள கைக் குழந்தைக்காரிகளில் யாராவது ஒருத்தியை அழைத்துப் போங்கள். உங்களுக்குப் புண்ணியம் உண்டாகும்' என்றார். என் மனமும் இளகிவிட்டது. ஆயினும் மனத்தைக் கெட்டிப்படுத்திக் கொண்டு, 'அம்மா! மகேந்திரச் சக்கரவர்த்தி எனக்கு இட்ட கட்டளை தங்களைப் பத்திரமாய் அழைத்து வர வேண்டும் என்பதுதான். நான் சக்கரவர்த்தியின் ஊழியன். அவருடைய கட்டளையை நிறைவேற்ற வேண்டியவன்' என்றேன். இதனால் அவருடைய மனம் மாறாது என்று எனக்குத் தெரிந்தேயிருந்தது. ஆதலின் மறுபடியும், 'அம்மா! உங்களுக்குப் புருஷனில்லை. குழந்தை இல்லை என்பது உண்மைதான். ஆனால் தந்தை ஒருவர் இருக்கிறார் அல்லவா? ஏக புத்திரியாகிய தங்களைப் பிரிந்து அவருடைய மனம் என்ன பாடுபடும்? அதை யோசிக்க வேண்டாமா?' என்றேன்.

"சிவகாமி அம்மையின் கண்களில் அப்போது கண்ணீர் துளித்தது. தழுதழுத்த குரலில், 'ஆம்; என் தந்தைக்குப் பெரிய துரோகம் செய்துவிட்டேன். ஐயோ! அவர் பிழைத்தாரோ இல்லையோ?' என்றார். அம்மா! அவரைப் பிழைப்பிக்க விரும்பினால் நீங்கள் உடனே என்னுடன்



எண்ணி, 'ஆகட்டும், அம்மா! ஒரு நாளில் ஒன்றும் குடிமுழுகிப் போகவில்லை. நாளைக்கே முடிவு செய்யலாம்' என்று சொன்னேன்.

"மறுநாள் இராத்திரி எப்படியாவது அவருடைய மனத்தைத் திருப்பி அவரையும் அழைத்துக் கொண்டு திரும்பலாம் என்று எண்ணியிருந்தேன். ஆனால் மறுநாள் மாலை நான் சற்றும் எதிர்பாராத சம்பவம் நடந்துவிட்டது. சளுக்கச் சக்கரவர்த்தி புலிகேசி பொன்முகலியாற்றைக் கடந்து வந்து எங்களுடன் சேர்ந்து கொண்டார். அவருடன் ஒரு சிறு சைனியமும் வந்தது! தளபதி சசாங்களை அங்கேயே காவலுக்கு நிறுத்திவிட்டு இவர் மட்டும் முன்னால் செல்லத் தீர்மானித்து வந்திருக்கிறார் என்று ஊகித்தேன். அதன்படியே

புறப்பட வேண்டும்!" என்றேன் நான். சிவகாமி அம்மை மறுபடியும் முகத்தைக் கையால் மூடிக் கொண்டு விம்மினாள். சீக்கிரம் கையை எடுத்துவிட்டு, 'ஐயா! இன்று ஒரு நாளைக்கு எனக்கு அவகாசம் கொடுங்கள். என் உடம்பும் உள்ளமும் சோர்ந்து போயிருக்கின்றன. இப்போது நான் புறப்பட எண்ணினாலும் ஓர் அடி கூட என்னால் எடுத்து வைக்க முடியாது. நாளைக்கு முடிவாகச் சொல்கிறேன்' என்றார். நானும் அவருக்கு ஒருநாள் அவகாசம் கொடுப்பது நல்லது என்று

அன்று இரவுக்கிரவே எல்லாரும் வடக்கு நோக்கிப் பிரயாணமானோம். எனக்கு ஏற்பட்ட ஏமாற்றத்தையும் துக்கத்தையும் சொல்ல முடியாது. வழியில் சிவகாமி அம்மையோடு தனியாயிருக்க நேர்ந்தபோது, 'அம்மா! இப்படிச் செய்துவிட்டீர்களே!' என்றேன். 'நானா செய்தேன்? விதி இப்படி இருக்கும்போது நான் என்ன செய்வேன்!' என்றார் சிவகாமி. இரண்டு நாள் பிரயாணத்திற்குப் பிறகு மூன்றாவது நாள் திருவேங்கட மலையின் அடிவாரத்தில் சென்று தங்கினோம். முதல் இரண்டு

நாள் பிரயாணத்தில் புலிகேசி நாங்கள் தங்கியிருந்த பக்கம் வரவேயில்லை. மூன்றாம் நாள் மாலை நாங்கள் ஒரு பாறையின் பக்கத்தில் தங்கியிருந்தோம். சமீபத்தில் குதிரைகளின் காலடிச் சத்தம் கேட்டது. சிறிது நேரத்துக்கெல்லாம் புலிகேசியும் இன்னும் சில குதிரை வீரர்களும் அந்தப் பாறையின் திருப்பத்தில் வந்து நின்றார்கள். சக்கரவர்த்தி குதிரை மேலிருந்து இறங்கி எங்கள் அருகில் வருவாரோ என்று நான் எதிர்பார்த்தேன். அவ்விதம் நடைபெறவில்லை. சற்று நின்று பார்த்து விட்டுச் சக்கரவர்த்தி குதிரையைத் திருப்ப யத்தனித்த போது தான் சற்றும் எதிர்பாராத அதிசயச் சம்பவம் நடைபெற்றது. கண்ணை மூடித் திறக்கும் நேரத்தில் சிவகாமி பெண்கள் கூட்டத்தின் மத்தியிலிருந்து ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து ஓடினார். புலிகேசியின் குதிரைக்கு எதிரில் வழிமறித்து நின்று, 'சக்கரவர்த்தி! ஒரு விண்ணப்பம்' என்று அலறினார்.

"சிவகாமி அம்மையின் அலறலைக் கேட்டு அந்தக் கல் நெஞ்சன் புலிகேசி மனம்கூட இளகியிருக்க வேண்டும். உடனே, புலிகேசி குதிரையிலிருந்து கீழே குதித்துச் சிவகாமியின் அருகில் வந்தார். 'பெண்ணே! என்ன விண்ணப்பம் செய்து கொள்ள வேண்டும்?' என்று கேட்டார். ஆகா! அப்போது சிவகாமி அம்மையின் வாக்கிலிருந்து வந்த ஆவேச மொழிகளை எவ்விதம் வர்ணிப்பேன்! அத்தனை தைரியமும், சாமர்த்தியமும், வாக்கு வன்மையும் அவருக்கு எங்கிருந்துதான் வந்ததோ, அறியேன். கம்பீரமாகப் புலிகேசியை நிமிர்ந்து பார்த்து, தழுதழுத்த குரலில், சிவகாமி அம்மை கூறிய மொழிகளை ஏதோ எனக்கு ஞாபகம் உள்ள வரையில் கூறுகிறேன்.

''ஐயா! பூமண்டலத்தை ஆளும் மன்னர்களாகிய நீங்கள் உங்களுடைய வீரத்தையும் புகழையும் நிலை நாட்டிக் கொள்ள யுத்தம் செய்கிறீர்கள். இன்றைக்கு எதிரிகளாயிருக்கிறீர்கள்; நாளைக்குச் சிநேகிதர்களாகிறீர்கள்; இன்றைக்கு ஒருவனுடைய அரண்மனையில் இன்னொருவர் விருந்தாளியாயிருக்கிறீர்கள்; மறுநாள் போர்க்களத்தில் யுத்தம் செய்கிறீர்கள். உங்களுடைய சண்டையிலே ஏழைப் பெண்களாகிய எங்களை ஏன் வாட்ட வேண்டும்? உங்களுக்கு நாங்கள் என்ன கெடுதல் செய்தோம்? கருணை கூர்ந்து எங்களையெல்லாம் திருப்பி அனுப்பிவிடுங்கள். இங்கே சிறைப்பிடித்து வைத்திருக்கும் பெண்களில் சிலர் கைக் குழந்தைகளைக் கதற விட்டு விட்டு வந்திருக்கிறார்கள். இன்னும் அநேகர் கையிலே கட்டிய திருமணக் கங்கணத்துடன் வந்திருக்கிறார்கள். இவர்களையெல்லாம் நீங்கள் விடுதலை செய்து அனுப்பாவிட்டால், தங்களுடைய நகரமாகிய வாதாபியை அடைவதற்குள் அவர்களுக்குப் பைத்தியம் பிடித்துவிடும். திக்விஜயம் செய்துவிட்டுத் தலைநகருக்குத் திரும்பும்போது சித்தப் பிரமை பிடித்த ஆயிரம் ஸ்திரீகளை அழைத்துக் கொண்டு போவீர்களா? அதில் உங்களுக்கு என்ன லாபம்? ஆயிரம் பெண்கள் மனமார வாயாரத் தங்களை வாழ்த்திக் கொண்டு வீடு திரும்பும்படி செய்யுங்கள்!' - இப்படிக் கல்லுங் கரையுமாறு சிவகாமி அம்மை கேட்டதற்கு, 'பெண்ணே! உன்னுடைய பாவ அபிநயக் கலை சாமர்த்தியங்களையெல்லாம் நாட்டியக் கச்சேரியில் காட்ட வேண்டும்; இங்கே போர்க்களத்திலே காட்டி என்ன பிரயோஜனம்!' என்றான் அந்த ரஸிகத் தன்மையற்ற நிர்மூடன்...!''

சத்ருக்னன் இவ்வாறு சொன்னபோது, மாமல்லர் ஒரு நெடு மூச்சுவிட்டு, "ஆகா! ஆயனரின் மகள் அந்த நீசனிடம் போய்க் காலில் விழுந்து வரம் கேட்டாள் அல்லவா? அவளுக்கு வேண்டியதுதான்!'' என்று கொதிப்புடன் கூறினார்.

சத்ருக்னன் மேலே சொன்னான்: "ஆம், பிரபு! சிவகாமி அம்மையும் தங்களைப் போலவே எண்ணியதாகத் தோன்றியது. புலிகேசியின் மறுமொழியைக் கேட்டு அவர் தலையைக் குனிந்து கொண்டார். சிறிது நேரம் தரையைப் பார்த்த வண்ணம் இருந்தார். அப்போது அந்தச் சண்டாளப் பாவி, 'பெண்ணே! உன் அபிநய சாகஸத்தைக் கண்டு நான் ஏமாந்து விட மாட்டேன். ஆனால் உன் பேச்சில் கொஞ்சம் நியாயம் இருக்கிறது.

ஆகையால் உன் வேண்டுகோளை நிறைவேற்ற இணங்குகிறேன். ஆனால் அதற்கு ஒரு நிபந்தனை. நீ இந்தப் பெண்களுக்காக மிகவும் இரங்கிப் பேசினாய். உன்னுடைய இரக்கம் வெறும் பாசாங்கு இல்லை என்பதை நீ நிரூபிக்க வேண்டும். இவர்கள் கட்டிய கணவனைப்



# அருள்வாக்கு

கலா என்கிற சமஸ்கிருத வார்த்தை, கல்வி என்கிற தமிழ்ச் சொல், கல்ச்சர் என்கிற ஆங்கிலப் பதம், கொலே என்கிற பிரெஞ்சு வார்த்தை எல்லாவற்றுக்கும் மூலம் ஒன்றே. கலை சர்வ தேசத்தையும் தழுவுகிற விஷயமாதலால், வார்த்தையும் ஒன்றாகவே இருக்கிறது. 'கலா' என்றால் எப்போதும் வளருவது என்று பொருள் - சந்திரகலை என்கிறோமே அது போல், பிறை தினந்தோறும் வளர்வது போல், மன வளர்ச்சியைத் தருவது கலை. முடிவே இல்லாமல் வளர்வது இது. 'கற்றது கைமண்ணளவு' என்று, சரஸ்வதியே கற்றபடிதான் இருக்கிறாளாம். கலைச் சிறப்பே 'கல்ச்சர்'. கலா'சாரம்' என்று இதைச் சமீப காலமாகச் சொல்கிறோம். பண்பு, பண்பாடு என்பது பழைய வார்த்தை.



உயர்ந்த எண்ணம் வளர்ந்து வளர்ந்து பல கலைகளாக உருவெடுத்திருக்கிறது. உயர்ந்த எண்ணங்கள் ஒவ்வொருவரிடத்தில் ஒவ்வொரு விதமாக உருவெடுக்கின்றன. சிற்ப ரூபமாக, சித்திர ரூபமாக, நாட்டிய ரூபமாக, சங்கீத ரூபமாக, காவிய ரூபமாக, தியாக ரூபமாக, சேவை ரூபமாக, தான ரூபமாக, இப்படிப் பல உருவங்களாக உயர்ந்த எண்ணம் வெளிப்படுகிறது. இந்த உயர்ந்த எண்ணம் மிகவும் உயர்ந்து, விரிந்து எடுத்துக் கொள்கிற உருவமே, எல்லா உயிர்களிடமும் அன்பு. உலகம் முழுக்க ஒன்றாகி விட வேண்டும் என்று எண்ணுகிற அன்பில், பிறப்பதே மிகப் பெரிய பண்பாடு. இதுவே நமக்கெல்லாம் தலையான கலை.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி**
**ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி**
**சங்கராச்சார்ய சுவாமிகள்**

பிரிந்து வந்தவர்கள் என்றும், கைக் குழந்தைகளைப் பிரிந்து வந்தவர்கள் என்றும் சொன்னாயல்லவா? ஆனால் உனக்குக் கணவனும் இல்லை, குழந்தையும் இல்லை. நீ என்னுடன் வாதாபிக்குச் சந்தோஷமாய் வருவதற்குச் சம்மதிக்கிறாயா, சொல்லு! சம்மதித்தால் உன்னைத் தவிர இவர்கள் எல்லாரையும் இந்தக் கணமே விடுதலை செய்து அனுப்பிவிடுகிறேன்' என்றான். அந்த மொழிகளைக் கேட்டதும், அந்தப் பாவியை அங்கேயே கொன்றுவிடலாமா என்று எண்ணினேன்."

மாமல்லர் குறுக்கிட்டு, 'நிபந்தனைக்குச் சிவகாமி சம்மதித்தாளா?'' என்று குரோதம் ததும்பிய குரலில் கேட்டார்.

"ஆம், பிரபு! சிவகாமி அம்மை ஒரு கணங்கூடத் தாமதிக்கவில்லை. உடனே எழுந்து நின்று, "சம்மதம், சக்கரவர்த்தி! நிபந்தனையை ஒப்புக் கொள்கிறேன்' என்றார். அச்சமயம் சிவகாமி அம்மை நின்ற நிலையும், அவருடைய முகத் தோற்றமும் தெய்வீகமாயிருந்தது! இராவணனுக்கு முன்னால் நின்ற சீதையையும், துரியோதனன் சபையில் நின்ற பாஞ்சாலியையும், யமன் முன்னால் வாதாடிய சாவித்திரியையும், பாண்டியன் முன்னால் நின்ற கண்ணகியையும் ஒத்து அச்சமயம் ஆயனரின் திருக்குமாரி விளங்கினார்..."

"சத்ருக்னா! உன்னுடைய பரவச வர்ணனை அப்புறம் இருக்கட்டும், பின்னர் என்ன நடந்தது?'' என்று மாமல்லர் கேட்டார்.

"சற்று நேரத்துக்கெல்லாம் சக்கரவர்த்தி எங்களை விடுதலை செய்யும்படி கட்டளையிட்டார். பொன்முகலி ஆறு வரையில் எங்களைத் திரும்பக் கொண்டு போய் விட்டு விடும்படியும் சில வீரர்களுக்கு ஆக்ஞாபித்தார். அவ்வளவு நாளும் அழுத கண்ணும் சிந்திய மூக்குமாயிருந்த ஸ்திரீகள் எல்லாரும் இப்போது ஒரே சந்தோஷத்தில் ஆழ்ந்தார்கள். சிவகாமியைத் தலைக்குத் தலை வாழ்த்தினார்கள். ஆனால் எனக்கு இடி விழுந்தது போலிருந்தது. சிவகாமியின் காலில் விழுந்து, 'அம்மா! உங்களை

விட்டு நான் போக மாட்டேன். சக்கரவர்த்தியிடம் மறுபடியும் வரங் கேட்டு என்னை உங்களுடனே வைத்துக் கொள்ளுங்கள்' என்றேன். சிவகாமி ஒரே பிடிவாதமாக, 'நீதான் முக்கியமாய்ப் போக வேண்டும். என் தந்தையிடம் போய்ச் செய்தி சொல்ல வேண்டும்' என்றார். நான் எவ்வளவோ சொல்லியும் கேட்கவில்லை. கடைசியில் வேறு வழியில்லையென்று நானும் புறப்படத் தீர்மானித்தேன். மேலும் அங்கே தாமதித்தால் என்னுடைய வேஷம் வெளிப்பட்டுச் சிவகாமிக்கும் உபயோக மில்லாமல் இங்கே வந்து சொல்லவும் முடியாமற் போய்விடலாம் என்று பயந்தேன். ஆகவே, 'தங்கள் விருப்பம் அதுவானால் போகிறேன், அம்மா! அப்பாவுக்கு என்ன செய்தி சொல்லட் டும்?' என்று கேட்டேன். 'என்னைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்றும், வாதாபியில் நான் 'சௌக்கிய மாயிருப்பேன் என்றும் சொல்லு. வாதாபியிலிருந்து திரும்பி வரும்போது அஜந்தா வர்ண இரகசியத்தைத் தெரிந்து கொண்டு வருவேன் என்றும் சொல்லு' என்றார் சிவகாமி அம்மை..."

இவ்விதம் சத்ருக்னன் சொன்னதும் ஆயனர் துள்ளும் உற்சாகத்துடனே "பார்த்தீர்களா? பல்லவ குமாரா! சிவகாமி சௌக்கியமாயிருக்கிறாள். அதோடு அஜந்தா இரகசியத்தையும் அறிந்துகொண்டு வருவதாகச் சொல்லு கிறாள். அதற்காக நான் பரஞ்சோதியை அனுப்பியதெல்லாம் வீணாகப் போய் விட்டதல்லவா? என் அருமை குமாரி யினால் என் மனோரதம் நிறைவேறப் போகிறது! இது மட்டுமல்ல! வாதாபிச் சக்கரவர்த்தியைப் பற்றி நமது எண்ணத் தைக் கூட மாற்றிக் கொள்ள வேண்டி யிருக்கிறது. அவர் ரஸிகத்தன்மை அற் றவர், கலை உணர்ச்சியே இல்லாதவர் என்று எண்ணிக் கொண்டிருந்தோமே? அப்படியிருந்தால், ஆயிரம் பெண்களைத் திருப்பி அனுப்பி விட்டுச் சிவகாமியை மட்டும் அழைத்துப் போயிருப்பாரா? பிரபு...! எனக்கு மட்டும் உடம்பு குண மாக வேண்டும். குணமானதும் நானே வாதாபிக்குப் போவேன்..."

ஆயனரின் வார்த்தைகள் மாமல் லரின் செவிகளில் நாராசம் போல் விழுந்து கொண்டிருந்தன. சிவகாமி வாதாபிக்குப் போக சம்மதித்தாள் என்ற துமே மாமல்லரை ஆயிரம் தேள்கள் ஏக காலத்தில் கொட்டுவது போலிருந்தது. சிவகாமியிடம் அவர் உள்ளத்தில் கொண்டிருந்த பரிசுத்தமான அன்பில் ஒரு துளி நஞ்சு அப்போது கலந்தது என்றே சொல்ல வேண்டும். சிவகாமி மனமுவந்து புலிகேசியிடம் வாதாபிக்குச் செல்லச் சம்மதித்தாள் என்னும் எண் ணத்தை அவரால் சகிக்க முடியவில்லை. இந்த எண்ணத்தினால் புண்பட்டிருந்த அவருடைய இருதயத்தில் கூரிய வேலை நுழைப்பது போலிருந்தது ஆயனரின் பேச்சு.

மாமல்லர் அப்போது தனிமையை விரும்பினார். பழைய தாமரைக் குளத்துக்குப் போக வேண்டு மென்று அவருக்கு விருப்பம் உண்டா யிற்று. சட்டென்று ஒரு துள்ளலில் எழுந்து நின்று "சத்ருக்னா! அவ்வளவு தானே விஷயம்? சிவகாமி வேறு எந்தச் செய்தியும் அனுப்பவில்லையல்லவா?" என்றார்.

சத்ருக்னன் தயக்கத்துடன் ஆயன ரைப் பார்த்தான். அவர் ஏதோ யோசனையில் ஆழ்ந்திருப்பதைக் கவனித்த பின்னர், சிறிது தாழ்ந்த குரலில், "பல்லவ குமாரா! சிவகாமி அம்மை தங்களுக்கும் ஒரு செய்தி சொல்லி அனுப்பினார். வேலின்மீது ஆணையிட்டுக் கூறிய வாக் குறுதியைத் தங்களுக்கு ஞாபகப்படுத்தச் சொன்னார். சீதாதேவி இலங்கையில் காத்திருந்தது போல் தாங்கள் வாதாபிக்கு வந்து அழைத்துப் போகும் வரையில் காத்திருப்பேனென்று சொன்னார்" என் றான்.

சற்று முன் மாமல்லருக்கு இவ்வுலகம் ஒரு சூனியமான வறண்ட பாலைவன மாகக் காணப்பட்டது. இப்போது அந்தப் பாலைவனத்தில் பசுமையான ஜீவ பூமி ஒன்றும் இருப்பதாகத் தோன்றியது.

(தொடரும்)

# பாட்டுச் சாவடி

தமிழ்த்திரைப்படங்கள் மீது தனது ஆதிக்கத்தைத் தீவிரமாய் செலுத்தி வரும் கானா பாடல்களின் தாயகம், சென்னைக் கல்லூரிகள் என்று சொன்னால் ஆராய்ச்சியாளர்கள் 'ஆம்!' என்பார்கள்.



பேட்டைத் 'தமிழும்', 'இங்கிலீஷும்' கைகோத்துக் கொள்ள, எக்குத்தப்பான எதுகைமோனைச் சொற்களின் தயவில் துள்ளாட்டம் போட வைக்கும் கானா பாடல்களுக்கு எந்தக் கல்லூரியை அணுகுவது என்று விசாரித்தோம். நந்தனம் ஆடவர் அரசுக் கலைக் கல்லூரியைக் கை காண்பித்தார்கள். கல்லூரி வளாகத்தை நெருங்கிய நமக்கு கதி கலங்கிப் போனது. காரணம், கல்லூரி வாயிலில் ஒரு போலீஸ் ஜீப். நாலைந்து காக்கி உடுப்புகள்... "இந்தக் கல்லூரின்னு இல்லே சார்... இன்னக்கி சென்னையிலே இருக்கிற பெரும்பாலான அரசு, தனியார் கல்லூரிகளைக் காவல் காக்கிறதே போலீசுக்குப் பெரிய டியூட்டியாப் போச்சு" என்று சொல்லி, நம்மை உள்ளே அழைத்துப் போன வரலாற்றுத்துறை மாணவர் தீனா...

வகுப்புக்கள் முடிந்து, கல்லூரி விளையாட்டுத் திடலில் திட்டுத் திட்டாய் அமர்ந்திருந்த மாணவர்களைப் பார்த்து, "ஏய் மச்சான்களா... கானா பாட்டு வேணுமாண்டா" என்று குரல் கொடுத்தார். அவ்வளவுதான், நீ, நானென்று ஒரு நூறு பேர் சூழ்ந்து கொண்டு, நம்மை நடுவில் உட்கார வைத்து, கானாக்களை கைத் தட்டியபடி பாடி, அசத்த ஆரம்பித்தார்கள்.

திடீரென்று, "எங்கடா நம்ம காசி"– என்று ஒரு சீனியர் கேட்க, வரலாற்றுத் துறை மாணவர் பாஸ்கரை அழைத்து வந்தது ஒரு குழு!

அடுத்த நொடி, கருவிழிகளை உள்ளே செருகி, வெள்ளை விழிகள் மட்டும் தெரிய, கையில் ஒரு குச்சியுடன் காசி விக்கிரம் மாதிரி வாயைக் கோணியபடி, "என் மன வானில்" பாடல் மெட்டில் பாட ஆரம்பித்தார்...

"நந்தனம் ஆர்ட்சில்
பட்டம் படிக்கும்
இளமை
இதயங்களே...
உங்கள் அரியர்ஸ்
கேட்டால் எங்கள்
இதயமும் புண்ணாய்
மாறிவிடும்...
கலகலவென துள்ளித்திரியும்
சீனியர் அண்ணன்களே...
நம்ம கான்வோகேஷன்
கனவாப் போச்சி கதறி
அழுதிடுங்கோ...
கரண்டு இயரில் டிகிரி
முடிச்சா
கண்ணு பட்டு விடும்...
கவலையை விட்டு அரியர்ஸ்
எழுது
காலம் உன் கையில்..."

இப்படித் தொடர்ந்த காசியின்

• பாஸ்கர்

சினிமா கானாவுக்கு முற்றுப்புள்ளி வைத்து, "ஒரிஜினல் கானாவுல ஒண்ணு வுடுப்பா" என்று சீனியர்கள் பிறப்பித்த உத்தரவுக்கு உடனடியாகத் தலைவணங்கி, அசத்தினார் மற்றொரு வரலாற்றுத் துறை மாணவரான அம்பேத்கர்!

அவர் பாடிய கானாவின் ஆழமான கருத்துக்கள்(?!) நம் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன.

"பொரண்டு பொரண்டு
படுத்துக்கிட்டு நாஷ்டா
துன்னாதே...
மொரண்டு மொரண்டு பார்க்கும்
பிகரை ஃபாலோபண்ணாதே...
கட் அடிச்சி காண்டீனிலே
அக்கவுண்ட் ஏத்தாதே...
பிட் அடிச்சி மாட்டிக்கிட்டு
ஃபீலு பண்ணாதே...
ஃபுட் போர்டில் தொங்கிக்கிட்டு
கானா பாடாதே....
பிரௌசிங் சென்டர்
போயிகெட்டு பின்னால்
வாடாதே...
அப்துல் கலாம் கூட முன்னால்
ஸ்டூடண்டுதானே.
அய்யா இப்ப ஆயிட்டாரு
பிரசிடண்டுதானே!
அவரப் போல ஆகிக் காட்டு
ஜூனியர் ஞானம்...
அதுக்கு அவர் சொல்லுறதை
கேக்க வேணும்...
ரூட்டப்பத்தி கனவு கண்டா
குளோஸ்டா ரமேசு,
நாட்டப்பத்தி கனவு
கண்டா பாஸ்டா
மகேசு...'





# "ரூட்டப்பத்தி கனவு கண்டா குளோசுடா ரமேசு! நாட்டப்பத்திக் கனவு கண்டா பாசுடா மகேசு!"

— இப்படித் தொடர்ந்து கானா மழையில் நனைந்து கொண்டிருந்த நம்மை, திடீரென்று புதிய அனுபவத்தில் மூழ்க அடித்தார்கள் பி.காம் இறுதியாண்டு பயிலும் முருகன், மகேந்திரன், கணேஷ் மூவரும். மகேந்திரனும் கணேசும் டீ.வி. பெட்டியாக மாறிவிட, முருகன் செய்தி வாசிப்பாளராக மாறி அதிரவைத்தார்... கவனிக்க... இனி நீங்கள் காது கொடுத்துக் கேட்கப் போகும் செய்திகள் அனைத்தும், அக்மார்க் கற்பனை கலந்தவை. இனி செய்திகள்...

"உள்ளதை உள்ளபடி திரிக்காமல், குறைக்காமல், நடுநிலையான செய்திகளைத் தாமதமாகத் தரும் நந்தனம் ஆர்ட்ஸ் செய்திகள்... அடுத்து வருவது"

"வணாக்காம், இன்றைய, நாளைய முக்கியச் செய்திகள்!

வீரப்பனை உயிருடனோ பிணமாகவோ பிடித்துத் தருபவர்களுக்கு இரண்டு கோடி ரூபாய் சன்மானம் அறிவித்திருந்த கர்நாடக அரசு, ஒரே இரவில் அதை ஐந்து கோடியாக உயர்த்தியது பழைய செய்தி! தற்போது நடைபெற்றுக் கொண்டிருக்கும் கர்நாடக

அமைச்சரவைக் கூட்டத்தில், இதை ஐம்பது கோடியாக உயர்த்திட ஆலோசித்து வருவதாக சற்று முன் வந்த தகவல் தெரிவிக்கிறது. இப்படியே சன்மானம் ஏறிக் கொண்டே போனால், திவால் மாநில அரசுகளின் பட்டியலில் கர்நாடக அரசுக்கு இரண்டாவது இடம் கிடைக்கக் கூடும் என்று எதிர்பார்க்கப் படுகிறது. நேயர்கள் கவனிக்கவும். முதலிடம் தமிழக அரசுக்கு என்று அர்த்தம் செய்து கொள்ள வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளப் படுகிறார்கள்.

ஒரு சிறப்புச் செய்தி! நேற்று சந்திரனில் தரையிறங்கிய இந்திய விண்வெளி ஓடம், அங்கே அநாதையாகக் கிடந்த ஒரு கிரிக்கெட் பந்தை படம் பிடித்து அனுப்பியிருக்கிறது. கடந்த மாதம் தென் ஆப்ரிக்காவுடனான ஒரு நாள் போட்டி ஒன்றில் ஷேவாக் அடித்து, தொலைந்து போன பந்து இது என்பதைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். எனினும் தற்போது நியூசிலாந்துடனான ஒருநாள் போட்டிகளில், இந்திய வீரர்களின் ஜல்லி ஆட்டம், குடி மக்களின் இரத்தக் கொதிப்பை அதிகரிக்கச் செய்து வருவதால், இந்திய கிரிக்கெட் அணியைக் கலைத்து விடுவதென்று கிரிக்கெட் வாரியம் முடிவு செய்திருப்பதாக விரைவில் தகவல் வெளியாகக் கூடும். இதனிடையே, இந்திய கிரிக்கெட் அணி கலைக்கப்படும் பட்சத்தில், வீரர்களின் எதிர்காலம் என்னாவது என்று நமது நந்தனம் நிருபர் கேட்டதற்கு, ஒவ்வொரு இந்திய வீரருக்கும், அவரவர் ரசனைக்கேற்ப, காடை வளர்ப்பு, பால் பண்ணை, இறால் ஏற்றுமதி உள்ளிட்ட தொழில்களுக்குக் கடனுதவி வழங்கப்படும் என்றும், பர்மா பஜாரில் கடை வைத்துப் பிழைக்கவும் சிறப்பு ஒதுக்கீடு மூலம் ஏற்பாடு செய்யப்படும் என்றும் கிரிக்கெட் வாரிய வட்டாரங்கள் தெரிவிக்கின்றன.

மிக மிக முக்கியமான செய்தி! தென்னக நதிகள் இணைப்பு சாத்தியமே, என்பதை தனது அடுத்த படத்தின் கதை மூலம் தமிழ் மக்களுக்குத் தெளிவுறக் காட்டி, தமது நேர்மையை ரஜினி நிரூபிக்க இருப்பதாக கோடம்பாக்க வட்டாரங்கள் தெரிவிக்கின்றன. நதி இணைப்புக்கு அவர் தருவதாகச் சொன்ன ஒரு கோடி ரூபாயையும், அந்தப் படத்திற்கே முதலீடு செய்து, தனது வாக்கை காப்பாற்றிக் கொள்ளவும் அவர் முடிவு செய்திருப்பதாக இனி தகவல்கள் வரலாம்.

பொடோவில் சிறை வைக்கப்பட்டிருக்கும் வைகோவின் மன உறுதியைச் சிதைக்க, அவரது அறையில் கொசுக்கள் ஏவி விடப் படுவதாகவும், எதிர்வரும் தேர்தலில் ஆளும் கட்சியுடனான கூட்டணியில் இடம் பெற சம்மதித்தால், அவர் மீதான குற்றப்பத்திரிகையைக் குப்பைக் கூடையில் போடத் தயார் என்றும், அவருக்கு வழங்கப்பட்டிருக்கும் செல்போனில் ஒரு மர்மப் பெண் குரல் அடிக்கடி பேசிவருவதாகச் செய்திகள் நமது காதில் விழவில்லை. உங்களிடமிருந்து விடை பெறும் முன் இன்றைய அதிர்ச்சிகர வதந்திகளில் ஒன்று: சிம்ரன் திருமணத்திற்குப் பிறகு நடிப்பதை நிறுத்திவிடப் போவதாக வேண்டப் பட்டவர்களிடம் சொல்லி வருவதாகத் தகவல். வணக்கம்!"



"மொய்ப் பணத்துக்கு அந்த ஆள் பேயா அலையறான் போலிருக்கு!"

"எப்படி கண்டுபிடிச்சே?"

"கல்யாண மண்டப வாசல்ல அனைத்து கிரெடிட் கார்டுகளும் ஏற்றுக் கொள்ளப் படும்னு டிஸ்பிளே பண்ணியிருக்கார்!"

— புளியறை கணேசன்

செய்திக் கோவையைக் கேட்டு முடித்ததும் நமக்கு இலேசாகத் தலை சுற்றியதால் அங்கிருந்து விடைபெற நினைத்தோம்... ஆனால் வரலாறு படைக்கும் மாணவர்கள்... அதாவது வரலாற்றுத் துறை மாணவர்கள், காம்பவுண்ட் கானா, மரத் தடி கானா என்று நம்மை ஒருவழி செய்தே அனுப்பி வைத்தார்கள்... கல்லூரிக்குப் போய் வந்த பாதிப்பில், நமது புகைப்படக் கலைஞர் அலுவலகம் வந்து சேருவதற்குள் மெட்டமைத்துப் பாடிய கானாவின் முதல் இரண்டு வரிகள் இவை...

"முழிச்ச முகம் சரியில்ல கோவாலு...
மண்டையிலே இருந்த சாந்தும் திவாலு!"

— ஆர்.சி. ஜெயந்தன்

படங்கள்: டிஜிட்டல் சண்முகம்

அருணாசலத்தை வலம்வருவோம்! ஆனந்த வாழ்வைப் பெறுவோம்!

# தெய்வத்திருமலை திருஅண்ணாமலையில் மாதாமாதம் பௌர்ணமி கிரிவலத்தன்று சிவமடத்தில் தீபமேற்றி அன்னதானம் செய்ய அழைக்கிறோம்!

பேரன்புடையீர்! வணக்கம். அருள்மிகு ஸ்ரீ அருணாசலேஸ்வரர் தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம்.

## ஆன்மீக அன்னதான அறக்கட்டளையின் ஐந்தாம் ஆண்டில் தொடர்ந்து அன்னதான சேவை!

• இமயமலையை விட காலத்தால் மூத்ததாகவும் தெய்வத்திருமலையான தீபத்திரு அண்ணாமலை. ஒளி ஒன்றே கண்கண்ட கடவுளின் வடிவம் என்பதை உணர்த்தும் ஆதித் திருத்தலமாக விளங்குவது திருஅண்ணாமலை. திருஅண்ணாமலையாரை 14 கி.மீ. வலம் வந்தால் ஈரேழு 14 லோகங்களையும் சுற்றிய பலன் தரும் திருத்தலம் திருஅண்ணாமலை ஒன்றே ஆகும். இத்தகைய சிறப்புவாய்ந்த திருஅண்ணாமலையில் கிரிவலம் வரும் இறைஅடியார்களுக்கும், பக்தர்களுக்கும் மேலும் அங்குள்ள ஆதரவற்ற முதியோர்கள், உடல் ஊனமுற்றோர்கள், கண்பார்வையற்றோர்கள் ஆகிய அனைவருக்கும் பௌர்ணமி அன்று இரவு அடிஅண்ணாமலையில் உள்ள சிவமடத்தில் அன்னதானம் சிறப்பான முறையில் செய்யப்படுகிறது. இந்தப்புனித அன்னதான இறைபணியில் பங்குகொண்டு தாங்களும், தங்கள் சந்ததியினரும் எல்லாம்வல்ல ஸ்ரீ உண்ணாமுலை சமேத அண்ணாமலையாரின் அரும்பெரும் தெய்வீக அருளையும் பெற இது ஒரு சிறந்த வாய்ப்பாகும்.

தாங்கள் எதை நினைத்து அன்னதானம் செய்ய விரும்புகிறீர்கள் என்பதை தெரிவித்தால் அதன்படி நாங்கள் பௌர்ணமி அன்று அன்னதானம் செய்து பிரசாதத்துடன் ஸ்ரீ அருணாசலேஸ்வரர், ஸ்ரீ உண்ணாமுலையம்மன் படத்தையும் தங்களுக்கு அனுப்பி வைக்கிறோம்.

❖ பிறந்தநாள் ❖ திருமணநாள் ❖ முன்னோர்கள் திதி நாள் ❖ வாழ்க்கையில் உயர்வு ❖ தொழிலில் முன்னேற்றம் பெற ❖ நிரந்தர வேலை பெற ❖ கல்யாண பாக்கியம் பெற, நல்ல வரன் அமைய ❖ புத்திர/பிள்ளை பாக்கியம் பெற ❖ கணவன் - மனைவி இடையே ஒற்றுமை நிலவ ❖ கஷ்டங்களும், கடன்களும் எதிர்ப்பு இடையூறுகளும் நீங்க ❖ புதிய முயற்சிகளில் முன்னேற்றமும் வெற்றியும் உண்டாக ❖ புதிதாக தொழில் தொடங்க ❖ புதிதாக வீடு/ மனை பெற ❖ வாகன யோகம் பெற ❖ நல்ல சிந்தனை பெற ❖ சிந்தனை வளம் பெருக ❖ உடல் ஆரோக்கியம் பெற ❖ நீண்ட ஆயுள் பெற ❖ தெய்வசக்தியுடன் திகழ ❖ குடும்ப ஒற்றுமை பெற ❖ உலக ஒற்றுமை பெற ❖ சமுதாய ஒற்றுமை பெற ❖ தேச ஒற்றுமைபெற ❖ எல்லா உயிர்களும் இன்புற்று வாழவும்.

- தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.
- ரூ.500/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் ஒரு ஆண்டிற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.1000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் இரண்டு ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு, ஆன்மீகம் மாத இதழ் பத்து ஆண்டுகளுக்கு அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.500, ரூ.1000, ரூ.5000 அனுப்பும் ஆன்மீக அன்பர்களுக்கு வெள்ளெருக்கு வேர் விநாயகரும், ஸ்ரீ அருணாசலேஸ்வரரின் வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

★ ரூ.5000/- அனுப்பும் ஆன்மீக அன்பர்கள் சார்பாக, ஒவ்வொருமாதமும் பௌர்ணமி அன்று திருஅண்ணாமலையில் அன்னதானம் செய்து பத்து ஆண்டுகளுக்கு 'ஆன்மீகம்' மாத இதழ் தங்களுக்கு அனுப்பி வைக்கப்படும். மேலும் தாங்கள் விரும்பும்போது சந்ததியரின் முகவரிக்கும் மாற்றம் செய்து தருகிறோம். ஆன்மீக அன்பர்கள் ஒவ்வொருவரின் பூஜை அறையும் புனிதம் பெறவேண்டும் என்ற இறைசிந்தனையோடு ரூ.5000 செலுத்துபவர்களுக்கு 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள ஸ்ரீமத் பகவத்கீதை புத்தகத்தை (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

• நன்கொடை அனுப்பும் சிவநேசச்செல்வர்கள் (Aanmeeka Annadhana Charitable Trust Chennai - 4) என்ற பெயரில் Cheque /D.D/ M.O. மூலம் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி வைக்கவும். அன்னதான திருப்பணிகளை நலம்தரும் இறைபணி சேவைகளாக 'ஆன்மீக அன்னதான அறக்கட்டளை' ஆற்றிவர தங்களது ஒத்துழைப்பை என்றும் பேரன்புடன் வேண்டுகிறோம்.



ஸ்ரீ அருணாசலேஸ்வரர்

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி வரிவிலக்கு உண்டு.

*Cheque / D.D / M.O* அனுப்ப வேண்டிய முகவரி :


**ஆன்மீக அன்னதான அறக்கட்டளை**

**AANMEEKA ANNADHANA CHARITABLE TRUST** (Regd.)

68, Nadu Street, (Opp. Sri Kapaleeswarar Temple) Mylapore, Chennai - 600 004.

Tel : 24959302 Fax : (044) 7102308 E - Mail: siva siva @vsnl.net


ஸ்ரீ உண்ணாமுலையம்மன்

எதுவும் என்னுடையது அல்ல; அனைத்தும் உன்னுடையதே அருளாளா! அருணாசலா!





• சிற்பி

# தும்பைப் பூ மனிதர்கள்!

பொள்ளாச்சி அருகிலுள்ள ஆத்துப் பொள்ளாச்சி கிராமம் துள்ளிக் குதித்துக் கொண்டிருக்கிறது. 'ஒரு கிராமத்து நதி' கவிதை நூலுக்காக சாகித்ய அகாதமி பரிசு பெற்றிருக்கும் கவிஞர் சிற்பி பாலசுப்பிரமணியம் பிறந்த மண் அது.

"பத்து வயசு சிறுவனா இருந்தப்ப, ஆத்து நடுவுல இருக்கற பாறை மேல பாலுவும் தர்மராஜ"ும் நின்னுகிட்டிருப்பாங்க. பாலு மட்டும் ஏதோ மேடையில் பேசறாப்பல பேசிட்டே இருக்கும். ஆத்துக்குக் குளிக்கப் போற நாங்க எல்லாம் இதை வேடிக்கைப் பாத்துட்டே போவோம். அப்பவே தெரியும்ங்க, பாலு எதிர்காலத்துல சிறப்பா வரும்னு" என்கிறார்கள் சிற்பின் பால்ய கால நண்பர்களான சண்முகக் கவுண்டரும், குமரேசக் கவுண்டரும்.

இந்தக் கவிதை நூல் முழுவதுமாக ஆக்ரமித்துள்ளது கிராமம். அந்தக் கிராமத்துப் புழுதி மண்ணில், இருபது வயது வரை சந்தித்த கள்ளங் கபடமற்ற மனிதர்கள், அவர்களது வாழ்க்கை நிகழ்வுகள் போன்றவற்றை, ஆழியாற்றில் பொங்கிப் பெருகி வரும் புதுப்புனலின் மெல்லிய இசையுடன், கவிதைகளாய் நெய்து தந்திருக்கிறார் கவிஞர் சிற்பி.

எந்தப் பக்கமிருந்து இக்கிராமத்தைச் சுற்றி வந்தாலும், நம் கண்ணில் படுவது ஒருவித துள்ளலோசையுடன் குதித்தோடும் ஆழியாறு. என்றும் வற்றாத ஜீவ நதியாம் அது.

பழைய மண் சாலைகள் இப்போது கடுந்தார் பூசிக் கொண்டு, காற்றிலாடும் கறுப்பு ரிப்பனென வளைந்து வளைந்து செல்கின்றன. அங்கு தாடைக்குப் பல் முளைத்தது போல், தாறுமாறான வீடுகள் இப்போதும் இருக்கின்றன.

அவரது கதா ரசிகர்கள் அந்த நினைவுகளின் மயக்கத்திலிருந்து இன்னமும் மீளாமல் இருக்கின்றனர் இங்கு. ஆற்றங்கரையருகே அடர்ந்து சுற்றிய நாணல் புதர் நடுவே, அப்போது வீற்றிருந்த அத்தி மரம் இன்று இல்லை. அக்கி நோய்க்கு அத்திப்பால் தந்து உதவிய மருத்துவ மரம் மடிந்து போய்விட்டது.

நெசவாளியான கவிஞரின் இளம் பருவத் தோழன் ஆறுமுகன் வறுமையில் வாடி, இறுதியில் ரயில்

முன்பாக, தலை கொடுத்து மாண்டு போனதை இப்பொழுதும் அதிர்ச்சியுடன் விவரிக்கின்றனர் சில கிராமத்துப் பெரிசுகள். கோள் மூட்டுவதில் மன்னனான அவன், சக தோழர்களுடன் ஆற்றில் நீராடுகையில் 'குளிக்கும்போது நெஞ்சுக்குழி மேல் தண்ணீர் ஒட்டாது போனால் பத்து நாளில் சாவு நிச்சயம்' என பயமுறுத்துவானாம். இவன் மரணத்துக்கு முன்பாக 'இவன் நெஞ்சுக் குழியில் தண்ணீர் ஒட்டாமல் இருந்திருக்குமோ?' என கவிதை நூலின் ஓரிடத்தில் வினா எழுப்புகிறார் கவிஞர்.

மலையாளக் காற்றுக்கு விரித்துப் போட்ட நடைபாவாடை போல, நீண்டு வளைந்து நெளிந்து செல்லும் அந்தச் சித்திர நதியில் ஆங்காங்கே பாறைச் சிற்பங்கள் காண்போரின் மனத்தைக் கொள்ளை கொள்கின்றன. வெள்ளச் சாமியார் விட்டுச் சென்ற காவடியும், காவி வேட்டியும் துண்டும், இங்குதான் இருந்தன என்று அடையாளம் காட்டுகின்றனர் சிலர்.

**க**விதை நூலில் வருகின்ற மனிதர்களில் பலர் கால வெள்ளத்தில் மறைந்து போய் விட்டனர். அவர்களில் இப்பொழுது மிச்சமிருப்பவர் இரண்டு பேர். கோடை இடி குமரப்பாவுக்கு வயது எழுபத்தியெட்டு. 'சங்கீதம் தெரிந்த எங்கள் ஊர் 'ஹீரோ'' என வர்ணிக்கப்பட்டவர். மிருதங்கம், ஆர்மோனியம் வாசிப்பதில் வல்லவர். நல்ல பாட்டுக்காரர். புத்தகத்தில் தானும் இடம் பெற்றது அறிந்து மிகுந்த சந்தோஷம் அடைகிறார் அவர். அந்த மகிழ்வில் நம் முன்னே தேச பக்திப் பாடலொன்றைப் பெருங்குரல் எடுத்துப் பாடிக் காட்டுகிறார்.


• குமரப்பா


• பழனியப்பா


• தர்மலிங்கம்

மழுங்கிப் போன அம்மியும் ஆட்டுக் கல்லும் கொத்துவதில் வல்லவரான சப்பை வாய்ப் பழனியப்பன், பால்ய காலங்களில் பறவை முட்டை சேகரிப்பதில் ஆர்வமுள்ளவர். அறுபத்தி நான்கு வயதாகும் அவர், கிராமத்தில் தேநீர்க் கடை வைத்து நடத்தி வருகிறார். 'எங்கள் ஊர்ச் 'சலீம் அலி'யை எவருக்கும் தெரியவில்லை' என நூலின் ஆசிரியரை வருத்தப்பட வைத்தவர். "பள்ளிக் கூடம் பக்கம் போனதே இல்லீங்க நானு. சின்னப் பையனா இருந்தப்ப, பறவை முட்டை தேடி அலைஞ்சுகிட்டே இருப்பேன்ங்க. எந்தக் காட்டுல, எந்த மரத்துல, எந்தப் பாறைப் பொளவில, என்ன பறவை முட்டையிடும்ன்னு, எனக்கு எல்லாமே அத்துப்படிங்க. ஒரு நா நம்ம பாலுவுக்கு தவிட்டுப் புறாக்களை நாந்தாங்க அடையாளம் காமிச்சேன். அதெல்லாம் அம்பது வருசத்துக்கு முன்னாடிங்க. அவ்வளவையும் நெனைப்புல தேக்கி வைச்சுக்கிட்டு, எங்களையும் அதுல ஓர் ஆளா நுழைச்சு விட்டு, ஒரு கவிதைப் பொஸ்தகம் எளுதிப் பரிசு வந்திருக்குன்னா, எங்களுக்கு இதைவிட வேறென்னங்க வேணும்?" என்கிறார் அவர்.

**ஊ**ரின் நடுவே சென்ற வருடம் அமைக்கப்பட்டது ஒரு கிளை நூலகம். இதற்கு கட்டடம் கட்ட தமது பத்து சென்ட் இடத்தை இலவசமாகத் தந்துள்ளார் கவிஞர் சிற்பி.

"கவிஞர் எங்களைவிடப் பன்மடங்கு நிலை உயர்ந்த போதும், எங்களுடன் ஆன நட்பை அவர் எப்போதும் வெட்டிக் கொண்டதேயில்லை. அதே அன்பு. அதே நேசம். இன்றும் நீடிக்கின்றது. கவிதைப் புத்தகத்தில் ஓரிடத்தில் எங்கள் கிராமத்து மக்களைக் குறிப்பிட்டுள்ளது போல, நாங்கள் அனைவரும் தும்பைப்பூ மனிதர்களே!" எனப் பெருமை பொங்கக் கூறுகின்றனர், சிற்பியின் பால்ய கால நண்பர்கள் தர்மராஜ்"வும் மாரிமுத்துவும்.

— திருநாவுக்கரசு

● இரா. உமா மகேசுவரி, விருதுநகர்

*? கொம்பு சீவுதல் என்றால் என்ன?*

! ராமர் கோயில் கட்ட காங்கிரஸின் ஆதரவை தொகாடியா கேட்பது கொம்பு சீவுதல்; "ஆதரவு தரத் தயார்; ஆனால் சர்ச்சைக்குரிய இடத்தில் அல்ல; சமுதாயத்தின் ஒரு பிரிவினர் மனத்தைப் புண்படுத்தும் விதத்தில் அல்ல" என்று திக்விஜய் சிங் பதில் சொல்வது துள்ளி, எகிறி முட்டித் தள்ளுதல்.

● த. குமரேசன், காவல் கிணறுபுதூர்.

*? ஒரு நல்ல நட்பு உருவாக வேண்டுமானால் இருவரிடையே பரஸ்பரம் என்ன இருக்க வேண்டும்?*

! நம்பிக்கை. அது இருந்தால் அன்பும் ஆதரவும் தழைக்கும்.

● சச்சின் சக்திவேல், மயிலாடுதுறை ❐

*? ரசாயன மற்றும் அணு ஆயுதங்களை ஈராக் பதுக்கி வைத்திருப்பதாகச் சொல்லி, போர் தொடுக்க முனையும் அமெரிக்கா, போரில் அந்த ஆயுதங்களைத் தன்மீது ஈராக் பயன்படுத்திவிடுமே என்று பயப்படாதது ஏன்?*

! இதே ஈராக்கில் ஆயுத பலம் பெருக சில ஆண்டுகள் முன் உதவியது அமெரிக்கா. 1980 முதல் 1990 வரை, ஈரானை எதிர்த்த காலகட்டத்தில் ஈராக்கிடம் தோழமை பூண்டு, விஷக் கொல்லி ஆயுதங்கள் உட்பட பலவற்றை அந்நாட்டுக்கு விற்றது. இப்போது ஈராக்கையே வில்லனாக்கிக் குற்றம் சாட்டிக் கொண்டிருக்கிறது. ரசாயன மற்றும் அணு ஆயுதங்களை ஈராக் பதுக்கியுள்ளதா என்பதை ஆய்ந்து அறிய ஐநா. குழு அங்கு சென்றிருக்கும்போது, அதன் இறுதி அறிக்கை வரும் வரை, அமெரிக்கா அடாவடித்தனமாக ஏதும் செய்து அவப்பெயரைத் தேடிக் கொள்ளாது, என்று உலகம் நம்பிக் கொண்டிருக்கிறது.



* மாற்றுகிறார்...

● எம்.குணசேகரன், வேலாயுதம் பாளையம்

*? 'அன்னை சோனியா பிறந்த டிசம்பர் மாதத்தில் நானும் ஜி.கே.வாசனும் பிறந்ததைப் பெரும் பேறாகக் கருதுகிறோம்' என்று தமிழக காங்கிரஸ் தலைவர் இளங்கோவன் கூறியுள்ளது பற்றி.*

! அச்சச்சோ! அ.தி.மு.க. தொண்டர் யாரிடமாவது திருநீறு வாங்கி இட்டுக் கொண்டாரா!

● பள்ளிபாளையம் கே. ரமேஷ், ஈரோடு - 10

*? வன்முறை, தீவிரவாதம் ஒழிக்கப்பட்டு, மனித நேயம் மலர வேண்டும் என்று ஒரு புத்தாண்டு சபதத்தைத் தீவிரவாதிகள் மேற்கொள்வார்களா?*

! அப்துல் கலாம் கனவு காணச் சொன்னது வாஸ்தவம் தான் ரமேஷ்; அதுக்காக இப்படியா!



* ... எகிறுகிறார்!

● முருகேசன், தேனி

*? வெளிநாட்டில் வாழும் இந்திய விஞ்ஞானிகள் திரும்பி வர வேண்டும் என்று பிரதமர் கூறியிருப்பது பற்றி...?*



* சீவிக்கிறார்!

! அங்கே இரண்டாண்டுகளில் முடிக்கக் கூடிய ஆராய்ச்சி, இங்கே வசதிக் குறைவினாலும் வயிற்றெரிச்சலினாலும் இருபது ஆண்டுகள் இழுத்தடிக்கப்படுகிறது என்கிற நிலையில் எப்படி வருவார்கள்!

● கே.வி.ராமன், சென்னை - 73

*? ராஜஸ்தான் ஆளுனர் 'ராம்கதா' நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்தது மதச் சார்பா இல்லையா?*

! ஜனாதிபதி இஃப்தார் விருந்து நடத்த அனுமதி உண்டு. ஆளுனர் ராமகதா நிகழ்ச்சி நடத்தினால் மட்டும் ஆட்சேபணையா? என்ற கேள்வி எழும். எல்லாவற்றையுமே அரசு இழுத்துப் போட்டுக் கொள்ளாமல் நிறுத்தி விடுவதுதான் நல்லது. தனி நபர்களுக்கே விட்டுவிடலாம்.

● அஜார், தேனாம்பேட்டை

*? சம்சார வாழ்க்கை, பிரம்மசர்ய வாழ்க்கை - எது கடினமானது?*

! 29/12/02 கல்கியில் ரெ.கார்த்திகேசு எழுதிய 'உனக்குக் கிடைத்தது' கதையைப் படித்திருந்தால், இந்தக் கேள்வியைக் கேட்டிருக்க மாட்டீர்கள். இப்பத்தான் என்ன, தேடி எடுத்துப் படிச்சுப் பாருங்களேன்!

● எஸ். தியாகராஜன், திருச்சி - 6 ★

*? மந்திரி சபையை மாற்றி அமைப்பதில் கில்லாடி யார்? பிரதமரா? தமிழக முதல்வரா?*

! தமிழக முதல்வர் இந்த விஷயத்தில் 'ராஜ' (கம்பீர) கோபாலன்! பிரதமரோ வெறும் 'நெ(ர)ய்'ல்வால்தான்!

● ஆர். அப்துல் சலாம், திருச்சி - 21

*? 'பிப்ரவரி 22க்குள் ராமர் கோயில் நிலத்தை ஒப்படைக்க வேண்டும்' என்று மத்திய அரசுக்கு விச்வ ஹிந்து பரிஷத் கெடு வைத்துள்ளதே?*

! குஜராத் வெற்றி கொடுத்துள்ள குருட்டு தைரியம்!

● மூகதி. சுபா, திருவண்ணாமலை

*? சுடுகாட்டு ஊழலுக்கு எதிரான விசாரணைக்கு வழங்கப்பட்ட அனுமதி திரும்பப் பெறப்பட்டுள்ளதே?*

! அ.தி.மு.க. ஆட்சி ஊழல்களுக்கெல்லாம் இனி சுடுகாட்டில் கொள்ளி வைக்கப்பட வேண்டியதுதான்; சாம்பலைக் கொண்டு போய் கடலிலும் கரைச்சுடுவாங்க. இப்போ தி.மு.க. ஆட்சி ஊழல்களை இடிச்சுக் காட்டுகிற சீசன். இடிச்சதுதான் மிச்சமா அல்லது பூதம் ஏதும் புறப்படுமா, பொறுத்திருந்து பார்ப்போம்!

● ரஜினி ராம்கி, மயிலாடுதுறை

*? ஒரு வழியாக போயஸ் கார்டனில் தாமரை மலர்ந்துவிடும் போல் தெரிகிறதே?*

! ஆமாமாம். மொட்டு விட்டிருக்கிறது. பால்கனியில் சூரியன் தோன்றியதும் மலர்ந்துவிடும்!





• ... சித்திரிக்கிறார்!

• ... புரட்டுகிறார்!

# போயஸ் கார்டனில் தாமரை மலர்ந்துவிடும் போலிருக்கிறதே?



• சீறுகிறார்...

3

"உங்க மாமா பொண்ணு என்னை விட அழகா இருப்பாளா...?" அமலியின் கண்களிலும், வார்த்தைகளிலும் தெரிந்த குறும்புக்கான காரணத்தை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை.

"இனிமே நீ தப்பிக்க முடியாதுன்னு நினைக்கிறேன். ஊருக்குப் போனா உடனே கல்யாணம்தான். 'அவள் அப்படித்தான்' கமலஹாசன் மாதிரி ஒரு சரிதாவைக் கூட்டிக்கிட்டு வந்து நிக்கப் போறே. ஆமாம்... உனக்கு இந்தப் புரட்சி, ஃபெமினிஸம், இது பத்தியெல்லாம் எதாவது தெரியுமான்னு நான் கேப்பேன்... 'அப்படீன்னா...?'ன்னு அவ குழப்பமாப் பார்ப்பா. ஓ.கே. ஆல் த பெஸ்ட்டுனு கையைக் கொடுத்துட்டுப் பாதிவழியில நான் இறங்கிக்கப் போறேன்.

# அம்மாயி

என்ன நான் சொல்றது கரெக்ட்தானே..?"

அமலியின் சிரிப்பலைகள் தொடர, நான் பாத்ரூமில் நுழைந்து கதவைச் சார்த்திக் கொண்டேன்.

முதன் முதலில் அம்மாயி தொலை பேசியில் பேசியது, இப்போது ஊரில் வந்து உட்கார்ந்திருப்பதாகச் சொல்லும் மாமாவோடுதான்.

ஒரு நாள் மாலையில் பால் வாங்குவதற்காக பால் உற்பத்தியாளர்கள் கூட்டுறவு சங்கம்வரை சென்ற அம்மாயி, "அய்யய்யோ, ஒம்மாமனுக்குப் பைத்தியம் புடிச்சுடுச் சாம்டா.." என்று அலறியபடியே ஓடி வந்தது.

"அவம் பொண்டாட்டிக்காரி போஸ்ட் ஆபீஸுக்குப் போன் பண்ணி கூப்பிட்டுவுட்ருக்கா... ஒம்மாமனுக்கு குணபேதகமாயிப் போச்சாம். ராத்திரி பதினோரு மணி ரயிலுக்கு தண்டவாளத்துல தலையைக் கொடுக்கப் போய்ட்டானாம். காத்தாடியில கயிற மாட்டித் தொங்கப் பாத்தானாம். நெதானம் கெட்டுப்போயி, ரூவா நோட்டை ரெண்டு ரெண்டாக் கிழிக்கறானாம். இன்னும் அரை மணி நேரத்துல மறுபடி போன் போடறேன். எங்க அத்தைய வரச் சொல்லுங்கன்னு, மணிமாலா சொன்னாளாம். போஸ்ட் ஆபீஸ் ஜெயராமன் வழியில பாத்துச் சொன்னாரு. ஒடனே சட்டையப் போட்டுக்கிட்டு ஓடியா..."

என்று ஒப்பாரி வைத்தது.

அஞ்சல் நிலையம் செல்லும்வரை இவ்வாறு நீடித்த அம்மாயியின் புலம்பல், தொலைபேசிக் கருவியைப் பார்த்தும் பயமாகவும், ஆச்சரியமாகவும் மாறியது.

"இந்தாம்மா ஒம்மருமக பேசுது.. பேசு.."

என்று ஜெயராமன் ரிஸீவரை நீட்ட...

"இதைத் தொட்டா ஷாக் அடிக்குமா... கரெண்டு கிரெண்டு பாயாதே.."



என்று மிரண்டு பின் வாங்கியது.

"ஆரு மணிமாலாவா பேசுறது..? என்னா புள்ள... எனக்குக் கையும் ஓடமாட்டேங்குது, காலும் ஓட

மாட்டேங்குது. எங்க, கோயமுத்தூர்ல இருந்தா பேசறே. நீ அங்க இருக்கயில இங்க எப்படி நீ பேசற சத்தம் மட்டும் கேக்குது...?"

மாமாவின் மன நலத்தை விட தொலை பேசியின் அதிசயம்தான் அம்மாயியைப் பெருமளவு ஆக்கிரமித்திருந்தது. இன்னும் சொல்லப்போனால், தொலைபேசிச் செய்தியின் அதிர்ச்சியைக் கூட இந்த ஆச்சரியம் பெருமளவு குறைத்திருந்தது.

அடுத்த நாள் காலை எங்கள் வீட்டுக் கிணற்றில் தண்ணீர் எடுக்க வந்த பெண்களிடமெல்லாம், அம்மாயியின் தொலைபேசி உரையாடல் வாளிவாளியாக வழிந்தது. அந்த சந்தர்ப்பத்தில்தான், சுசிலாவின் தண்ணீர்க் குடத்தைத் தூக்கிவிடுவதற்காக கிணற்றடியை நோக்கி நான் போனதும், "இங்க பாரு.. நீ ருக்மணியை லவ் பண்றது எனக்குத் தெரியும். அதுபத்தி உங்கிட்ட கொஞ்சம் பேசணும். நாளைக்குக் காலையில பதினோரு மணிக்கு எங்க வீட்டுக்கு வா...'' என்று சுசிலா சொன்னதும் நடந்தது. ஆனால் இவ்வளவு மெல்லியதான குரலில் பேசியும், அவரைப் பந்தலுக்கு மறுபுறம் கறிவேப்பிலை விதைகளை ஊன்றிக் கொண்டிருந்த அம்மாயியின் காதுகளுக்கு அந்தச் செய்தி எட்டியிருக்கிறது. இதைத் தெரியாத பரவசத்தில், அடுத்தநாள் காலை பதினோரு மணியை நோக்கி என் அன்றைய பொழுது கழிந்து கொண்டிருந்தது.



மறு நாள் காலை, மாமாவின் உடல்நிலை குறித்து விசாரித்து கடிதம் எழுதி, அதனை அஞ்சல் செய்வதற்காக, ஒன்பது மணிக்கே வீட்டை விட்டுக் கிளம்பியபோது,

"எலே.. குழிப்பணியாரம் ஊத்தியிருக்கேன். ஒனக்குப் புடிக்குமேன்னு தேங்காச் சட்டினி வேற அரைச்சிருக்கேன். ரெண்டு தின்னுட்டுப் போடா..!" என்று அம்மாயியின் குரல் தடுத்தது.

"ஊத்தி வைம்மா.. வந்து சாப்பிடறேன்..!" என்று நான் பதில் சொல்லி முடிக்கையில் எனது சைக்கிள் பிரதான சாலையை அடைந்திருந்தது.

அஞ்சல் நிலையம், ஷாகுல் வீடு, பன்னீரின் கடை, பஜனை மடம் என்று திரிந்து மிகச் சரியாக பதினோரு மணிக்கு சுசிலாவின் வீட்டு வாசலில் சைக்கிளை நிறுத்தி இறங்கியபோது, தெருவே மயானம் மாதிரி வெப்பத்தில்

## பாபு யோகேஸ்வரன்

வெறுமையாய் இருந்தது.

அதுவரை நான் சுசிலாவின் வீட்டுக்குப் போனதே இல்லையாதலால், வாசல் கதவைத் தட்டுவதா, தள்ளுவதா என்கிற குழப்பத்தில் சற்றுத் தயங்கினேன்.

கதவில் கைவைக்கப் போனபோது, மின்னல் வேகத்தில் கதவு திறந்தது. அந்த வேகத்துக்கு ஓர் அரையடி பின்வாங்கி நான் நிற்க, உள்ளே துரட்டிக் கோலும் கையுமாக அம்மாயி நின்றது.

"இங்க என்னம்மா பண்றே..?"

அம்மாயியின் முகத்தில் ஒரு ஏளனப் புன்னகை என்னைப் பார்த்துப் பரிகசிக்க,

"ம்..? முருங்கைக்கா பறிக்க தொரட்டி வாங்க வந்தேன். ஏண்டா. பணியாரம் ஊத்தி வச்சிருக்கேன். தின்னுட்டுப் போடான்னா, இந்தா வரேன்னு சைக்கிளை எடுத்துட்டுப் பாய்ஞ்சவன். இன்னேரம் வரைக்கும் ஊரு மேஞ்சுட்டு.. என்னிய என்னா பண்றேன்னு கேக்கறியா நீயி...?"

அம்மாயிக்குப் பின்னால் மலங்க மலங்க விழித்தபடி சுசிலா நின்று கொண்டிருந்தது.

"வந்து.. நான் சுசிலா அப்பாவைப் பாக்க வந்தேன்.."

எனது திணறலைப் பார்த்து மேலும் சுவாரஸ்யமான அம்மாயி,

"எதுக்குடா... எதுக்குங்கறேன்..? எதுக்கு இப்ப நீ சுசிலா அப்பாவைப் பார்க்கணும்? பாத்தியா சுசிலா... வாயத் தொறந்தா பொய்யி.. பேசறதெல்லாம் புளுகு... நேத்து தண்ணி எடுக்க வந்தப்ப இவன் கிட்ட நீயி என்னா சொன்ன..? அந்த ருக்குமணி புள்ளைய இவன் லவ்வு பண்றான்னு சொன்னியா இல்லியா? காலையில பதி னோரு மணிக்கு வூட்டுக்கு வா.. ஒரு ரக சியம் பேசணும்னு நீ சொன்னதுக்கு, இஞ்சி தின்ன கொரங்கு மாதிரி தலையாட்டி னானா இல்லியா? இப்ப கேட்டா என்னா சொல்றான் பாத்தியா... ஒங்க அப்பனைப் பாக்க வந்தானாம். ஒங்க அப்பன் கிட்ட இவனுக்கு என்னா வேலை...?"

'அம்மாயி சொல்வதெல்லாம் நியாயம் தானே' என்பது போன்ற பாவனையில் முகத்தை வைத்துக் கொண்டு, சுசிலா தலையைத் தலையை ஆட்ட....

"அந்தத் தொரட்டியக் கொண்டா.. முருங்கைக்கா பறிச்சுத் தரேன்.." என்று அம்மாயியை நோக்கிக் கையை நீட்டினேன்.

"வுடுறி... பெரிய நாயஸ்தன்தான். நாலு குழி நஞ்சை புஞ்சை நமக்கிருக்க, நாமக் கல்லுக்குப் போனானாம் ஒண்ணுக்கிருக்கங்




கறது மாதிரி. ரெண்டு மாமன்காரனுங்க இவனுக்காகவே, ஆணு ஒண்ணு, பொண்ணு ஒண்ணுன்னு பெத்து வளத்துக்கிட்டிருக் கானுங்க. இவன் ருக்குமணியை லவ்வு பண்றானாம்.. லவ்வு.. கண்ட கருமாந் தரத்தையும் படிச்சுட்டு... கண்ட சினிமாவை யும் பார்த்துட்டு, கெட்ட சகவாசம்... கெட்ட சிந்தனை... ராஸ்க்கோலு.."

பதினோரு மணி வெய்யிலுக்கு அம்மாயி யின் வார்த்தைகள், அந்தத் தெரு முழுவதும் அனலாய்ப் பறந்தன.

அதற்குப் பிறகு எங்கள் வீட்டுக்கிணற் றில் தண்ணீர் எடுப்பதற்காக சுசிலா வருவது நின்று போனது. சுசிலாவுக்கும் அம்மா யிக்கும் இடையில், நான் போய்ச் சேருவதற்கு முன்புவரை, என்ன விதமான உரையாடல் நிகழ்ந்தது என்பதைத் தெரிந்து கொள்ளும் ஆர்வம் எனக்கு இப்போதும் கூட இருக் கத்தான் செய்கிறது. அந்தச் சம்பவம் நடந்து

● எங்கிருந்தோ
வந்து விடுகிறது எனக்கு
உன் அருகாமையில் மட்டும்
முட்டாளாய் நடந்து கொள்கிற
புத்திசாலித்தனம்.

● மரங்களின் அடர்ந்த
பூக்களைப் பார்த்து
இது வசந்தகாலமா என்று
கேட்கிறாய்
காலங்களைப் பற்றி தெரியாதிருந்தும்
ஆமாம் என்கிறேன்
நீ அருகிலிருப்பதை நினைத்து

● தோட்டத்தின் எல்லாப் பூக்களையும்
முத்தமிட்டு வந்தேன்
அதில் எந்தப் பூவை
நீ சூடப் போகிறாய் என்று
புரியாததால்
வழியில் கருகிக் கிடந்த
அத்தனைப் பூக்களையும்
சேகரித்து வைத்தேன்
அதில் எந்தப் பூவை நீ
சூடியிருந்தாயென்று தெரியாததால்.



கீர்த்தி

முடிந்து, பத்து ஆண்டுகளுக்கு மேல் ஆகியும், அந்த மர்மம் நீடித்துக் கொண்டேதான் இருக்கிறது.

அமலிக்காக புதிய ஈ-மெய்ல் முகவரி ஏற்படுத்தும் முயற்சியில் ஈடுபட்டிருந்த போது...

"சரி... உங்க அம்மாயி ஃபோன் பண்ணினதா நான் சொன்னதை நிஜமாவே நம்பிட்டியா..?"

நான் கீ போர்டிலிருந்து நிமிர்ந்து அமலியின் பக்கம் திரும்பினேன்.

"ஹலோ, பேரனுக்கு ஃபோன் பண்றப்ப.. ஒரு பொண்ணு ஃபோனை எடுத்தா... உங்க அம்மாயிக்கு அதிர்ச்சியா இருக்காதா..? என்ன ஏதுன்னு கேக்காதா...? அந்த லாஜிக் கூடத் தெரியாம நீ எல்லாம் என்ன ரைட்டர்..?"

"என்ன சொல்றே நீ..? நான் அப்பவே சந்தேகப்பட்டேன். அம்மாயியாவது ஃபோன் பண்றதாவதுன்னு நெனச்சேன்."

"கிழிச்சே. அதான் நேத்திலேருந்து மூஞ்சி பேயறைஞ்ச மாதிரி இருக்கே... சந்தேகப் பட்டாராம்.."

திடீரென்று நீளமான தொலைபேசி மணி அடித்து எங்கள் உரையாடலைக் கலைக்க,

"என்ன ஃபோன் அடிக்குது...?" என்றேன்.

"ம்க்கும். நெட் கட்டாய்டுச்சு பாரு.. அப்பறம் ஃபோன் அடிக்காதா...?"

அமலி, பரபரக்க ஓடிச் சென்று ரிஸீவரை எடுத்து,

"ஹலோ?" என்றாள்.

அடுத்த நொடியில் ரிஸீவரைப் பொத்திக் கொண்டு என் பக்கம் திரும்பி,

"அய்யய்யோ... உன் அம்மாயி...!" என்றாள்.

(தொடரும்)

# மிஸ்டர் பூஸ்ட்

# அந்த அவர்!

பன்னிரண்டாம் வகுப்பு வரை எப்படியோ படித்து முடித்தேன். மேற்கொண்டு பட்டம் பயில ஆசை. ஆனால் வீட்டுச் சூழ்நிலை இடம் தரவில்லை. "நீ நினைத்தால் உன் சொந்தக் காலில் நின்று பட்டம் படிக்க முடியும்'' என்று அவர் உத்வேகம் கொடுத்தார். அவ்வளவுதான், சொல்லாமல் கொள்ளாமல் மதுரையிலிருந்து சென்னை வந்து இறங்கினேன். கையில் வெறும் பதினாறு ரூபாய் இருந்தது. அதை வைத்துக் கொண்டு எங்கே தங்க? திக்குத் தெரியாமல் விழித்த போது அவர் சொன்னார், ''தெருவுக்குத் தெரு உணவகங்களும், தங்கும் விடுதிகளும் இருக்கிற சென்னையில் நின்று என்ன யோசிக்கிறாய்?''. அடுத்த நிமிடம் சென்னை அண்ணாசாலையில் உள்ள ஓர் உணவகத்தில் வேலை கேட்டேன். 'உள்ளே போய் வேலையைப் பார்' என்றார்கள். கொஞ்சம் ஊதியமும் கொடுத்தார்கள். என்னைப் போன்றவர்களுக்காகவே மாலைக் கல்லூரிகள் இயங்குவதை அறிந்து நந்தனம் ஆடவர் அரசுக் கல்லூரியில் சேர்ந்தேன். கல்லூரி வாழ்க்கையில் நான் பண்படுவதற்குப் பதிலாக அடிதடி, ரவுடியிசம் என்று மாறிப் போனேன். இன்னொரு பக்கம் பல குரல், தனி நடிப்பு, பாடும் திறமை போன்றவை என்னிடம் இயல்பாக இருந்ததால், கல்லூரி நிர்வாகம் என்னை மன்னித்துக் கொண்டே வந்தது. அப்போதும் அவர்தான் சொன்னார். ''சாதிக்க வந்த இடத்தில் என்ன சண்டியர் தனம் வேண்டிக்கிடக்கு?'' பளீர் என்று கன்னத்தில் அறை விழுந்த மாதிரி இருந்தது.

கல்லூரியில் நான் கட்டிய கானா மெட்டுக்களை 'இஸ்தாலக்கடி மெட்டுத்தானுங்க' என்ற ஒலிநாடாவாக உருவாக்கினேன். ஒலிநாடாவுக்குக் கிடைத்த வரவேற்பில் நானும் பிரபலமானேன். நண்பர்களைத் திரட்டி மேஸ்ட்ரோ இசைக் குழுவை உருவாக்கினேன். அமோக வரவேற்பு. கானாவிலிருந்து ஒரு படி மேலேறி, பாப் பாடல்களை மெட்டமைத்து மேடைகளில் பாடியதில், பாப் கருணாஸ் ஆனேன்.

எனது நகைச்சுவை உணர்வையும் உடல் மொழியையும் எங்கோ கவனித்திருந்த இயக்குனர் பாலா ''நந்தாவில் நடிக்கிறாயா?!'' என்றார். நான் யோசித்தேன். இசைக்குழு மூலம் கை நிறையப் பணம் கிடைக்கிறபோது, இருப்பதை விட்டு விட்டுப் பறப்பதைப் பிடிக்க வேண்டுமா? அப்போதும் அவர்தான் குழப்பத்தைப் போக்கினார். ''எத்தனை பெரிய வாய்ப்பு! மடையா! என்ன யோசிக்கிறாய். உடனே ஒத்துக் கொள்! உன் வாழ்க்கையே மாறிவிடும்'' என்றார். இயக்குனர் பாலாவின் கைவண்ணத்தில் நான் லொடுக்குப் பாண்டியானேன். இன்று தமிழ் சினிமாவில் நானும் முன்னணி நகைச்சுவை நடிகனாக உயர்ந்து விட்டேன். அதற்கு முதல் காரணம் அவர். அந்த அவர், எனக்குள்ளிருந்து என்னை வழி நடத்திக் கொண்டேயிருக்கும் மேன்பவர். அவர்தான் எனக்கு மிஸ்டர் பூஸ்ட்!

- ஜெ.ஜே



சென்ற இதழ் தொடர்ச்சி...



# கட்டினேன்; திறந்தது!

அந்த வேன் வந்த பிறகுதான் அவரது வாழ்க்கை திரும்பியது. பேச்சுத் திறமையாலும், கடுமையான உழைப்பினாலும் வேனுக்கு நிறைய வாடிக்கையாளர்களைப் பிடித்தார். கிட்டத்தட்ட அதே கால கட்டத்தில் அவரது அண்ணனும் வேலை நிமித்தமாக சென்னையில் செட்டில் ஆக, மாம்பலம் ஸ்டேஷன் வ்யூ சாலையில் காய்கறிக் கடை போட்டார்கள். "நாங்க மதியம் ஆனால் ஹோட்டலில் வெட்டுவோம்; ஆனால் மூர்த்தி டிபன் பாக்ஸில் வீட்டிலிருந்து கொண்டு வந்ததை, வண்டியில் அமர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருப்பார்," என்று சொல்கிறார் அவரது அந்தக் கால நண்பர் ஒருவர். "1982ல் என் தினசரி வருமானம் ஆயிரம் ரூபாய்" என்கிறார் மூர்த்தி. ஒரு வருடத்தில் வங்கிக் கடனை அடைத்து, அடுத்த இரண்டு வருடத்தில் மேலும் இரண்டு வேன்களை வாங்கி விட்டார். கையில் சரளமாகவே காசு புரண்டது. வண்டி மெக்கானிசம் தெரிந்திருந்தது, வெற்றிக்கு மற்றொரு காரணம்.

அந்தக் கால கட்டத்தில்தான் டாக்டர் ராமதாஸ் தலைமையில் நடந்த வன்னியர் சங்கம், பல அரசியல் நடவடிக்கைகளில் இறங்கியது. சங்கத்தின் தி.நகர் பகுதிக் கிளையில் சேர்ந்தார். டாக்டர் எங்கே பேசினாலும், தமது வேன்களில் ஆட்களை அழைத்துக் கொண்டு போய், ஒரு கலக்குக் கலக்கி வருவார். அவரது செயல்பாடு டாக்டரை வெகுவாகக் கவர்ந்தது. வன்னியர் சங்கம் பா.ம.க ஆன பிறகு, இன்னமும் தீவிரமாக அரசியலில் ஈடுபட்டார்.

வட்டச் செயலாளர், பகுதிச் செயலாளர், மாவட்டச் செயலாளர் என்று கட்சித் தேர்தல் மூலமாகப் பதவிகள் கைக்கு வந்தன. ஏ.கிருஷ்ணமூர்த்தி என்ற பெயர் ஏ.கே. மூர்த்தி என்று டாக்டரால் சுருக்கப்பட்டது.

"என் கட்சித் தோழர்களுக்கு ஏதாவது ஆபத்து என்றால் நான் முன்னால் நிற்பேன்; ஆனால் வன்முறையில் என்றும்

ஈடுபட்டது கிடையாது. தொண்டர்கள் காவல் துறையால் அச்சுறுத்தப்படும் போது, ஏன் என்று தட்டிக் கேட்பேன். இப்படிப்பட்ட செயல்பாடுகள் என் அரசியல் தளத்தை வலுப்படுத்திக் கொள்ள வைத்தன. சென்னையில், குறிப்பாக தென் சென்னையில் ஒவ்வொரு வட்டத்திலும் பா.ம.க கொடியைப் பறக்க விட்டேன்!"

தி. நகர் தொகுதியில் 1991ம் ஆண்டு போட்டியிட வாய்ப்புக் கொடுத்தார் டாக்டர். தோல்வி. தேர்தல் செலவுக்கு மஹேந்திரா வேன்கள் அடமானம் வைக்கப்பட்டன. 1996ம் ஆண்டு மேல்மலையனூர் தொகுதி கொடுக்கப்பட்டது. சேர்த்து வைத்த பணம் கரையத் துவங்கியது. ஆனால் கவலைப் படவில்லை. "டாக்டர், மாநிலத்தில் ஏதோ ஓர் இடத்தில் போராட்டம் அறிவிப்பார்; சென்னையில் என்னைப் பிடித்துக் கொண்டு போய் விடுவார்கள்" என்கிறார் மூர்த்தி.

1998ல் வந்தவாசி பாராளுமன்ற ஸீட் கொடுக்கப்பட்டது மூர்த்திக்கு. தொகுதியை ஒரு ரவுண்ட் அடித்து, லட்சத்துக்கு மேல் செலவு செய்த பின், துரை என்பவருக்கு அந்த ஸீட் ஒதுக்கப்பட்டது.

"விட்டுக் கொடுக்கும் பெரிய மனம் இருந்தால் வெற்றிக் கோட்டையின் கதவு தட்டாமலேயே திறக்கும்" என்பது என் அனுபவத்தில் நான் கண்டது". 1998ல் கை நழுவிப் போன எம்.பி பதவி, 1999ல் வந்தடைந்தது. மூன்றரை ஆண்டுகளுக்குப் பின்னர், பா.ம.க.வுக்குக் கிடைத்த ரயில்வே இணையமைச்சர் வாய்ப்பு, மூர்த்திக்கு வழங்கப் பட்டபோது, ஸீனியர்களின் குமுறல்கள், கொந்தளிப்புகள் எதிர்த்தன. ஆனால் டாக்டர் அசைந்து கொடுக்கவில்லை. "ஸீனியாரிட்டி முக்கியம்தான்; அத்துடன் ஸின்ஸியாரிட்டியும் தேவை, என்பார் ஐயா" என்கிறார் மூர்த்தி.

- ப்ரியன்

படம்: ராஜன்

# இந்தியன்...?

செம்பட்டை, பழுப்புத் தலைகள், பால் வெள்ளை மேனிகளிடையே அந்த மாநிறமும் கறுப்புத் தலையும் வேற்றுமையைக் காட்டுகிறது. 'மெய்ன்ஸ்' ரயில் நிலையத்தில் முதுகில் மூட்டை போல் ஒரு பையைச் சுமந்து கொண்டு, அந்த இளைஞன் மின் தொடருக்குள் ஏறுகிறான்.

அழுக்கே காண முடியாத தேசம். எல்லாமே துணி போட்டுத் துடைத்து வைத்தாற் போல் மினுங்குகிறது. மின் தொடரின் காற்று அழுத்தக் கதவுகள் தாமே பொருந்திக் கொள்ள, ரயில் வேகம் பிடிக்கிறது. அந்த இளைஞனுக்கும் என் முகம் வேற்றுமையைத் தோற்றுவித்திருக்க வேண்டும். எதிரில் உள்ள ஆசனத்தில் அமர்கிறான். மீண்டும் ஒரு முறை என்னைப் பார்த்து விட்டு, கண்களை மூடிக் கொண்டு இருக்கையில் சாய்கிறான்.

இருபத்தைந்திலிருந்து முப்பது வயது இருக்கலாம். அவனது உடை, முகலட்சணங்கள் எல்லாமே இந்தியத் துணைக் கண்டத்தின் பிரஜை என்கிறது.

பேசுவதா? வேண்டாமா? என்ற யோசனையில் காதில் பொருத்திக் கொண்டிருக்கும் வாக்மெனில் ஒலிக்கும் லதா மங்கேஷ்கரின் குரல் கூட, மனத்தில் பதிய மறுக்கிறது. சென்னையிலிருந்து 'லுப்தான்ஸா'வில் கிளம்பி ஜெர்மனி வந்து, கிட்டத்தட்ட முப்பது நாட்கள் ஆகிவிட்டன. ஜெர்மனியில் உள்ள சுற்றுப்புறச் சூழலைக் கண்காணித்து அருமை பெருமைகளை அறிந்து கொள்ள என்னை என் நிறுவனம் அனுப்பியிருக்கிறது. ப்ராங்க்பர்ட்டில் ஆரம்பித்த ஓட்டம் முடிய இன்னும் ஒரு வாரம் இருக்கிறது. ஆர்வமும், மகிழ்ச்சியும் முதல் ஒரு வாரத்திற்குள்ளேயே ஆவியாகி விட்டன. கிழக்கு – மேற்கு – வடக்கு – தெற்கு என்று மாறி மாறி நெருக்கமாக என் நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. மூச்சுத் திணறலாகவே இருந்தது.

சுஜாதாவையும், மாலாவையும் பிரிந்து இருப்பது அதிக நாட்கள் இப்போதுதான். பிள்ளைப் பேறுக்குக் கூட மாலா வெளி ஊர் போக அவசியமில்லாமல் சென்னையிலேயே பிறந்த வீடு. சுஜாவுக்கு ஒன்றரை வயசாகிறது. நல்ல விளையாட்டு. அவர்களைப் பிரிந்திருப்பது பத்து நாட்களுக்கு மேலேயே தாபமாகி விட்டது.

அடுத்த பிரச்னை சாப்பாடு.. போகுமிடங்களில் மரக்கறி சாப்பிடுபவன் என்று சொல்லிச் சொல்லி, பச்சை இலை தழை, வேக வைத்த உப்புச் சப்பற்ற காய்கறி, பால், பழரசம், ரொட்டி என்று உப்பு உறைப்பின்றி நாக்கு வேறு செத்துப் போய்... நாட்களைக் கைகளில் நெட்டித் தள்ளத்தான் வேண்டியிருந்தது.

யாரோ இவன்... படிப்பாளாக இருக்கும்... அமெரிக்காவில் இந்தியர்கள் அதிகம்... இங்கு மொழி மாறிய இந்தத் தேசத்தில்... அவன் கண்களைத் திறந்து ரயில் நிற்கும் ஸ்டேஷனைப் பார்க்கிறான். பின் என் முகத்தில் பார்வை மீண்டு வந்து படிகிறது. நான் பேசி விடுவது என்று தீர்மானிக்கிறேன்.

'இண்டியன்...?' என்று கேட்கிறேன். புன்னகையுடன்.

அவன் 'இல்லை' என்கிற ரீதியில தலையசைக்கிறான். என் முகத்தில் வினாக் குறியைப் பார்த்துவிட்டு, 'ஸ்ரீலங்கா... ஸிலோன்..' என்கிறான்.

எனக்கு வியப்பு – மகிழ்ச்சி இரண்டும் ஏற்படுகிறது. நான்கு ஆண்டுகளுக்கு முன்பு பிரான்ஸ் போனபோது, அங்கே பல தென்னிந்தியர்களைப் போல் தோன்றும் இலங்கைவாசிகள் தமிழில் பேசிச் செல்வதைப் பார்த்திருக்கிறேன்.



'தமிழ் தெரியுமா?' என்று கேட்கிறேன்.

கேட்கும் போதே தமிழில் ஒரு மாசத்திற்குப் பின் ஒருவரிடம் பேசும் வாய்ப்புக் கிடைத்தது மகிழ்ச்சி தருகிறது.

'ஓ..' என்கிறான் அவன். நீங்கள் இந்தியர் எனப் புரிந்து கொண்டேன்... ஆனாலும் 'வாக்மெனில்' வந்த பாட்டின் ஒலி இலேசாகக் கேட்டது. ஹிந்தியாய் இருந்ததால் வட இந்தியராக இருப்பீர்கள் என்று எண்ணிக் கொண்டேன்...' என்கிறான் சிரித்தபடி.

"தமிழ் நாட்டில் எங்கு...?"

"மெட்ராஸ்... சென்னை..."

"அப்படியா...? சந்தோஷம்... நான் சென்னையில் இருந்திருக்கிறேன்." என்கிறான்.

'என்ன விஷயமாக இங்கு வந்திருக்கிறீர்கள்...?'

சொல்கிறேன்.

பேசாமல் கேட்டுக் கொள்கிறான். நீங்கள் இங்கே படிக்கிறீர்களா?' என்று கேட்கிறேன்.

'இல்லை... வேலையில் இருக்கிறேன்... இங்கு இலங்கைத் தமிழர்கள், தமிழ் நண்பர்கள் உண்டு... இப்போது கூட மெய்ன்ஸில் ஒரு நண்பரின் வீட்டு விசேஷத்தில் கலந்து கொண்டுவிட்டுத்தான் வீடு திரும்பிக் கொண்டிருக்கிறேன்...'

"அப்படியா...?' என்று கேட்கிறான்.

"ஆமாம்.... இந்த மாதிரி விசேஷங்கள் நண்பர்களைப் பார்க்க, பார்த்துப் பேச நல்ல சந்தர்ப்பம்... அதற்காகவே நாங்கள் காத்திருப்போம்..."

"ஓ..."

"நம் மொழியில் பேச... பேசுபவர்களைப் பார்க்க... ஒரு சந்தோஷம் இல்லையா...?"

தடங்கலின்றித் தமிழ் பேசினாலும், இலேசாக சிங்களம் இசைக்கிறது.

"இப்போது கூட என் பெற்றோர்கள் சென்னைக்கு அருகில்தான் இருக்கிறார்கள். நான் பள்ளிக் கூடம் போனது கூட சாந்தோம் அருகில்தான்..."

"எப்போது சென்னை வந்தீர்கள்...?" என்று கேட்கிறேன்.

"அது ஆயிற்று கிட்டத்தட்ட பத்து வருஷங்களுக்கு மேல்... இலங்கையில் நிலைகுலைந்து நாங்கள் சிதறி வந்த பின், தமிழ் நாட்டில் பல இடங்களில் வாழ்ந்தோம்.... ஆனால் தொடர்ந்து இருக்க முடியவில்லை...? காரணம் சொல்லாமலே விளங்குகிறது. இலங்கைத் தமிழன்... தீவிரவாதியாக இருப்பானோ என்று அபத்தமான ஒரு பயம் குளிர் திரியாக மனசில் பரவுகிறது. 'பாஸ்போர்ட்', விசா' இவற்றை அவர்கள் பறித்து விடுவர் என்று எங்கோ, எப்போதோ, படித்த ஞாபகம் திடீரென நெஞ்சில் அச்சுறுத்துகிறது. நானே தலையை அசைத்து பயத்தை உதறுகிறேன். சீ.. இந்த இளைஞன் கண்ணிய மானவனாகத் தோன்றுகிறான்."

"மெட்ராஸில் பலர் இருக்கிறார்கள். மனைவி... குழந்தை...?" என்று கேட்கிறான்.

"ம்.... மனைவி, ஒரு பெண் குழந்தை ஒன்றரை வயசு..."

"இங்கு வந்து எவ்வளவு நாளாகிறது...?"

"முப்பத்து மூன்று..."

"எப்போது திரும்புகிறீர்கள்....?"

"அடுத்த வாரம்..."

"தாய்நாட்டுக்குப் போவதை நினைத்தால் ரொம்ப சந்தோஷமாக இருக்கிறது இல்லையா...?" என்கிறான்.

"ஆமாம்..."

"ஒரு மாசத்திலேயே இந்த ஊர் அலுத்து விட்டதா?" என்கிறான்.

நான் புன்னகை செய்கிறேன்..

"அப்படியில்லை.... சாப்பாடு பிரச்னை..."

"வெஜிடேரியனா...?"

தலையாட்டுகிறேன்.

"பிரச்னைதான்... இவர்கள் வாழ்க்கை முறை நம்மிலிருந்து முற்றிலும் மாறுபட்டது. எனக்கு அதிகம் படிப்பு இல்லை.... ஏதோ ஒரு நண்பனின் உதவியில் இங்கு வந்து வேலை பார்க்கிறேன். நான் அனுப்பும் காசில்தான், அப்பா அம்மா, அங்கே

"அமைச்சருக்குத் திடீர்னு இந்தக் குளிர் ஜுரம் எப்படிம்மா வந்தது?"

"எல்லாம் உன்னால்தான்! முதல்வர், கவர்னரைப் பார்க்கப் போயிருக்கிற விஷயத்தை உன்னை யார் அவரிடம் சொல்லச் சொன்னது?"

— உ. ராஜாஜி



# ஜாதகப் பொருத்தம்!

''ஓர் உதவி இயக்குனர், மனம் வெதும்பி என்னிடம் சொன்ன விஷயம் இது: ஒரு தயாரிப்பாளரிடம் வாய்ப்பு கேட்டு, கதை சொல்லப் போனாராம் அவர். முதலில் உன் ஜாதகத்தைக் கொண்டுவா, என் ஜாதகமும், உன் ஜாதகமும் பொருத்தமா இருந்தால், அதன் பிறகு கதை கேட்கிறேன்' என்று சொல்லிவிட்டாராம். கோடிக் கணக்கில் முதல் போட்டு எடுக்கப்படும் திரைப்படங்கள், விஞ்ஞான ரீதியாக அணுகப்படுவதில்லை என்பது வேதனைக்குரிய விஷயம்.''

*'திரைக்கதை எழுதுவது எப்படி?' என்பது உட்பட சுஜாதா எழுதிய ஆறு நூல்கள் வெளியீட்டு விழாவின் போது நடிகர் நாசர்.*

– சி.எம்.



வாழ்கிறார்கள்...''

எனக்கு இதற்கு என்ன பதில் சொல்வது என்று தெரியவில்லை.. "அவர்களும் மற்றவர்களும் என்னைப் போன்றவர்கள் சம்பாதித்துக் கொண்டு சந்தோஷமாக இருப்பதாக நினைப்பர்.... ஆனால் அப்படியில்லை. நாட்டை விட்டு, ஊரைவிட்டு, உறவை விட்டு, மனிதர்களை விட்டு... ஆயிரக் கணக்கான மைல்கள் தாண்டி இருப்பதில் என்ன சுகம்?''

'வாஸ்தவம்தான்...' என்கிறேன்.

"நாங்கள் ஒரு வகையில் அலைகடல் துரும்பு... அலைக்கழிக்கப் படுகிறோம். முப்பது நாட்களிலேயே உங்களுக்குத் தாய் நாடு திரும்ப வேண்டும் என்ற ஆசை வருகிறது. அப்படித் திரும்ப ஒரு ஊரும், வரவேற்க உறவும், அணைத்துக் கொள்ள நாடும் இருக்கிறது...'' என்று ஒரு விநாடி நிறுத்தியவன்,

"எங்களுக்கு அது போல் ஒரு நாடும், வீடும் இல்லை பார்த்தீர்களா? என்று யுத்தம் ஓய்ந்து நாங்கள் எங்கள் பிறந்த மண்ணில் கால் வைப்போமோ தெரியவில்லை...'' என்று கூறும்போது கண்களில் கசியாத கண்ணீர் வார்த்தைகளில் ததும்புகிறது.

ஒரு கனத்த மௌனம் படுதாவாக இறங்குகிறது எங்கள் நடுவில்.

மின் தொடர் நிற்கும் இடம், நான் இறங்க வேண்டிய நிறுத்தம். சோகத்துடன் சோகையாகப் புன்கை செய்கிறான் அந்த இளைஞன். அவனுக்கு ஆறுதல் சொல்ல வார்த்தைகள் தேடித் தோற்றுப் போய் வெறுமே 'வருகிறேன்...' என்று விடை பெறுகிறேன்.

'உங்கள் பயணம் நல்லபடி அமையட்டும். நல்லபடியாக நாடு சென்று சேருங்கள்..' என்கிறான்.

காற்றுக் கண்ணாடிக் கதவுகள் திறக்க, பளிச்சென ஒளிரும் அந்த ரயில் நிலையத்தில் என் மனச் சுமையுடனும், கைச் சுமையுடனும் இறங்கி நடக்கிறேன்.

மின் தொடர்களின் கதவுகள் மூடிக் கொள்ள, ஒரு பெரிய மலைப் பாம்பு போல் ரயில் அவனைச் சுமந்து கொண்டு நழுவிச் செல்கிறது. நாங்கள் ஒருவருக்கொருவர் பெயரைக் கூடச் சொல்லிக் கொள்ளவில்லை. அவன் என்ன வேலையில் இருக்கிறான் என்பதைக் கூடக் கூறவில்லை... என்னைப் பற்றிய வேறெந்த விவரமும் கேட்கவுமில்லை...! என்பதையும் அப்போதுதான் உணருகிறேன். வெறும் மொழியும், நிறமும் எங்களை சில மணித்துளிகளுக்கு அந்நிய மண்ணில் ஒட்ட வைத்திருக்கிறது.

ஊரும், உறவும், நாடும் உள்ள நான், எவ்வளவு அதிர்ஷ்டசாலி என்று உணர்கையில், ஊர் தெரிந்தும் பேர் தெரியாத அந்தப் புலம் பெயர்ந்த இளைஞனின் வேதனையில் என் கண்கள் கசிகின்றன.

ஸ்டேஷனிலிருந்து வெளியே வருகையில், உள்ளேயிருந்த செயற்கைக் கதகதப்பு நீங்கி, சில்லென்ற குளிர் என்னை அணைத்துக் கொள்கிறது. ○

# “காட்டை எப்படித் திருத்த...?


* ராமசாமி

மக்கள் போராட்டங்களின் விளைவாக சுமார் நூற்றுப் பதினேழு சாயப்பட்டறைகள் இழுத்து மூடப்பட்டுள்ளன கரூரில்.

கரூர் நகரம் மற்றும் அதன் சுற்று வட்டாரக் கிராமப்புறப் பகுதிகளில், பல நூற்றுக் கணக்கான சாயப்பட்டறைகள் இயங்கி வருகின்றன. சாயப்பட்டறைகளில் மெத்தால் கலர் (இதனைக் கைக் கலர் என்கிறார்கள்) பயன்படுத்தி வந்த வரையில், சாயக்கழிவு நீரால் சுற்றுப்புறச் சூழலுக்குக் கெடுதல் எதுவும் நேர வாய்ப்பில்லையாம். இது கூடுதல் செலவைத் தந்தது என்பதால், கடந்த நான்கைந்து ஆண்டுகளாக உப்பை அதிக அளவில் சேர்த்து, ப்ரோசிங் கெமிக்கலுடன் கலந்து பயன்படுத்தி வருகின்றனர். இதனால் சாயப்பட்டறைகளிலிருந்து வெளியேறும் கழிவு நீர், மிக அதிக நச்சுத் தன்மை கொண்டதாக இருந்து வருகிறது.

இங்கிருக்கும் ஒட்டுமொத்தச் சாயப்பட்டறைகளின் சாயக்கழிவு நீரை, எட்டு இடங்களில் உள்ள பொது சுத்திகரிப்பு நிலையங்கள் மூலமாக, பள்ளபாளையம் ராஜ வாய்க்காலிலும், திருமாநிலையூர் ராஜ வாய்க்காலிலும் செலுத்துகின்றனர். இதில் இரண்டு சுத்திகரிப்பு நிலையங்களில் மட்டும் எதிர் மறைச் சவ்வூடு முறையில், முழுமையாகச் சுத்தம் செய்யப்பட்டு வெளியேற்றப் படுகின்றது. மேலும் இந்நீரை ரீ சைக்கிளிங் முறையில் திரும்பவும் சாயப் பட்டறைகளில் பயன்படுத்திக் கொள்ள முடியுமாம். ஆனால் இம் முறையைச் செயல்படுத்த, அதிகளவு பணம் செலவாகும் என்பதால், சாயப்பட்டறை உரிமையாளர்கள் தயங்குகின்றனர்.

இப்பொழுது பிரச்னை வெடித்திருப்பது, திருமாநிலையூர் ராஜ வாய்க்காலில் வந்து விழுகின்ற சாயக்கழிவு நீரினால்!

கருப்பம்பாளையம் கிராமப் பகுதியிலுள்ள நாற்பத்து ஏழு சாயப்பட்டறைகளுக்கு, ஒரு பொது சுத்திகரிப்பு நிலையம். சுக்காலியூர் கிராமத்தைச் சுற்றியுள்ள அறுபத்து மூன்று சாயப்பட்டறைகளுக்கு ஒரு பொது சுத்திகரிப்பு நிலையம். இவை இரண்டிலிருந்து வெளியேறும் கழிவு நீர் திருமாநிலையூர் ராஜ வாய்க்காலில் சென்று விழுகின்றது. இது தவிர, கருப்பம்பாளையம் மற்றும் அப்பிபாளையம் பகுதியில் அமைந்துள்ள ஏழு தனியார் சாயப்பட்டறைகளின் கழிவு நீரை, அந்தந்தப் பட்டறைகளுக்குச் சொந்தமான பட்டா நிலங்களில் பாய விட்டுக் கொள்கின்றனர்.

இந்த இரண்டு வகையான சாயக்கழிவு நீர் வெளியேற்றங்களினால், இப் பகுதிகளின் பெரும்பான்மையான நிலங்களில் மண் வளமும், பாசனக் கிணறுகளும், குடிநீர் ஆதாரங்களும் முற்றிலும் பாழ்பட்டுப் போயுள்ளன. விளைநிலங்கள் மண் வளத்தை இழந்ததோடு, இப் பகுதி மக்கள் குடிநீருக்குத் தவிக்கும் நிலைக்கும் தள்ளப் பட்டுள்ளனர்.

பெரும்பாலான பாசனக் கிணறுகளின் தண்ணீர், விவசாயப் பயன்பாடுகளுக்குப் பயனற்றுப் போயுள்ளது. இப் பகுதி விவசாயிகள் பணம் செலவு செய்து, அமராவதி ஆற்றிலிருந்து ஸ்கீம் வாட்டர் முறையில் தண்ணீர் பெற்று பாசனம் செய்து வருகிறார்கள். இதனால் எல்லா விவசாயி



# கடனை எப்படிக் கட்ட?"

களாலும் விவசாயம் செய்ய முடிவதில்லை.

பத்து ஏக்கர் உள்ளவர் ஐந்து ஏக்கருக்கும், ஐந்து ஏக்கர் உள்ளவர் இரண்டு ஏக்கருக்கும், ஒரு போக சாகுபடியாக மட்டுமே பயிர் செய்து கொள்ள முடிகிறது. சிறு விவசாயிகள் தங்கள் நிலங்களைத் தரிசுக் காடாகப் போட்டு வைத்துள்ளனர். பாசனத் தண்ணீருக்கென பெருமளவில் அவர்கள் செலவிட வேண்டியுள்ளதால், விவசாயத்தை விட்டு விட்டு வேறு வேலைகளுக்குச் சென்று வருகின்றனர்.

இவற்றை மீறி அவர்கள் ஒரு போக சாகுபடிக்கு என பாடுபடும்போது, நாற்றுப் பிடுங்கி நட்ட வயலில் இரண்டு மாதமாகியும் நெற்பயிர் வளர மறுக்கின்றது.

கரும்புக்குத் தண்ணீர்ப் பாய்ச்சி நன்கு வளர்ந்து வருமென காத்திருந்த வேளையில், குறுத்துக் காய்ந்து போய், வேர்களும் அழுகிப் போனதால், ஆவேசங் கொண்டு தமது மூன்று ஏக்கர் கரும்புக் கொல்லையை தீ வைத்துக் கொளுத்தியிருக்கிறார் ஒரு விவசாயி!

"நாலு வருசமா நல்ல வெள்ளாமை இல்லீங்கோ. நகை நட்டு வித்துப் போட்டு வெளையும் வெளையும்ன்னு நம்பி இப்ப ஒரு லட்ச ரூபா கடனாளி ஆயிட்டேனுங்கோ. கடனை எப்படிக் கட்டுறது? காட்டை எப்பிடித் திருத்தறதுன்னு ஒரு வழியும் தெரியலீங்க" எனக் கண்ணீர் விடுகிறார் பாக்கியம்மாள்.

"என்னோட நாலு ஏக்கர் நிலத்துல ஸ்கீம் தண்ணி வாங்கி ஒண்ணரை ஏக்கர்தாங்க பாசனம் பண்றேன். மீதி ரெண்டரை ஏக்கர் தரிசுக்காடாப் போட்டு வைச்சிருக்கேன். இங்கே மனுசன் குடிக்கவும் நல்ல தண்ணி இல்லே. இந்த மண்ணு குடிக்கவும் நல்ல தண்ணி இல்லீங்க!'' எனக் கூறுகிறார் விவசாயி ராமசாமி.

குடிநீருக்காக கருப்பம்பாளையம், கக்காவியூர் மற்றும் அதன் சுற்றுப்புறக் கிராமத்தினர் படும் அவஸ்தை சொல்லி மாளாது. அப்பிபாளையம் கிராமத்தில் உள்ள அடி பம்ப்புகள் அருகே, தமிழ்நாடு குடிநீர் வடிகால் வாரியம் ஒரு எச்சரிக்கைப் பலகை வைத்துள்ளது. 'இந்த அடி பம்ப் தண்ணீர் நல்ல தண்ணீரல்ல. குடிக்கவோ, சமைக்கவோ பயன்படுத்தாதீர்கள்!' என்று.

பத்துப் பன்னிரண்டு ஆண்டுகளில் இப் பகுதிகளில் அதிகமாக வேரூன்றிய சாயப்பட்டறைகளின் சாயக்கழிவு நீர், இப்பொழுது அப் பகுதி மக்களின் குடிநீருக்கும், விவசாய நிலங்களின் மண் வளத்துக்கும் ஒரு சவாலாக இருந்து வருகிறது.

கரூர் மாசுக் கட்டுபாட்டு வாரிய அலுவலகத்தில், மாவட்ட சுற்றுச்சூழல் நலப் பொறியாளரை நேரில் சந்தித்தோம். சாயக் கழிவு நீர்ப் பிரச்னை சம்பந்தப்பட்ட எதையுமே நம்மிடம் பேச மறுத்துவிட்டார் அவர்!

கட்டுரை, படங்கள்:
ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு



* பாக்கியம்மாள்





- சாயக்கழிவு கொடூரம்



புற்றுநோய், நீரிழிவு போன்ற வியாதிகளால் துன்பப்படுபவர்களுக்கு ஆறுதல் தரும் வண்ணம் பராக்கா நெஜில்லா சத்தீவர என்ற மூலிகை மருந்து சந்தைக்கு வந்துள்ளது. பக்க விளைவுகள் ஏதுமின்றி, ஆஸ்துமா, இரத்த அழுத்த நோய், சிறுநீரகம் பழுதடைதல், புற்று நோய், சருமம் சம்பந்தப்பட்ட வியாதி, இளநரை போன்றவற்றுக்கும் சிறந்த மருந்தாக புதுதில்லி மத்திய சுகாதாரம் மற்றும் குடும்ப நல அமைச்சகம் பரிந்துரைத்திருக்கிறது.

**கிரீனிஸ் (இந்தியா) ட்ரேட்ஸ் பிரைவேட் லிமிடெட், 35. சாந்தோம் ஹைரோடு, சென்னை - 4.**

# புத்தம் புதுசு!

தங்கத் தகடுகளால் உருவாக்கப்பட்ட தெய்விகப் படங்களையும், கலை, பரிசுப் பொருட்களையும், விநியோகித்து வருகிறார்கள், சென்னை கேஸர் ஜுவல் கிராஃப்ட் நிறுவனத்தினர். சுவர் அலங்காரப்



பொருட்கள், நகைப் பெட்டி என அற்புதமான சேகரிப்புகள் இங்கே கிடைக்கின்றன.

**கேஸர் ஜுவல் கிராஃப்ட், விடிஎஸ் ஹவுஸ், கதிட்ரல் ரோடு, சென்னை - 86.**



உலகத் தரம் வாய்ந்த பேரீச்சம் பழங்களை ஃபார்ம் ஃபிரெஷ் சுவையுடன் சிரிய முறையில் பேக்கிங் செய்து விற்கிறார்கள் 'டேட்ஸ் ப்ளஸ்' நிறுவனத்தினர். அரேபிய நாட்டிலிருந்து தருவிக்கப்பட்ட கொட்டையுடன் கூடிய தரமான பழம் என்பதும், கைப் படாமல் மிகவும் சுத்தமான முறையில் 'பேக்' செய்யப்படுகிறது என்பதும் டேட்ஸ் ப்ளஸின் சிறப்பம்சங்கள்.

**டேட்ஸ் ப்ளஸ், 22, விஜயராகவா ரோடு, ஜி - 6 ஸ்வாதி கோர்ட், தி.நகர், சென்னை - 17.**




இடியாப்பம், சேமியா இரண்டுக்கும் இடைப்பட்ட 'கன்கார்டு ரைஸ் சேவை' என்ற வித்தியாசமான அரிசி சேவையை ஸ்ரீ பாரத் ஃபுட் பிராடக்ட் நிறுவனம் அறிமுகப்படுத்தியுள்ளது. தக்காளி, புளியோதரை, தேங்காய், எலுமிச்சை என நான்கு சுவைகளில் கிடைக்கும். இந்தத் திடீர் சேவையைச் செய்ய மூன்று நிமிடங்களே போதுமானது.

**ஸ்ரீ பாரத் ஃபுட் பிராடக்ட், 29 மாசிலாமணி தெரு, நேதாஜி நகர், இராயப்பேட்டை 600014**

ராதாகிருஷ்ணனின் உடம்பு குலுங்கியது. மனம் உருகியது. ஆனால் உயிர் போகவில்லை.

'செத்துப் போ... செத்துப் போ' என்று யாரோ தன்னைச் சுவற்றில் அடிப்பது போல, ஒரு வேகமும் வேதனையையும் உணர்ந்தார். என்ன வேண்டுமானாலும் செய்து கொள் என்பது போல, தன்னைச் சுற்றி நடக்கின்ற வேகத்தை அனுமதித்தார்.

உடம்பு விட்டு வெளியே வந்தார். மிதந்தார்.

இதுதான் மரணமா?

ஆவலாக யோசித்தார்.

சகலமும் அவருக்குத் தெரிந்தன. அவர் மறுபடியும் கண் விழித்து உட்காரும்போது, ஒன்றரை மணி நேர அனுபவம் அது என்பது புரிந்து போயிற்று.

சிரிப்பு வந்தது. அழுகை வந்தது. கருணையோடு சங்கரய்யர் இருந்த திசை நோக்கிக் கை கூப்பினார்.

'ரொம்ப சந்தோஷம்' என்று சங்கரய்யர் நேரே இருப்பது போலப் பேசினார்.

அவர் பேசிய பதினைந்தாவது நிமிடம் சங்கரய்யர் உள்ளே நுழைந்தார். கதவு திறந்தார். தொலைவிலிருந்து பார்த்தார்.

"பட்டாபிஷேகம் ஆயிடுத்தா. ஆஹா... ஆஹா... என்ன உயர்ந்த களையா உன் முகத்துல, ச்சு...ச்சு...ச்சு.... அற்புதம் நடந்திருக்குய்யா. ரொம்ப சந்தோஷம். இன்னொரு சங்கரய்யர் பிறந்துட்டார். வாழ்க... வாழ்க!"

தள்ளாடி எழுந்திருந்து ராதாகிருஷ்ணன் சங்கரய்யரை நோக்கி வணங்க, சங்கரய்யர் முன்னேறி, "எதுக்கு, எது எதை நமஸ்காரம் பண்ணணும். தேவையில்லையே" என்று சொல்ல, 'ஆமாம்' என்று தலையசைத்தார்.

மறுபடியும் உட்கார்ந்து கொண்டார்.

"வெளிய சொல்ல வேண்டாம். காண்பிச்சுக்கவும் வேண்டாம். சாதாரணமா இருங்கோ. எல்லாரோடயும் பேசிண்டிருங்கோ. அதுதான் நல்லது. ஜனங்கள் கிட்ட வரட்டும். அப்படியே ஒதுங்கி எங்கேயாவது ஓரமா போயிடலாமேன்னு தோணும். இல்லை. இவாளுக்கு நடுவுல உட்கார்ந்துண்டு, இவா துக்கத்தைத் தீர்க்கறதுதான் நம்ம வேலை. பூமியை உதறிட்டு எங்கயும் போக முடியாது. எந்தக் காட்டுக்குப் போனாலும் இந்தப் பூமிக்குண்டான காரியங்கள் பண்ணத்தான் வேணும். அதை இங்கேயே பண்ணிடறது. சரியா?" என்று உரக்கக் கேட்க, ராதாகிருஷ்ணன் அவரை உற்றுப் பார்த்தார்.

"அதுதான் பண்ணணும்" என்று பதில் சொன்னார். இரண்டு நாள் அந்த பரவசத்தோடேயே கிடந்தார். பிறகு மெல்ல கீழிறங்கி காளிகாம்பாள் கோவிலுக்குப் போனார்.

## பாலகுமாரன்




கோவில் என்பது என்ன என்று புரிந்தது. திரண்ட சக்தி பல்வேறு இடங்களில் பதுங்கியிருப்பது தெரிந்தது. அன்று மாலை ரேவதியும் சுபத்ராவும் வந்தார்கள்.

"இவ என்னமோ சொல்றா பாருங்கோ."

பதறிய குரலில் ரேவதி அவரிடம் பேசினாள்.

"என்ன? என்ன வேணும் சுபத்ரா?"

அமைதியாக மகளைப் பார்த்து ராதா கிருஷ்ணன் கேட்டார்.

# மனம் உருகுதே

அவன் ஓர் உயிர் என்பதாக, ஜீவன் என்பதாக, ஒரு பெண் என்பதாகத் தெரிந்ததே தவிர, மகள் என்ற எண்ணம் நகர்ந்து போயிருந்தது. அது அவருக்கே ஆச்சரியமாக இருந்தது.

"பார், இந்த அம்மாவோட பெரிய பிரச்னையா ஆயிப்போச்சு. கோவிந்தன் நம்ம வீட்டுக்கு வரக்கூடாதுன்னு சொல்றா. நான் கோவிந்தனைத்தாம்ப்பா கல்யாணம் பண்ணிக்கப் போறேன். இதை அம்மாகிட்ட சொல்லிட்டேன். எங்கிட்ட சொல்லாத. அப்பாகிட்ட சொல்லு. அப்படிங்கறா. உன்கிட்டயும் சொல்லியாச்சப்பா."

"சரி, நீ தீர்மானம் பண்ணிட்டா அதுக்கு நான் குறுக்க நிக்கலை."

"என்ன இப்படிப் பேசறேள்."

ரேவதி கத்தினாள்.

"ச்சு... சங்கரய்யர் இதை எப்பவோ சொல்லிட்டார் இல்லை. இன்னைக்கு ஏன் கத்தற. உன்னால தடுக்க முடியும்னு ஏன் நினைக்கற. அவர் என்ன சொன்னார். அவ சந்தோஷமா இருப்பா. அவ சந்தோஷமா இருக்கறதுதானே நம்முடைய வேலை. மாட்டேன்னு மறிச்சு வேற இடத்துல கொடுத்து, அவ சந்தோஷமா இல்லைன்னாக்க நமக்குத்தானே கஷ்டம். மதம் மாறப் போறதில்லை. இந்துவாத்தான் இருக்கப் போறா. எனக்கு அது நிம்மதி. கோவிந்தன் நல்லவனாகத் தானே தெரியறான்."

"தேங்க்யூப்பா... தேங்க்யூ."

பெண் குதித்தது.

"அவர் நல்லவர் மட்டும் இல்லைப்பா. அவருக்கு என்னை மாதிரி ஒரு கெட்டிக் காரப் பொண் தேவைப்படறது. அவரும் நானும் சேர்ந்து, ஒரு இன்ஸ்டிடியூட் ஆரம் பிக்கப் போறோம். என்ன இன்ஸ்டிடியூட் தெரியுமா? கேட்டரிங் டெக்னாலஜி. ஏரோப் ளேன்லேர்ந்து, ஃபைவ் ஸ்டார் ஹோட்டல் வரைக்கும் எப்படிப் பரிமாறது? அப் படின்னு சொல்லித் தரப் போறோம். தாம்பரத்துக்குக்கிட்டயே ஆரம்பிக்கப் போறோம். இந்த வருஷம் பாய்ஸ் மட்டும் சேர்க்கப் போறோம். இது சரியா வந்த துன்னா, கேர்ன்ஸ்லையும் சேர்த்துக்கப் போறோம்."

"காசு வேணுமேம்மா."

"ஆமாம்ப்பா... அவர்கிட்ட அஞ்சு லட்ச ரூபா காசு இருக்கு. என்னை அஞ்சு லட்ச ரூபா கேட்கறாரு. கல்யாணத்துக்குப் பதிலா காசு கொடுத்துரப்பா. நாங்க ரிஜிஸ்டர் மேரேஜ் பண்ணிக்கறோம்."

"அக்னி வளர்த்து, ஹோமம் பண்ணி தாலி கட்ட மாட்டியாம்மா?"

"இல்லைப்பா. எனக்கு அதுல நம்பிக்கை இல்லை."

அவர் மகள் அவர் முகத்திற்கெதிரே அவர் கொண்ட கொள்கையை உடைத்து கீழே போட்டாள்.

ராதாகிருஷ்ணன் அமைதியாக இருந்தார்.

இது அவளுடைய வாதம். அவளுடைய வாழ்க்கை. இதில் திணிப்பதற்கு என்ன இருக்கிறது. எதுவும் தெரியாத குழந்தை. எல்லாம் தெரிந்ததுபோல் பேசுகிறது. இதில் மறுப்பதற்கு என்ன இருக்கிறது? அவள் அனுபவம் அவளுக்கு. இறை நம்பிக்கை, இந்தச் சடங்குகள் மீது நம்பிக்கையைத் தரட்டும். வாழ்க்கையின் வெற்றியில் இம்மாதிரியான கணக்குகள் வராது. இறைவன் கருணையால்தான் வரும், என்பதை அவள் அனுபவித்துத் தெரிந்து கொள்ளட்டும்.

அவர் கண் மூடி உட்கார்ந்து கொண்டிருந்தார்.

"முதல்ல மூணு லட்சம் கொடுப்பா. அப்புறம் இரண்டு லட்சம் கொடு" என்று கேட்க, சரி என்று சொன்னார்.

"எப்பப்பா காசு தருவே?"

"உன் பேர்ல ஒரு பிக்ஸட் டெபாசிட் போட்டிருக்கேன். அதுல இப்போ மூன்றரை லட்ச ரூபா வரும். அதை உங்கிட்ட கொடுத்துடறேன். கொஞ்சம் காசு உனக்குன்னு வைச்சுக்கோ. மிச்சத்தை அவன்கிட்ட கொடு. ஜாக்கிரதையா இரு" என்று சொல்ல, ரேவதி உரத்த குரலில் ஏதோ பேச ஆரம்பித்தாள்.

"சாயந்திரம் அவனைக் கூட்டிண்டு வா."

கோவிந்தனை அழைத்து வரும்படி ராதாகிருஷ்ணன் கட்டளையிட, மாலை கோவிந்தன் வந்தான்.

"இந்த வீட்லேதான் நீங்க இருந்தீங்களா, இப்பவும் நீங்க இங்கதான் இருக்கீங்களா. வேற யாரும் வரவேயில்லையா?"

அவன் வியப்போடு சுற்றிப் பார்த்துக் கேட்டான்.

"கொத்தவால்சாவடி ரொம்பக் கிட்டக்க இல்லை?"

வியந்தான்.

இந்த மாதிரி வீடுகளைப் பார்த்தே இராதவன் போல, மேலும் கீழும் வியந்து வியந்து பல விஷயங்களைக் கொண்டாடினான்.

"ரேவதி சொல்லிச்சிங்களா?" என்று கேட்டான்.

அவர் தலையசைத்தார்.

திருமணம் பதிவு பெற்ற நாளில் காசு தருவதாகச் சொன்னார்.

அவன் உற்சாகமாக சுபத்ராவோடு வெளியே போனான். ரேவதி அவர் எதிரே உட்கார்ந்து விசும்பி அழ, மிருதுவான குரலில் ராதாகிருஷ்ணன் சொன்னார்.

"பொண்ண மறந்துடு. பிள்ளைக்கு வரன் பாரு. அவனைக் கூட்டிண்டுப் போடான்னு சொல்லு. உன் பேச்சைக் கேட்கற மருமகளாப் பார்த்துக்கோ. எங்க கூப்பிட்டாலும் சந்தோஷமா போ. இடம் எதுவா இருந்தா என்ன? தாம்பரமா இருந்தா என்ன, ஜார்ஜ் டவுனா இருந்தா என்ன? இந்தோனேஷியாவிலிருந்தா என்ன, ஜப்பானா இருந்தா என்ன? எல்லா இடத்துலயும் நீ ரேவதியாத்தான் இருக்கப் போற. அப்படியே இரு. பிள்ளைக்கு உன்னைப் பிடிக்கும். உனக்குப் பிள்ளையைப் பிடிக்கும். இது போதும். போயிட்டு வா."

"உங்களை யாருமே கவனிச்சுக்கறதுக்கு இல்லையே."

"வருவா. நிறையப் பேர் வருவா. என்னை உள்ளங் கையில தாங்குவா. அது தவிர, என்னைக் கவனிச்சுக்க வேண்டிய அவசியம் எனக்கும் இல்லை. உனக்கும் இல்லை. அது

---

"வீட்ல சம்சாரம் கூட சண்டையா சார்?"

"உங்களுக்கு எப்படி தெரியும்?"

"நேத்து உங்களோட திரும்பி வந்த கதையைக் குடுத்தப்ப கை தட்டி சந்தோஷப் பட்டாங்களே!"

- அம்பை தேவா



பகவானுடைய கவலை."

அவர் ரயில்வே லைனுக்குப் பக்கத்தில் இருந்த தன்னுடைய நிலத்தை, முதலியாரை விட்டு விற்கச் சொன்னார். ஒரு சினிமா நடிகருக்கு ஒட்டு மொத்தமாய் ஒரே முறை, ஒரே தவணையில் நிலம் கைமாறிற்று.

மகனுக்கு செக்யூரிட்டி டெபாஸிட்டைக் கொடுத்தார். மகனுக்கு என்று ரேவதியிடம் காசு கொடுத்தார். மறுபடியும் மகள் வந்தால் கொடு, என்று இன்னொரு பங்கும் ரகசியமாக வேறொரு வங்கியில் கணக்கு ஆரம்பித்தார். மீதி சில லட்சங்களை எடுத்துக் கொண்டு படப்பையின் உள்பக்கம் போய், மலைச்சரிவில் இருந்த ஒரு நிலம் வாங்கப் புறப்பட்டார்.

யாரோ ஒரு ஜோசியர் வந்து இந்த நிலம் ஜாக்கிரதையாக வாங்க வேண்டும். கவிழ்த்து விடும். ஒவ்வொரு நிலமும் ஒவ்வொரு விதம் என்று சொல்ல, ஜோசியரை அலட்சியப் படுத்தி நிலம் வாங்கினார். நிலம் வாங்கிய ஆறாம் நாள் வீட்டுக்குள் இருந்த டீ.வி, டேப்ரிகார்டர், வி.சி.ஆர் எல்லாம் திருடு போயிற்று. வெள்ளிப் பாத்திரங்கள் சிலதும் கொள்ளையடிக்கப்பட்டிருந்தன. சகலமும் சோதனை என்பது புரிந்தது.

போலீஸ்... போலீஸ் என்று முதலியார் பதற, "வேண்டாம். போலீஸில் புகார் கொடுக்க வேண்டாம். திருடியவன் தண்டிக்கப் படுவான்" என்று சொன்னார்.

ஜார்ஜ் டவுன் வீடு கைமாறிற்று. அந்த பனியா காலில் விழுந்தான்.

"சங்கரய்யர் மகான். நீங்களும் அதே போல ஜொலிக்கிறீர்கள். நீங்கள் உட்கார்ந்த வேளை இந்த வீடு கைமாறிற்று. உங்களுக்கு நான் என்ன செய்ய வேண்டும், சொல்லுங்கள்" என்று சொல்ல, அந்த மலைக்குக் கீழே இருக்கின்ற நிலத்தைச் செப்பனிட்டுத் தரும்படி கேட்டுக் கொண்டார்.

எதற்காக வாங்குகிறீர்கள் என்று கேட்க, "சங்கரய்யர் எப்படி டவுனில் உட்கார்ந்திருக்கிறாரோ, அதேபோல இந்த மலைக்கருகே நானும் உட்கார்ந்து கொள்ள வேண்டும்" என்று விளக்க "ஆசிரமம்தானே நான் கட்டித் தருகிறேன்" என்று அந்த பனியா மிகப் பிரியமாகச் சொன்னார்.

பெரிய கூடம் ஒன்றும் கட்ட வேண்டுமென்றும் சொன்னார்.

வங்கியில் நிலத்தை அடமானம் வைக்க வங்கி அதிகாரிகள் வருவதாக இருந்த அன்று பலத்த மழை பெய்தது. மார்பளவு தண்ணீர் ஓடிற்று. எங்கிருந்தோ ஓடை



"டீ.வி.யில் என்னத்த அப்படி சீரியஸா பார்த்துக்கிட்டிருக்கே.."

"டிஸ்டர்ப் பண்ணாதீங்க! வென்னீர் வைப்பது எப்படினு இந்தம்மா விளக்கமா சொல்லிக்கிட்டிருக்காங்க!"

- உ. ராஜாஜி

உடைத்துக்கொண்டு இந்தப் பகுதியில் நுழைந்து, சகலத்தையும் அடித்துக் கொண்டு போயிற்று. உள்ளே மண் தள்ளியது. ஆனால் வந்தது அத்தனையும் வண்டல் மண். தொலைதூரமுள்ள மாட்டுக் கொட்டகையிலிருந்து மாட்டுச் சாணம் அடித்து வந்து, இங்கே பரவியிருப்பதை அவர் கால் வைத்து நடக்கும்போது தெரிந்துகொண்டார்.

நீர் வடிந்து இடம் முழுவதும் கறுப்புச் சேறாய் ஆக, எல்லோரும் கவலை தெரிவித்தார்கள்.

பனியா வந்து பார்த்துவிட்டு பயந்தான். ஆசிரமக் கட்டடம் வேண்டாம். அந்த இடத்தில் ஒரு கருங்கல் சுவர் கட்டிக் கொடுத்துவிடு. சுவர் வழியாக சுவருக்கு மறுபக்கம் கால்வாய் வெட்டிவிடு. சுவரின் மீது தண்ணீர் மோதி, கால்வாய் வழியாக வேறு பக்கம் போகட்டும். ஆனால், மறுபடியும் அப்படியொரு மழை பத்து வருடம் கழித்துத்தான் பெய்யும். எதற்கும் நீ சுவர் கட்டிவிடு" என்று சொல்ல, பனியா சுவர் எழுப்பினார்.

ராதாகிருஷ்ணன் வங்கியில் கடன் வாங்கி பெரிய கூடம் கட்டினார். ஒரு சமையல் அறையும், தான் படுப்பதற்கென்று ஓர் அறையையும் ஏற்படுத்திக் கொண்டார்.

மகளுக்குத் திருமணம் நடந்தது. மகளுக்குத் திருமணம் நடந்த மறுமாதம் மகனுக்குத் திருமணம் நடந்தது. மகனுக்குத் திருமணம் நடந்த மறுமாதம் ரேவதி மகனோடு ஜப்பானுக்குப் பயணமானாள்.

"பையன் கெட்டிக்காரத்தனத்தைப் புரிஞ்சுண்டு, நீ எங்களோடயே இருன்னு ஜப்பான்காரா சொல்லிட்டாளாம். கூட

சம்பளமாம்."

ரேவதி சொன்னது ஒரு காதில் விழுந்து இன்னொரு காது வழியாகப் போயிற்று.

"இந்த இடத்துக்கு என்ன பேர் வைக்கறது?"

பனியா கேட்டார்.

"சங்கரம்."

ஒற்றை வார்த்தையில் பதில் சொன்னார்.

சற்று நேரம் கழித்து "இல்லை. ஸ்ரீ சங்கரம் என்று எழுதுங்கள்!" என்று சொன்னார்.

வெளியே பெரிதாய் ஸ்ரீ சங்கரம் என்று கருங்கல் பதிக்கப்பட்டது.

"உள்ள சிலை ஒண்ணும் இருக்காதா?"

"இருக்காது. ஒரு சமாதிதான் இருக்கும்."

"யார் சமாதி?" கேள்வி வந்தது.

ராதாகிருஷ்ணன் மௌனமாக இருந்தார்.

ருக்மணி அன்று மாலை வந்தாள்.

"எங்கிட்ட ரகசியமா சங்கரய்யர் ஒரு சேதி சொல்லி அனுப்பியிருக்கார்" என்று மிருதுவாகப் பேசினார்.

என்ன என்று ராதாகிருஷ்ணன் கேட்ட போது "அவர் இங்கதான் வந்து உட்காந்துக்கப் போறாராம். எட்டடிக்கு ஆறடி, பத்தடி ஆழம் தோண்டி சிமெண்ட்டு போட்டு மூடறதுக்கு, பாறாங் கல்லும் வாங்கி வைக்கச் சொல்லியிருக்கார். இது வேற யாருக்கும் தெரிய வேண்டாம்னு சொல்லியிருக்கார்."

ராதாகிருஷ்ணன் சரியென்று தலையசைத்தார். அவர் கட்டிய கூடத்திற்குத் தலைப்பக்கம் அவ்விதமாகவே ஒரு அமைப்பு செய்யப்பட்டது.

ராதாகிருஷ்ணன் தோட்ட வேலை செய்து கொண்டு, ஜபம் செய்து கொண்டு ஆசிரமத்தைச் சுற்றிச் சுற்றி வந்தார்.

அந்த இடம் பூத்துக் குலுங்கியது. கடும் வெய்யில் நாளிலும் அந்த இடம் குளுமையாக இருந்தது.

இந்த இடம் இத்தனை ரம்மியமாக இருக்கறதுக்குக் காரணம், பூவா, புல்லா, ராதாகிருஷ்ணனா, இந்த மலையா என்று யாரோ கேட்டார்கள்.

ராதாகிருஷ்ணன் திரும்பி அவரைப் பார்த்து, இதுக்குக் காரணம் சங்கரய்யர் என்கிற மகான் என்று சொன்னார்.

கூடத்திற்கு அருகே பலகை போட்டு, பலகை மீது மான் தோல் போட்டு, சுவரில் சாய்ந்தபடி அந்தக் குடிலைப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தார். உள்ளே மனம் உருகி வழிந்தது.

'சீடர்களை வேணு புத்தி, சிலா புத்தி, தைல புத்தி என்று பிரிப்பதுண்டு...' சங்கரய்யர் பேச்சு ஞாபகம் வந்தது.

வேணு என்றால் மூங்கில். கணுக்கணுவாக மூங்கிலை வெட்டிப் போட வேண்டும். ஒவ்வொரு விஷயமும் சில சீடருக்குச் சொல்லித் தர வேண்டும்.

பாறையை உடைக்க சுற்றி இரண்டங்குலம் ஓட்டைகள் போட்டு நடு ஓட்டையில் ஆணி வைத்து வேகமாய் அடிக்க, ஓட்டைகள் வழியே பாறை பிளந்து இரண்டாகும். சில சீடருக்கு ஒரு விஷயம் விளக்கினால் போதும்.

தைலம் விட்ட இடத்தில் சுற்றி வட்டமாகப் பரவும். தானாக நகர்ந்து பெரிதாகும். சில சீடருக்குச் சொல்லுதலே தேவையில்லை. பார்வை போதும். மனம் உருகினால்தான் தைல புத்தி.

சங்கரய்யர் வருகைக்காக ராதாகிருஷ்ணன் சகலமும் தெரிந்து காத்துக் கொண்டிருக்கிறார். அவர் தவம் தொடர்கிறது.

(முற்றும்)



# ஓரங்கட்ட போறேன்!

அடுத்தடுத்த ரவுண்டுகளில் மார்க்கெட் பிடிக்க முயலும் நடிகைகளின் வழக்கமான டயலாக்கைத்தான் இப்போது ஊர்மிளாவும் சொல்கிறார். சொன்னாலும் பரவாயில்லையே, தபு, ரவீணா, கரீஷ்மா, மணிஷா எல்லோரையும் சீக்கிரமாக ஓரங்கட்டுகிறேன் என்று சவால் விடுகிறார். 'கவர்ச்சியாக வந்தால் மட்டும் போதாது ஊர்மி, கொஞ்சம் நடிப்பையும் காட்ட வேண்டும் அவர்களை ஓரங்கட்ட' என்கிறார்கள் பாலிவுட் வட்டாரத்தில்.

- விஸ்வக்.



# பாற்கடல்

(ஆன்மீக மாத இதழ்)

★ சமய இலக்கியங்களின் சங்கமம்

★ தெய்வீகத் திருமேனிகளின் திருப்பொலிவு

★ வேத கீதங்களின் விளக்கம்

★ மெய்யன்பர்ளை மெய்சிலிர்க்க வைக்கும் இறைநெறி உரைகள் மற்றும் ஏராளமான ஆன்மீகச் செய்திகள், வண்ணப் படங்களுடன் வாசகர்களை பக்திப் பரவசப்படுத்த பவனி வருகிறது.

விலை ரூ. 10

**இப்பொழுது விற்பனையில்...**

ஏஜெண்டுகள் விண்ணப்பிக்கவும்:

நிர்வாகி,

பாற்கடல்,

29, திலக் தெரு, தி.நகர், சென்னை - 600 017.

போன்:8341865, 8341621

# நடக்குமென்பார்; நடக்கும்!

**மேஷம் :** உங்கள் ராசி அப்படி! எடுத்த காரியம் எவ்வளவு கடினமாக இருந்தாலும், உங்கள் கவுரவத்தை விட்டுக் கொடுக்காமல், நேர்மையாக வெற்றி காண்பீர்கள். உத்தியோகத்தில் எதிர்ப்புகள் விலகும். புதிய வியாபாரம், தொழில் முயற்சி எது செய்தாலும் அட்ரா... சக்கைதான்! தனியார் துறைகளில் வேலை செய்பவர்களுக்கு, லிஃப்ட் வைத்தது போல சல்லென்ற ஏற்றம் இருக்கும். அரசுப் பணியாளர்களுக்கு ஆதாயமான காலம். கணவன் - மனைவி இடையே பனிப்போர் மூளலாம். பேச்சில் நிதானம் தேவை.





**ரிஷபம் :** சின்னத் துரும்பு கிடைச்சாலும், துடுப்பாகப் பயன்படுத்தி, எதிர்நீச்சல் போட்டு வாழும் குணம் உங்களுடையது. இந்த வாரம் பொருளாதார அபிவிருத்தியும் சேர்ந்து கொள்வதால், மகிழ்ச்சிக் கடலில் உல்லாசமாக நீந்துவீர்கள். வெளிநாட்டுத் தொடர்பால் அனுகூலம் இருக்கும். தனியார் நிறுவனப் பணியாளர்கள், பாராட்டும் கௌரவமும் அடைவார்கள். வாகனம், போக்குவரத்து, டிராவல்ஸ் இனங்கள் லாபம் கொண்டு வரும்.

**மிதுனம் :** வசீகரமான பேச்சு, சாதுர்யமான நடவடிக்கைகளால் எதிராளிகளை, குண்டுக் கட்டாகத் தூக்கிப் பந்தாடும் லோக்கல் டாம்க்ரூஸ் நீங்கள், இருந்தாலும், புதிய முயற்சிகள் செய்ய இது தகுந்த நேரமன்று. தெய்வபலம் காரணமாக, பொருளாதார நிலைமை டாப்கியரில் போய்க் கொண்டிருந்தாலுமே கூட, அனாவசியமான ஆடம்பரச் செலவுகள் செய்யக் கூடாது. பொன், வெள்ளி, நவரத் தினம், ஆபரணம், அழகு சாதனங்கள் ஆதாயம் காட்டும். மாணவர் களுக்கு முன்னேற்றமான காலம்.





**கடகம் :** உழைப்புக்கு அஞ்சாத வீரச் சிங்கமய்யா நீர்... ரிஸ்க் எடுத்து ஜெயிப்பது உங்களுக்கு பாதாம் கீர். நிலைமை இப்படி ஸ்வீட்டாக இருக்க, தன ஸ்தனாதிபதியான சூரியன் 7ல் அமர்ந்து, உங்கள் ராசியில் உலவும் உச்சம் பெற்ற குருவின் பார்வை இருப்பதால், தெய் வீக ஈடுபாடு அதிகரிக்கும். கூட்டு வியாபாரம் செய்பவர்கள் விழிப் போடு இருக்க வேண்டும். பங்குதாரர்களிடையே கசமுசா உருவாகக் கூடும். பெண்களுக்கு பனிச் வாரம்!

**சிம்மம் :** ஆடுற மாட்டை ஆடிக் கறப்பீங்க. பாடுற மாட்டைப் பாடிக் கறப்பீங்க. மிஞ்சுனா கெஞ்சுவீங்க. கெஞ்சுனா மிஞ்சுவீங்க. மொத்தத்தில் ராஜா கைய வைச்சா மட்டுமில்ல, நீங்க வைச்சாலும் ராங்கா போனதில்லைதான். ராசிநாதனாகிய சூரியனாரும் கூடவே வந்து, "மே ஐ ஹெல்ப் யூ' என்று கேட்டால், மேன்மையான பலன்கள் நடந்துதானே ஆகணும். உத்தியோகத்தில் புதிய பொறுப்புகள் வந்து சேரும். புனித காரியங்களில் பங்கு கொள்ளும் பாக்கியம் உண்டாகும்.





**கன்னி :** கூரை ஏறி கோழி பிடிக்க முடியாதவன், வானம் ஏறி வைகுண்டம் போன கதையா, சின்ன விஷயங்களுக்கே பஸ்கி எடுத்துக்கிட்டிருந்த நீங்க, இந்த வாரம் பல பெரிய காரியங்களை அநாயாசமாக முடிக்கப் போறீங்க. அதுக்கேற்ற பண வசதியும், உற்சாகமான மன நிலையும் இலவச இணைப்பா கிடைக்கும். குடும்பத்தில் கணவன் மனைவி ஒற்றுமை ஆகா! மக்கள் செல்வத்தின் மகிழ்ச்சி ஓகோ! சுப நிகழ்ச்சிகள் ஆகா... ஓகோ!

**துலாம் :** தீபாராதனை ஒற்றிக் கொண்டால் சூடு, தீர்த்தப் பிரசாதம் சாப்பிட்டால் குளிர்ச்சி என்று ஏகத்துக்குப் பலவீனமாக இருக்கும் உடல்நிலைக்காரர் நீங்கள். இந்த வாரம் உங்கள் ஆரோக்கியம் மேன்மைப்படுகிறது. மனை, நிலம், வீடு, வகையில் அனுகூலமான திருப்பங்கள் நேரும். தெளிவான மன நிலையிருக்கும் என்பதால், புனித காரியங்களில் ஈடுபாடு அதிகரிக்கும். வெளிநாடு சம்பந்தப்பட்ட நல்ல செய்திகள் ஊக்கமும் ஆக்கமும் தரும். ஸ்பெகுலேஷன் துறையில் நிதானம் தேவை.



**விருச்சிகம் :** கடியாரம் என்ன காலண்டர் கூட பார்க்காமல் 'மாங்கு மாங்கு' என உழைக்கும் சின்சியர் சிங்காரம் நீங்க. ஆனாலும் உத்தியோகத்தில் வார முதல் பகுதியில் சிறு சிறு பிரச்னைகள் ஏற்பட்டு, உங்களை ரோலர் கோஸ்டரில் ஏற்றி விட்டுவிடும். விளைவு! தலைசுற்றல், டென்ஷன்! ஜென்மராசியில் சுக்ரன் கேதுவுடன் அமர்ந்து, 9ல் உச்சம் பெற்ற குருவின் பார்வையும் பெற்று, உங்களுக்குக் கை கொடுக்க வருவார். இந்த அமைப்பினால், எடுத்த காரியத்தில் வெற்றி, பதவி உயர்வு, மேலதிகாரி பாராட்டு கிடைக்கும்.



**தனுசு :** 'தாட் பூட் தஞ்சாவூர்' என்று எகிறியே காரியத்தை சாதித்துக் கொண்டிருந்த டகுள் பாச்சா வேலையெல்லாம் இனி பலிக்காது சாமி! திட்டமிட்டு செயல்பட்டு, சாமர்த்தியமான உழைப்பினால் காரியத்தைச் சாதித்தால்தான் பிழைக்கவே முடியும். எதிரிகள் ஓடிப் போவார்கள். வீடு விற்கவோ, வாங்கவோ நல்ல சமயம் அமையும். சுய தொழில் அபிவிருத்தி உண்டாகும்.



**எழுத்தாளர் ஆண்டாள் பிரியதர்ஷினியின் கணவர் கவிஞர் பால. இரமணிக்கு (கும்பம்) வெளிநாடு போக வாய்ப்பிருக்காம்.**



**மகரம் :** 'துணவே துணை. அறிவே கணை' என்று நம்பிக்கையோடு செயல்படும் திறமைசாலிதான் நீங்க. ஆனால் எதிலும் பதற்றம், அவசரம் என முந்திரிக் கொட்டையாக இருப்பதால், நேர்முக எதிரிகள் காலை வாரி விட சமயம் பார்த்துக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். எனவே கவனம்! அலுவலகப் பணியாளர்களுக்கு தாமதமாகிக் கொண்டிருந்த பதவி உயர்வு கிடைக்கும்.



**கும்பம் :** விடுங்க லொட்டு லொசுக்கு கவலையை! எடுங்க தங்கத் தவலையை! பணம் கொட்டினா, அள்ளுறதுக்கு இடம் வேணாமா? புதிய உத்தியோக முயற்சிகள் வெற்றி தரும். வெளிநாடு போகும் முயற்சியில் இருப்பவர்களுக்கு, அனுகூலமான செய்தி வந்து சேரும். சட்டம், இராணுவம், காவல், துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு சிறப்பான பலன்கள் நிச்சயம்.





**மீனம் :** கடன் தொல்லையால் வெளியே தலை காட்ட முடியாமல் தவித்துக் கொண்டிருந்த காலமெல்லாம் இனி ஓடிப் போயிடும். பொருளாதார நிலையில் நல்ல மேன்மை இருக்குது. சுய தொழில், வியாபாரம் இளைஞர்களை புதிய பாதையில் இட்டுச் செல்லும். ஆரோக்கியம் பலப்படும். சுக சௌகரியம், குடும்ப நலம், மக்கள் மகிழ்ச்சி, தனலாபம் என 'கலக்கறே சந்துரு' வாகப் போகிறீர்கள். ஜமாயுங்க.

## அக்னி சர்மா பக்கம்    ஜனவரி 15 முதல் 21 வரை

# குறையொன்றுமில்லை

பகவான் தூங்குகிற மாதிரியான பாவனை தானே தவிர, அவன் நிஜமாகத் தூங்குவதில்லை. ஒரே யோசனை அவன் மனத்திலே. 'இவன் அப்படி இருக்கானே, அவன் அப்படிப் பண்ணுகிறானே, இவனை என்ன பண்ணுவது?' என்று ஓயாமல் யோசனை பண்ணிக் கொண்டே இருக்கிறான். அவனுக்கு ஏகப்பட்ட கவலை – நம்மைத் திருத்திப் பணிகொள்ள வேண்டுமே என்ற கவலை!

கீதையிலே பரமாத்மா அழகாகப் பேசினான்.

"எனக்கு ஞானிகள் என்றால் ரொம்பப் பிடிக்கும். ஞானிகளுக்கும் என்னை ரொம்பப் பிடிக்கும்."

ஒருத்தர் கேட்டார்...

"பகவானிடத்திலே நாம் பக்தி பண்ணுவது நல்லதா? நமக்கு அவன் அனுக்கிரஹம் பண்ணுவது இன்னும் சிறப்பா...?"

– இந்தக் கேள்வியே தப்பு! கேள்வியை எப்படிக் கேட்க வேண்டும்...?

"நாம் பகவானிடத்தில் வைத்திருக்கிற ப்ரீதி அதிகமா? அவன் நம்மிடத்தில் வைத்திருக்கிற ப்ரீதி அதிகமா...?

'தேனடைந்த சோலை திருநாடு கைவிட்டு...' என்று கம்பராமாயணத்திலே அழகாகக் காட்டுகிறார் கம்பர்.

சித்ரகூடத்திலே, பரதன் வாக்கினால், 'தசரதன் மாண்டுவிட்டான்' என்கிற வார்த்தையைக் கேட்டான் ராமன். அப்பா போய்விட்டார் என்று கேட்டதும் துடிக்கிறான். அப்போது அவன் சொல்கிற வார்த்தை:

**தேன் அடைந்த சோலைத்**
**திருநாடு கைவிட்டுக்**
**கான் அடைந்தேன் என்னத்**
**தரியாது, காவல! நீ**
**வான் அடைந்தாய்; இன்னம்**
**இருந்தேன்நான், வாழ்வுகந்தே!**
**ஊன் அடைந்த தெவ்வர் உயிர்**
**அடைந்த ஒள்வேலோய்'**

என்ன அழகு! என்ன அழகு!

"அப்பா! நீ என்னிடத்திலே வைத்திருக்கும்படியான ப்ரீதி எங்கே, நான் உன்னிடத்தில் வைத்த ப்ரீதி எங்கே! நாட்டை விட்டுக் காட்டுக்குப் போயிருக்கிறேன். பதினான்கு ஆண்டுகள் கழித்து, திரும்பி நாட்டுக்கு வரக் கூடும்; வருவேன். அப்படிக் காட்டை அடைந்தேன் என்று கேட்டவுடனேயே நீ பிராணனை விட்டு விட்டாயே? ஆனால், நீ உலகத்தை விட்டுப் போய் விட்டாய் என்பதைக் கேட்ட பின்னரும் நான் உயிரோடு இருக்கிறேனே! நீ என்னிடத்தில் வைத்த ப்ரீதி எங்கே? நான் உன்னிடத்தில் வைத்த ப்ரீதி எங்கே...?"

அப்படிப்பட்டதுதான் பகவானின் ப்ரீதியும். ஆகையினாலே, எம்பெருமான் நம்மிடத்திலே எவ்வளவு ப்ரீதி வைத்திருக்கிறான் என்று சொல்ல முடியுமா? அது அளவில்லாதது. நாம் வைத்திருக்கிற ப்ரீதி என்பது அப்படியில்லை... அவ்வப்போது அதது நடந்தால் ப்ரீதி நமக்கு; அப்படி நடக்கவில்லையானால் அவனோடு சம்பந்தமே இல்லை என்று மறுத்து விடுகிறோம். 'அவன் என்ன பண்ணிவிட்டான் நமக்கு?' என்று கேள்வி எழுப்புகிறோம். அவனுக்குக் கண்ணே இல்லை என்று வைய ஆரம்பிக்கிறோம்!

அவனுக்கோ, இதெல்லாம் லீலை, எல்லாவற்றையும் பார்த்து அவன் ரசிக்கிறான்.!

அவனிடம் போய், 'நூறு தேங்காய் உடைத்தேனே. ஞாபகம் இருக்கிறதா? முப்பத்திரண்டு பிரதக்ஷிணம் பண்ணினேனே, ஞாபகம் இருக்கிறதா?' என்றால், அவன்தான் சர்வக்ஞன் ஆயிற்றே. அவனுக்கு மறந்து போய்விடுமா?

பிரஹலாதனைப் பார்த்து பகவான் கேட்டான் – 'உனக்கு என்ன வரம் வேண்டும்?' 'எது வேண்டுமோ கேள், தருகிறேன்' என்றான்.

அந்தக் குழந்தை நினைக்கிறதாம் – 'இது என்ன பண்டமாற்று வியாபாரமா...?'

நாம் பகவானிடத்திலே பக்தி பண்ணியதற்காக அவன் நமக்கு ஏதேனும் கொடுக்க

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

வேண்டுமானால், அது ஒரு வியாபாரமாகத் தானே ஆகிவிடும்! அவனிடத்திலே அடி பணிந்து நிற்பதுதானே நமது ஸ்வரூப யோக்யதை? அவனோ கொடுக்கும் வள்ளல் – வாரிக் கொடுக்கப் போகிறான். அவனிடம் போய் இந்த மாதிரி வியாபாரம் பண்ணலாமா...?

ஆகையினாலே ரொம்ப ஜாக்கிரதையாக இருக்க வேண்டும் என்பதை சாஸ்திரமானது சொல்கிறது. இந்த புத்தியும், எச்சரிக்கையும் ஆசார்யர் அனுக்கிரஹத்தினாலேதான் வாய்க்கும் என்றும் சாஸ்திரம் சொல்கிறது.

ஆசார்யர் அனுக்கிரஹத்தினாலே இதையெல்லாம் நன்கு அறிந்து, வழுவாத, சலிக்காத, த்ரிடமான பற்று அவனிடத்திலே ஏற்பட வேண்டும். – அவனை அடைவதற்கு அது மட்டுமே உபாயம்.

பக்தி, பிரபத்தி என்ற சாதனங்களுள், பக்தி நம்மால் சாதாரணமாகப் பண்ணிவிட முடியாது. ஒரே ஒரு உதாரணம், இங்கே விக்ஞாபனம் பண்ணுகிறேன்:

**சா**ந்தோக்ய உபநிஷத்தில் 'உபகோசல வித்யா' என்று ஒரு வித்யை உண்டு. அது எவ்வாறு ஏற்பட்டது?...

உபகோசலன் என்று ஒரு வித்யார்த்தி. அவன் சத்யகாமன் என்கிற ஆசார்யனை அண்டி, பிரும்ம வித்யையை எனக்குப் புகட்ட வேண்டும் என்று கேட்டான். அவர் ரொம்ப நாட்களாக யாத்திரை போக வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தார். இந்தப் பையன் கிடைத்தவுடனே, "அப்பா! நான் நித்யம் அக்னிஹோத்ரம் பண்ணிக் கொண்டிருக்கிறேனல்லவா? இந்த அக்னியை நீ அணையாமல் பார்த்துக் கொண்டிரு. நான் யாத்திரையெல்லாம் முடித்துக் கொண்டு உன்னிடம் வருகிறேன்" என்றார்.

"சரி சுவாமி!" என்றான் வந்தவன். வித்யைக்காக அவன் வந்தான். இவர் 'அக்னியைப் பார்த்துக் கொள்' என்று போய் விட்டார்!

'சரி' என்றவன், அக்னியை அணையாமல் ரொம்ப ஜாக்கிரதையாக ரக்ஷித்துக் கொண்டு வந்தான். இரண்டு மாதங்களாகி விட்டன. இந்த அக்னிஹோத்திரமானது, காட்டிலே நடக்கிற சமாசாரம்; ஒருத்தரும் கிடையாது, உதவி பண்ண... இரண்டு மாதத்தில் வருகிறேன் என்று சொல்லிப் போனவர், மூன்று மாதமாயிற்று, நான்கு மாதமாயிற்று, வரவேயில்லை!

"ஸ்கூட்டரில் போகும்போது மட்டும் மனைவியிடம் ஜோக் சொல்ல மாட்டேன்..."

"ஏன்?"

"அவள் விழுந்து விழுந்து சிரிக்கிற குணம்!"

– எஸ். மோகன்

இவன் பார்த்தான்... அக்னியை ஏகமாக ஸ்தோத்திரம் பண்ணினான். ஒரு வருடம் ஆயிற்று, வரவேயில்லை! இன்னொரு வித்யார்த்தியாய் இருந்தால், ஒரு குடம் ஜலத்தைக் கொண்டு வந்து சேர்த்துவிட்டு, நன்றாக அணைத்து விட்டுப் போய்விடுவான். ஆனால், இவன், பத்து வருஷம் அக்னிஹோத்ரம் பண்ணினான். அப்போதும் அவர் வரவில்லை. பன்னிரண்டு வருஷமாயிற்று.. அப்போது அந்த அக்னி பகவானே பிரத்யக்ஷமாகி, அவனுக்கு 'வைச்வானர வித்யை' என்கிற பிரும்ம வித்யையைப் பூரணமாகத் தெரியும்படி பண்ணினார். அந்த பிரும்ம வித்யைக்கு மூலமான வைச்வானர வித்யை முழுக்க, அவனுக்குத் தென்படும்படியாக அனுக்கிரஹம் பண்ணிவிட்டு, அந்தர்தானமாகி விட்டான் அக்னிபகவான்.

அக்னி உபதேசம் பண்ணிவிட்டுப் போன மறுநாள் ஆசார்யர் வந்தார். "பிரும்ம வித்தாக இருக்கிறாயே நீ! உன் முகத்திலே பிரும்ம தேஜஸ் சொட்டுகிறதே! என்னை ஆசார்யனாக வரித்துவிட்டு, நான் வருவதற்குள் இன்னொருத்தரிடம் பிரும்ம வித்யை கற்றுக் கொண்டாயா...! எனக்கு சிஷ்யனாக இருக்க உனக்குத் தகுதி இல்லை; வெளியே போ!" என்றார்.

அவன் சொல்கிறான் – "சுவாமி! எனக்கு ஒன்றும் தெரியாது. இந்த அக்னியை ரக்ஷித்துக் கொண்டு வருகிறேன். இப்படித் தவறாகத் தாங்கள் தோஷம் காணலாமா...! இன்றைக்கும் தங்கள் வருகையைத்தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்..." என்றான்.

இதைக் கேட்டதும் அவருக்குக் கோபம் வந்துவிட்டது. "நீயாக வெளியே போகிறாயா? இல்லை, நான் கழுத்தைப் பிடித்துத் தள்ளட்டுமா?" என்று தள்ளப் போய்விட்டார் சிஷ்யனை.

அந்த சமயத்தில் அக்னி பிரத்யக்ஷமானான்.

நீர் ஏற்காத சிஷ்யனை நான் ஏற்றேன்.



இவ்வளவு பரீட்சையா? நானே அவனுக்கு பிரும்ம வித்யையைக் கொடுத்து விட்டேன்' என்றான் அக்னி.

நடுங்கிப் போய்விட்டார் அந்த ஆசார் யர். 'நானும்தான் இத்தனை நாளாக அக்னி உபாஸனை பண்ணுகிறேன். இத்தனை நாளில் ஒரு நாளாவது அக்னியைப் பார்த்திருக்கிறேனா? இன்றைய தினம் அது முடிந்ததே! இந்த சிஷ்யன் எவ்வளவு உயர்ந் தவன்' என்று கொண்டாடினார்.

அன்றைய தினம், அக்னி சாட்சியாக, அந்த பிரும்ம வித்யைக்கு 'உபகோசல வித்யை' என்று அந்த உத்தம சிஷ்யனின் பெயரே வைக்கப்பட்டது. 'உபகோசல பிரும்ம வித்யா' என்று அது வழங்கலாயிற்று.

அரை மணியில் நாம் பண்ணி முடிக்கக் கூடிய சந்தியாவந்தனமே பண்ணு வதற்குச் சிரமப்படுகிறது. பன்னிரண்டு வருஷ காலம், வேறொரு சிந்தனை பண்ணா மல், ஒரே இடத்திலே ஏகாந்தமாக இருந்து கொண்டு அக்னியைப் ரக்ஷிக்க முடியுமா? – கொஞ்சம் சிந்தனை பண்ண வேண்டும்.

இதெல்லாம் நம்மால் அறவே முடியாது என்பதனாலேதான் இந்தக் கலியுகத்திலே ஒரு வித்யையையும் அனுஷ்டிப்பதில்லை – அனுஷ்டிக்க வேண்டும் என்று சாஸ்திரம் எதிர்பார்ப்பதில்லை. ஆகவே, எதற்காக நாம் அந்த வித்யையினிடத்திலே போய் அவஸ்தை படவேண்டும்?

அந்த பிரும்ம வித்யா ஸ்தானத்திலே நின்று நமக்குப் பலனைக் கொடுக்கிறவன் எம்பெருமான். அவனைச் சரணடைந்தால் போதும்.

ஜான்ஹவி – கங்கை.... நன்றாக கரை தொட்டு ஓடிக் கொண்டிருக்கிறது. ஒருத்தன் ரொம்ப தாகத்தோடு கங்கைக் கரையிலே நின்று கொண்டிருந்தான். அந்த கங்கையி லிருந்து இரண்டு கை தீர்த்தம் எடுத்துப் பருகினால், தாகம் தீரும். அவன் என்ன பண்ணினானாம், மகா பாவி! ஓடுகிற கங்கையின் கரையிலே, தாக சாந்திக்காக கிணறு வெட்ட ஆரம்பித்தானாம்!

'என் திருவடியையே பற்று; எல்லா பாபங் களிலிருந்தும் உன்னை விடுவித்து மோக்ஷம் கொடுக்கிறேன்' என்கிற வார்த்தை கங்கா பிரவாகம் மாதிரி ஓடுகிறபோது, வீணான காரியத்தை நாம் பண்ணுவோமேயானால், அது கங்கைக் கரையிலே கிணறு வெட்டு பவன் கதைதான்.

ஆகையினாலே, எம்பெருமான் வாக்கிலே நமக்குப் பூரண விச்வாஸம் இருந்தால் போதும். அதற்கு வழிகாட்ட குரு உபதேசம் இருந்தால் போதும்.

கபிஸ்தலம் சுவாமிகள் என்பவர் மகா வித்வான். அவர் காலக்ஷேபம் சொல்லிக் கொண்டிருந்தபோது, ஒரு வௌவால் துடிதுடித்துக் கொண்டு, பெருமூச்சு விட்டபடி, அவர் திருவடியிலே வந்து விழுந் தது. அது எங்கிருந்து வந்ததோ, தெரிய வில்லை. அவர் திருவடியிலே விழுந்ததும், அவர் பார்த்தார்... உடனே பிராணாயாமம் பண்ணினார்; சங்கல்பம் பண்ணிக் கொண்டு, அந்த ஆத்மா நற்கதி அடைய வேண்டும் என்று சரணாகதி பண்ணி வைத்துவிட்டார் அவர்!

இவர் சரணாகதி பண்ணி வைத்ததும், அந்த வௌவால் பறந்து போய்விட்டது. அதன் பிறகு அந்த வௌவாலுக்கு அடுத்த ஜன்மா என்பது உண்டோ? மோக்ஷம்தான் அதற்கு! ஓர் உத்தம அதிகாரியினுடைய திருவடியை ஆச்ரயித்த அந்த வௌ வாலுக்குக் கிடைத்த பாக்யம் நமக்குக் கிடைக்குமோ?

மனிதனாகப் பிறந்துவிட்ட காரணத்தி னாலேயே நமக்குப் பெருமை ஏற்பட்டு விடுகிறதா என்ன! அந்த வௌவால் என்ன பாக்கியம் பண்ணியதோ, அதற்குக் கிடைத்த அனுக்கிரஹம், அதற்கு உயர்ந்த கதியைப் பெற்றுத் தந்தது. ஆசார்ய கடாக்ஷத்தினாலே அது கிடைத்தது.

பகவானைப் பற்றித் தெரிந்து கொண்டு, நாம் யாரென்று தெரிந்து கொண்டு, பக்தி சரணாகதி என்பதுள், சரணாகதியே மேலா னது எனத் தெரிந்து கொண்டு... நாலும் தெரிந்தவர்களாகிறோம்... ஆனால் ஐந்தாவ தாக ஒரு விஷயம் இருக்கிறது – அவனை அடைய விடாமல் நம்மைத் தடுக்கிற விஷ யம். அதுதான் இந்தப் பிரக்ருதி சம்பந்தம் – உலக பந்தம்!

(வளரும்)



• அஷ்வின்

# ‘பாறைவன’ லடாக்!

ஐம்பதே நிமிடங்கள் மட்டுமே ஓடக் கூடிய ஒரு சினிமா. இது ஒரு பாதிப்பை ஏற்படுத்த முடியுமா? என்ற சந்தேகம் படம் துவங்கு முன் எழுந்தது.

ஆனால் இயக்குநர் அஷ்வின் குமார், 'ரோடு டு லடாக்'கில் அதைச் சாதித்துக் காட்டியிருக்கிறார்! சூழ்நிலை காரணமாக வேறுபட்ட உணர்வுகள் கொண்ட இர்ஃபானும், கோயல் பூரியும் எதிர்பாராமல் சந்தித்த பின் உருவாகும் நிகழ்வுகளும், பின்னப் படும் சந்தேக வலையும் நம்மை நாற்காலி நுனிக்கு நகர்த்துகின்றன. மிகையில்லாத நடிப்பு. கோயல் பூரியின் வாகனத்தில் பின் சக்கர டயரைக் கழற்ற இர்ஃபான் முற்பட்ட நிலையில், ஆபத்தான பாதையில் வண்டியை அசுர வேகத்தில் கோயல் ஓட்ட, பின் சக்கரம் கடகடக்க, நமக்குத் திக்திக் அதிகமாகிறது! இரண்டே சீன்களில் வந்தாலும் இராணுவ அதிகாரி ஜான் சாக்கோவாக, மிலன் மௌனத்தில் படு மிடுக்கு. குறைந்தபட்ச பின்னணியிசையில் கஸ்மித் சென்



• கோயில்பூர்

அசத்துகிறார் என்றால், பயிர்பச்சை ஏதுமில்லாப் 'பாறைவனமான' லடாக்கைக் கண் முன்னே கொண்டு வருவதில், காமெரா நிபுணர் மார்க்கஸ் ஃப்ளூரெஷ் முழு வெற்றி பெற்றிருக்கிறார்.

சர்வதேசத் திரைப்பட விழாவில் போட்டியிட என்றே தயாரிக்கப் பட்டிருப்பதால், சற்றே நீண்ட, மிக உஷ்ணமான காட்சிகள் இருக்கத்தான் செய்கின்றன!

"இதில் நடிகர்களும் பல டெக்னீஷியன்களும் இலவசமாகவே வேலை செய்திருக்கிறார்கள். பதினாறு நாட்கள் லடாக்கிலேயே படப்பிடிப்பு. இரண்டு மாதம் எடிட்டிங். மூன்று வாரங்கள் பிராசஸிங் – சென்னையில். எனக்குப் போராட்டங்களும், சிக்கல்களும் மிகவும் பிடிக்கும். உணர்வுபூர்வமான அந்தச் சவாலுக்காகவே இந்தப் படத்தை எடுத்தேன்" என்கிறார் இயக்குனர் அஷ்வின் குமார்.

• இர்ஃபான்

— சித்தார்த்

## நாம சங்கீர்த்தனம்:

# கலெக்டிவ் எனர்ஜி!



சமீப காலமாக, சபாக்களில் நாம சங்கீர்த்தன நிகழ்ச்சிகளுக்கு ஆயிரக் கணக்கில் ரசிகர்கள் வருகிறார்கள். ரசிகர்கள் என்பதை விட, பொதுமக்கள் என்றுதான் சொல்ல வேண்டும். இப்படிக் கூட்டம் வருவதற்கு என்ன காரணம், என்று கிருஷ்ணகான சபா செயலர் யக்ஞ ராமனிடம் கேட்டோம்:

"ஏழு வருடங்கள் சுவாமி ஹரிதாஸ்கிரி தொடர்ந்து எங்கள் சபையில் நாம சங்கீர்த்தனம் நடத்தி வந்தார். ஜெயகிருஷ்ண தீக்ஷிதர், துக்காராம் கணபதி, ஜெயராமபாகவதர், உடையாளூர் கல்யாணராம பாகவதர் ஆகியோர் இந்நிகழ்ச்சிகளை நடத்தி வருகின்றனர்.



• துக்காராம்




"மக்கள் எமோஷனலாகத் தங்களை ஈடுபடுத்திக் கொண்டு பாகவதர்களுடன் சேர்ந்து பாடுகிறார்கள். வெற்றிக்கு இது ஒரு காரணம். இரண்டாவது, சங்கீதம் தெரிந்திருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. அதிலும் தாளம் போட வைக்கும் மெட்டுக்களில், எளிதான பாடல்களாக இருக்கும்போது, ஒவ்வொருவரையும் தானாகப் பங்கு கொள்ள வைக்கிறது."

"நிகழ்ச்சியின் வெற்றிக்குக் காரணம் எந்தத் தூண்டுதலும் இல்லாமலே வரும் ஆடியன்ஸ் பார்ட்டிசிபேஷன் தான். பாடச் சொல்லும் போதும், நாமாவளி சொல்லும்போதும் ஒரு பயிற்சி போல ஆகி விடுகிறது அவர்களுக்கு. புத்தகத்தையும் கையோடு கொண்டு வந்து, கூடவே முழுதும் பாடுகிற அளவுக்கு அவர்களுக்கு ஈடுபாடு வந்திருக்கிறது. ராதா கல்யாண நிகழ்ச்சியின் போது, அவர்கள் எதை மனத்தில் வேண்டிக் கொண்டு வருகிறார்களோ, அது நிறைவேறி விடுவதாக மகிழ்ச்சியுடன் தெரிவிக்கிறார்கள். இதுவும் ஒரு காரணம். இப்போது லண்டன், சிங்கப்பூர், மலேஷியா, ஆஸ்திரேலியா என்று உலகில் தமிழர்கள் வாழும் இடங்களில் எல்லாம் பெருங்கூட்டமாக நாம சங்கீர்த்தனம் நடைபெறுகிறது. 'இந்த வருடம் இத்தனை நிகழ்ச்சிகள் நடத்தியிருக்கிறோம்' என்று அவர்கள் அனுப்பி வைக்கும் பட்டியலைப் பார்த்தால் பிரமித்துப் போய் விடுவீர்கள்!" என்கிறார் நாரத கான சபா செயலர் கிருஷ்ணசாமி.

ஆர்ட் அஃப் லிவிங் இயக்கத்தைச் சேர்ந்த பலர், "நாம சங்கீர்த்தனத்தில் ஒருவித 'கலெக்டிவ் எனர்ஜி' உருவாகிறது; எல்லோரும் பங்கு கொண்டு இசைக்கும்போது, அந்த எனர்ஜி ஒரு புத்துணர்ச்சி தருகிறது" என்கிறார்கள்.

— எஸ்.வி.என்.

படங்கள், நன்றி: கிருஷ்ண கான சபா

**அமரர் கல்கி எழுதிய நூல்!**

கல்கி பத்திரிகை வாரம் தோறும் உங்கள் வீடு தேடி வர சந்தா செலுத்துங்கள்; பரிசும் பெற்று மகிழுங்கள்.

**ஓராண்டுச் சந்தா ரூ.330/-**

செலுத்துவோருக்கு பின்வரும் மூன்று புத்தகங்களில் ஏதேனும் ஒன்று பரிசு. நீங்களே தேர்வு செய்யலாம். பரிசுப் புத்தகத்தின் மதிப்பு ரூ.65 முதல் ரூ.75/- வரை.

1. **தியாகபூமி** (நாவல்)
2. **மனிதன் எப்படி உயர்கிறான்?** (கல்கி எழுதிய சினிமா, நாடக விமர்சனங்களின் தொகுப்பு)
3. **எழுத்துலகில் அமரதாரா** (அமரர் கல்கி பற்றி பல்வேறு அறிஞர்கள் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பு)

**இரு ஆண்டுகளுக்கு சந்தா ரூ.660/-**

செலுத்துவோருக்கு **'கல்கி களஞ்சியம்'** பரிசாக வழங்கப்படும். (அமரர் கல்கி எழுதிய சிறுகதைகள், குறுநாவல்கள், விமர்சனங்கள், கட்டுரைகள் முதலியவற்றிலிருந்து மிகச் சிறந்தனவற்றின் தொகுப்பு. கல்கி கிருஷ்ணமூர்த்தி நூற்றாண்டு வெளியீடு. பரிசுப் புத்தகத்தின் மதிப்பு ரூ.150/-

**மூன்றாண்டுச் சந்தா ரூ.990/-**

செலுத்துவோருக்கு **அமரர் கல்கி** எழுதிய **சிவகாமியின் சபதம்** அல்லது **அலை ஓசை** நாவல் பரிசு. புத்தகத்தின் மதிப்பு ரூ.200/- முதல் ரூ.250/-வரை.

**இந்தச் சிறப்புச் சலுகை 07.02.03 தேதி வரை மட்டுமே.** எனவே முந்துங்கள்! உடனே சந்தா அனுப்பி பரிசு பெறுங்கள்! உங்கள் விலாசத்தைத் தெளிவாகக் குறிப்பிடுங்கள்.

ஏற்கெனவே சந்தாதாரராக உள்ளவரும் தங்கள் சந்தா எண்ணைத் தெரிவித்து தொகை அனுப்பலாம். உங்கள் சந்தா, முடிவு தேதியிலிருந்து புதுப்பிக்கப்படும். **கல்கி** என்ற பெயருக்கு உள்ளூர் செக்*, மணி ஆர்டர் அல்லது டிமாண்ட் டிராஃப்ட் அனுப்ப வேண்டிய முகவரி :

சர்க்குலேஷன் மானேஜர்,
கல்கி,
47-என்.பி., ஜவஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல்,
சென்னை - 97.

*(வெளியூர் காசோலைகள் (Cheques) ஏற்க இயலாது.)




## சந்தா கட்டுங்க! பரிசு தட்டுங்க!




கல்கி சந்தாதாருக்கு புத்தாண்டு - பொங்கல் பரிசு!

# யாரிடம் சொல்வேன

மூன்று நாட்களாக வீடே அல்லோலகல்லோலப்பட்டது.

தர்மபுரியிலிருந்து சுந்தரின் சித்தப்பா குடும்பத்தினர் வந்திருந்தனர். சுந்தரின் திருமணம் முடிந்த அடுத்த நிமிடமே... 'அவசர வேலையிருக்கு...' என உடனே கிளம்பிப் போய்விட்ட சித்தப்பா, இப்போது சித்தியையும், குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு வந்திருந்தார்.

'நாளைக்கே ஊருக்குக் கிளம்பணும்.' என்று வீட்டுக்குள் நுழைந்ததுமே சொன்ன சித்தப்பாவை, சுந்தரின் விடாப்பிடியான பிடிவாதம் தான் மூன்று நாட்கள் இருக்கும்படி செய்து விட்டது.

சித்தப்பா சொந்தமாக டிபார்ட்மெண்டல் ஸ்டோர் வைத்து நடத்தி வருகிறார். யாரிடமும் பணிவாகவும், அன்போடும் அவர் பேசுவதைப் பார்க்க வேடிக்கையாக இருக்கும். சித்தியிடமும், குழந்தைகளிடமும் கூட சித்தப்பா பேசுவதைப் பார்க்கையில், அவரின் இயல்பே அப்படித்தான் என்று உணர முடியும்.

"சொல்லுங்க... மேடம்... சரிங்க... ம்ம்... அப்படியே செஞ்சிருவோம்... மேடம் சொன்னா சரிதான்!" என்பார் சித்தியைப் பார்த்து.

சித்திக்கு முகமெல்லாம் சிரிப்பாயிருக்கும்.

குழந்தைகளிடம் அவர் கொஞ்சிப் பேசுவதை இன்றைக்கெல்லாம் பார்த்துக் கொண்டேயிருக்கலாம்.

"வாங்க... பெரியவரே! கோவப்படாதிங்க. உங்க பிரச்னை என்னான்னு சொல்லுங்க... தீர்த்து வெச்சுடுவோம். அதுக்காகத்தானே நாங்க இருக்கோம்" என்பார் பெரிய மகளிடம்.

எவ்வளவு கோபமாய் இருக்கிற பிள்ளை



2

# தோழி!



கஞம் கூட, சித்தப்பாவின் முகத்தையும், பேச்சையும் கேட்டால் ஒரு கணம் மாறித் தான் போவார்கள்.

சித்தி, சித்தப்பாவுக்குமான புரிதலும், நெருக்கமும் அஞ்சலியை வியப்பி லாழ்த்தும். யார் ஒருவருக்குக் கோபம் வந்தாலும் சட்டென இறங்கி வந்து சமாதானப்படுத்தும் மற்றவரின் குணம், அவர்களுக்குள் உள்ள அந்நியோன்யத்தை மேலும் கூட்டு வதாய் இருக்கும்.

விட்டுக் கொடுத்தலில் இரு வருக்குள்ளேயும் எப்போதும் போட்டியிருந்தது. இப்படிச் சின் னச் சின்ன சண்டைகள் கூட போட்டுக் கொள்ளாத கணவன், மனைவி இருப்பார்களா? கூடவே இருந்து அவர்களைப் பார்க்கப் பார்க்க அஞ்சலியின் வியப்பு கூடிக் கொண்டே போனது.

மூன்று நாளின் மொத்தக் கல கலப்பையும் மூட்டை கட்டிக் கொண்டு ஊருக்குக் கிளம்பி விட் டார்கள். 'இன்னும் இரண்டொரு நாள் இங்கேயே இருங்களேன்' என்கிற அஞ்சலியின் விருப் பத்தை நிறைவேற்ற முடியாமல் போய்விட்டது.

எல்லோரையும் ஆட் டோவில் ஏற்றிக் கொண்டு, பஸ் ஸ்டாண்டில் விட்டுவர சுந்தரும் போய்விட்டான்.

வீடே 'வெறிச்'சென்றிருந்தது அஞ் சலிக்கு.

கல்யாணமான இந்த மூன்று மாதத்தில், சுந்தரிடம் நெருக்கமாய் அமர்ந்து, முகம் பார்த்துப் பேச முடியாமல், கடந்து போன மூன்று நாட்களும் அமைந்துவிட்டன. அவளுக் குள் இலேசான வருத்தமிருந்தது.

'ச்சே... இதுக்கெல்லாம் போயா வருத்தப் படுவாங்க... இன்னொரு நாள் பேசிக்கிட்டாப் போச்சு. சின்னக் குழந்தை மாதிரி கண்டதுக் கெல்லாம் வருத்தப்படக் கூடாது. சரி... நமக்கு மட்டும்தான் இப்படித் தோணுதா... இல்லை... சுந்தருக்கும் கூடவா...!'

யோசிப்புகளுக்குள் சிக்கியிருந்தவளை... "ஏய்... என்னாச்சு?" சுந்தரின் குரல் கலைத்தது.

"ம்ம்... ஒன்னுமில்லையே..." என்றாள்.

## அ. வெண்ணிலா

அவள் கன்னத்தைக் கைகளால் தாங்கிக் கொண்டான்.

"எந்தங்கத்தோட... ஒழுங்காப் பேசி முழுசா மூணு நாளாச்சு... இன்னிக்கு விடிய விடியப் பேச்சு தான்!" என்று அவன் சொல்லி முடிக்கு முன்னே...

"அய்ய..." எனத் தாவி, அவனின் தோளைக் கட்டிக் கொண்டாள் அஞ்சலி.

"என்ன.. திடீர்னு குஷியாயிட்டே...?"

"இருக்காதா பின்ன, நா என்ன யோசிச்சுக்கிட்டு இருந்தேனோ... அதையே நீயும் சொல்லிட்டே!"

இரண்டு மனசுகளும் ஒரே நேர்க்கோட்டில் இணைந்து யோசித்ததில் இருவருக்குள்ளும் பூரிப்பு, மன குதூகலம். நள்ளிரவு வரை, நில வோடு சேர்ந்து அவர்களும் பேசிப்பேசியே குளிர்ந்து போனார்கள்.

அந்தக் குளிர் நினைவுகள் மனசுக்குள் இறங்க... உள்ளுக்குள் ஏதோ சுடுவது போலி ருந்தது.

'அப்படி பிரியமாய் இருந்தவர்களா... இப் போது இப்படியாகிப் போனோம்!'

கண்களோரம் ஈரம் துளித்தது.

டீ மட்டும் போதுமென சாப்பிடாமலேயே கிளம்பிப் போய்விட்டான் சுந்தர். இவளும் அவனை வற்புறுத்தவில்லை. 'போனால் போகட்டுமே..' என்றிருந்தாள். எதுவும் சமைக்க வில்லை. காலையில் குடித்த டீயே போது மென்றிருந்தது.

பாரதி இன்னமும் தூங்கிக் கொண்டிருந் தான். வீடே அமைதியாயிருந்தது. காலை நேரத்தில் இந்த அமைதி வாய்க்காத ஒன்று.

அஞ்சலி எழுந்திருக்கும் பொழுதே... பாரதி யும் எழுந்து விடுவான். தவழ்ந்து கொண்டே அவள் எங்கெல்லாம் போகிறாளோ... பின் னாடியே போவான். திடீரென காலைக் கட்டிக் கொண்டு, இப்படி அப்படி அவளை நகர விட மாட்டான்.

தண்ணீர் பிடிப்பது, காலை டிபன், மதிய சாப்பாடு, குழந்தைக்கு வேறு தனியாக பருப்பு சாதம்... என கடிகார முள் இருவரையும் சுழற்றி விட்டுக் கொண்டிருக்கும்.

எதையாவது பார்த்து விட்டு, தாளம் போட்டுச் சிரிப்பான். கீழே கிடப்பதை எடுத்து வாயில் வைப்பான். தண்ணீரைக் கண்டுவிட் டால் ஒரே குஷிதான். அள்ளி அள்ளி மேலெல் லாம் நனைத்துக் கொள்வான்.

எதையும் நின்று பார்க்க முடியாத நிலை யில், வேலைக்கு நடுவிலேயே 'பாரதி.....பாரதி....' என, கூப்பிட்டுக் கொண்டேயிருப்பாள்.

எல்லாவற்றையும் தயார் செய்து, குழந்தை யைப் பக்கத்து வீட்டில் 'கவனமாப் பாத்துக் குங்க..' என பலமுறை கெஞ்சலாய்ச் சொல்லி விட்டுக் கிளம்புவதற்குள் 'அப்பாடா' என்றி ருக்கும்.

எல்லோருக்கும் பொழுது ஒரே மாதிரி யாகத்தான் விடிகிறது. அவரவர் அவசரங்கள் தான் அதன் மேல் சாயமேற்றி விடுகின்றன.

வீட்டுக்கு எதிரே பெரிய மைதானமிருந்தது. ஒன்றிரண்டு சிறுவர்கள் விளையாடிக் கொண்டிருந்தார்கள். காலை வெயிலே 'சுள்'ளெனச் சுடுவது போலிருந்தது. தழை தழைத்து நின்றிருந்த வேப்பமரமொன்றை, நுனிக் கிளையை மட்டும் விட்டுவிட்டு, யாரோ நேற்றுத்தான், வெட்டியிருக்கிறார்கள். கிளை யின் மேல் காக்கை ஒன்று உட்கார்ந்திருந்தது. மொட்டைக் கிளையில் பறவைகள் உட்கார்ந்தி ருப்பதைப் பார்ப்பது வேதனையானது. கிளை களில்லா வெறுமையை காக்கை உணர்ந்ததோ இல்லையோ... மைதானம் உள்வாங்கிக் கொண்டிருந்தது.

பாரதி சிணுங்குவது கேட்டது. ஓடி வந்து குழந்தையைத் தூக்கியவள் மெல்ல அதிர்ந்தாள். உடம்பு நெருப்பாய்ச் சுட்டது.

"என்னயிது... நேத்து முழுக்க நல்லாயிருந்த பிள்ளைக்கு இன்னிக்கு திடீர்னு மறுபடியும் இப்படி....!"

பலகை மீதிருந்த மருந்து, மாத்திரையை எடுத்து வந்தாள்.

"டேய்.... படவா. அம்மாவுக்கு ரொம்ப சிரமம் கொடுக்கக் கூடாது. அம்மா உனக்கு மருந்து, மாத்திரை தருவேனாம். பட்டு மாதிரி குடிச்சிட்டு, தூங்கியெழுந்து ஜம்முனு அம்மா கூட விளையாடணும்... சரியா..!"

## ஒன்பது வருட கோபம்!

**" 'அச்சமில்லை அச்சமில்லை!' படத்தில், தூளி மட்டும் ஆடுவது போன்ற ஒரு காட்சி. தூளியை ஆட்டும் வேலையை என்னிடம் அசிஸ் டென்டாக இருந்த வசந்திடம் கொடுத்தேன். முதலில் தூளியை வேகமாக ஆட்டியதால் கோப மாகத் திட்டினேன். அடுத்த டேக்கில் மெதுவாக ஆட்டியதால் திட்டினேன். மூன்றாவது டேக்கில் சரியாக ஆட்ட, டேக் ஓ.கே. வசந்தை கூப்பிட்டேன். தூளியைச் சரியாக ஆட்டி, டேக் ஓகே ஆனதற் காக பாராட்டப்போகிறார் என நினைத்து வந்த வசந்தை, ஏன் இதை முதல் டேக்கின் போதே**

மடியில் போட்டு மருந்து கொடுத்தாள். குழந்தையை நிமிர்த்தி நெஞ்சைத் தடவிக் கொடுத்தாள். மீண்டும் கொண்டு வந்து தொட்டிலில் போட்டு ஆட்டத் தொடங்கி னாள்.

ஆறு இருபதைக் காட்டியது கடிகாரம். காலையில் மருந்து கொடுத்த பிறகும் காய்ச் சல் நிற்காமல்... விட்டுவிட்டு... அடித்தது. குழந்தை சோர்ந்து போயிருந்தான்.

"சுந்தர் வந்ததும் குழந்தையை ஆஸ் பத்திரிக்கு கூட்டிக்கிட்டு போகலாம்னு இருந் தது தப்பு. இன்னும் சுந்தரைக் காணலியே...!"

பாரதி அழத்தொடங்கி விட்டான். தோளில்

போட்டுத் தட்டிக் கொடுத்தாலும், தலையைத் தூக்கித் தூக்கி அழுதான். வாசலுக்கும் நடுக் கூடத்துக்குமாக நடந்தாள்.

மணி ஏழாகியிருந்தது.

இனி காத்திருப்பதில் அர்த்தமில்லை. கதவைச் சாத்தி, பூட்டிக் கொண்டு வெளியே வந்தாள். குழந்தையைத் துண்டால் நன்கு போர்த்திக் கொண்டு, இறுக்கி அணைத்தபடி சாலைக்கு வந்தவள்... எதிரே வந்த ஆட்டோவைக் கைகாட்டி நிறுத்தினாள்.

கிளினிக்கில் இன்று நிறையக் கூட்டமிருந்தது.

எல்லோர் கைகளிலும் இருந்து குழந்தைகள் ஏதோ ஒன்றிற்காக அழுதபடி இருந்தன. சும்மா இருக்கிற குழந்தைகள் கூட, அழுகிற குழந்தைகளின் முகம் பார்த்து அழ ஆரம்பித்தன.

'அழாதேடா... செல்லம்',

'அழாதேடா... பட்டு',

'ச்சு...ச்சு...' .... என,



செய்யவில்லை என்று கத்தினேன். இப்படியாக வசந்த் என்னிடம் ஒன்பது வருடங்கள் அசிஸ்டென்டாக இருந்தான் என்பதை விட என் கோபத்தையெல்லாம் பொறுத்துக் கொண்டிருந்தான் என்பதே சரி. இப்போது அவன் கோபத்தை அவனுடைய அசிஸ்டென்கள் பொறுத்துக் கொண்டிருக்கிறார்கள்."

*வசந்தின் திரைக்கதை புத்தகங்கள் வெளியீட்டு விழாவில் டைரக்டர் பாலசந்தர்.*

— சி.எம்.

சமாதான வார்த்தைகள் சுவர்களில் மோதி எதிரொலித்தன.

டாக்டரின் அறையிலிருந்து குழந்தைகளின் 'வீல்'என்ற சத்தம் கேட்டுக்கொண்டேயிருந்தது. இந்தச் சத்தம் சக குழந்தைகளை மட்டுமில்லாமல், பெற்றோர்களையும் அச்சங்கொள்ள வைத்தது.

ஊரிலேயே இந்த டாக்டர்தான் குழந்தை ஸ்பெஷலிஸ்ட். குழந்தைகளுக்கு ஊசி, மாத்திரை கொடுப்பதில் தயக்கமே காட்ட மாட்டார். கை நிறைய மாத்திரைகளை அள்ளித் தருவார். ஒரு குழந்தைக்கு இரண்டு மூன்று ஊசி கூட போடுவார். வெளிநாடுகளில் ஊசி போடுவதே கிடையாதாமே... எல்லாக் குழந்தைகளும் அப்படியொரு நாட்டில் பிறந்தால் எவ்வளவு சந்தோஷப்படும்? ஒரு மாதக் குழந்தைக்குக் கூட ஊசி போடுவது எவ்வளவு வருத்தமானது!

இன்னும் பத்துப் பேராவது அஞ்சலிக்கு முன்னால் காத்திருந்தார்கள். வெளியில் நிற்கலாமெனக் குழந்தையைத் தூக்கிக் கொண்டு, வராண்டாவுக்கு வந்தாள்.

பெயர் தெரியாத பூ ஒன்று மாடித் தொட்டியிலிருந்து கீழே தொங்கிக் கொண்டிருந்தது. வரிசையாய் இரண்டொரு செடிகள். அதில் வண்ணமாய்ப் பூக்கள்.

கட்டடத்தின் வண்ணப்பூச்சு அஞ்சலிக்குப் பிடித்திருந்தது. வீட்டை அழகுணர்ச்சியோடு பார்த்துப் பார்த்து கட்டியிருந்தார்கள். இப்பொழுதெல்லாம் வீட்டின் அழகு குறித்து நிறைய அக்கறை எடுத்துக் கொள்கிறார்கள். சுவர் முழுக்க ரோஸ் நிறத்தில் ஒற்றை ரோஜாவோடு டைல்ஸ் பதித்திருந்தார்கள். அதையே பார்த்தாள். அழுகிற ஒவ்வொரு குழந்தையின் முகமும், ஒவ்வொரு டைல் போல தெரிந்தது.

'ச்சே... இதென்ன கற்பனை...' சிந்தனையை உதறிவிட்டு, உள்ளே வந்தாள்.

பாரதிக்கு மூக்கு ஒழுகியது. பைக்குள் கையை விட்டுத் துண்டெடுத்தாள். துண்டோடு சேர்ந்து ஏதோவொன்று வந்து, கீழே விழுந்தது.

குனிந்து பார்த்தாள். வீட்டுச்சாவி!

'அய்யய்யோ... கிளம்புற அவசரத்தில் பக்கத்து வீட்ல கொடுக்காம வந்துட்டோமே!' வருந்தினாள்.

"பரவாயில்லை... வெளியே நிக்கட்டும். குழந்தையைக் காட்ட இந்த டாக்டர் கிட்டதான் வந்திருப்போம்னு தெரிஞ்சுக்கிட்டு... இந்நேரம் வந்திருக்கலாம்ல. நேரத்துக்கு வீட்டுக்கு வராதவரு வெளியவே நிக்கட்டும்..."

அஞ்சலிக்குக் கை குடைந்தது. இரண்டு மணி நேரமாகக் குழந்தையைத் தூக்கி வைத்துக் கொண்டிருப்பது தேள் கொட்டியது போலக் கடுத்தது. டாக்டரிடம் காட்டிவிட்டு வெளியே வருவதற்குள் மணி ஒன்பதாயிற்று.

இன்னமும் சுந்தர் தன்னைத் தேடி வராதது ஆத்திரமூட்டுவதாயிருந்தது அவளுக்கு.

'காலையிலேயே சாப்பிடாம கோபமாப் போனவன், சாயந்தரமாவது நேரத்தோடு வந்து ஒரு ஆறுதல் வார்த்தையாவது சொல்ல வேண்டாமா...?' நினைக்க நினைக்க எரிச்சல் வந்தது.

ஆட்டோவில் வரும்போதே கவனித்தாள். வீடு இருட்டாயிருந்தது.

வாசலில் யாரோ நிற்பது போன்ற நிழலுருவம் தெரிந்தது.

(தொடரும்)



# குல்லு மல்லு

—கதிர்


என்னைத் தாலாட்ட வருவாளா?
ஹாய் மல்லு...




எப்படியிருக்கு இந்த கைத்தறி காஸ்ட்யூம்?


டிரஸ் எல்லாம் நல்லாயிருக்கு. ஆனா மாட்டியிருக்கிற ஹேங்கர்தான் சரியில்லை.


ஏன் பேசமாட்டே? நான் போட்டி ருக்கிற டிரஸ் ஸாலே ஒரு நெசவாளியோட ஒரு நாள் வயிறு நிறையுது.


நீ போட்டிருக் கிறதைப் பார்த்தா அரை நாள் வயிறு தான் நிறையும் போலிருக்கு.
இதுலே பத்து எபிஸோடுக்குத் தாங்குமே!
இவ்வார டைட்டில் மல்லுவோட ஜொள்ளு...

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / PMG (CCR) 572 / 03 - 05*
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358 * Registered as a Newspaper in Srilanka